# பதிப்புரை

திருமதி ஹெப்ஸிபா ஜேசுதாசனவர்களின் முதற் படைப்பான "புத்தம் வீடு" அதன் தமிழ் நடைக்காக மிகுந்த சர்ச்சைக் குள்ளாகியது. சர்ச்சை வளரவே ஆசிரியரின் பெயரும் பலருக்குத் தெரியலாயிற்று. முதல் நாவலிலே பல எழுத்தாளர்களின் கவனத்தையும் கவர்ந்த ஆசிரியை திருமதி ஹெப்ஸிபா அவர்கள்தான்.

இந்த டாக்டர் செல்லப்பா புத்தம் வீட்டின் இரண்டாம் பாகம் போன்றது. புத்தம் வீட்டில் வரும் ஒரு சிறு பாத்திரமான செல்லப்பன்தான் இந்நாவலில் டாக்டர் செல்லப்பாவாக வளர்ச்சியுற்று ஒரு பெரிய கதாபாத்திரமாக விளங்குகிறுன்.

கதை நிகழ்ச்சிகள் நாகர்கோவில் வட்டாரத்திற்கு வெளியே நடந்தாலும் பாத்திரங்கள் யாவும் நாஞ்சில் நாட்டினரே. நாவலின் நடையிலும் நாஞ்சில் நாட்டு வழக்குகள் மிகுந்தே உள்ளன. கதை வேலூரிலும் மதுரையிலும் நடக்கும்போது வடதமிழ் நாட்டுப் பாத்திரங்களோ, பாண்டி வள நாட்டுப் பாத்திரங்களோ வந்து தமிழ்ப் பேச்சு வழக்கில் மாற்றங்கள் ஏற்பட்டு விடாமல் ஆசிரியர் மிக கவனமாகப் பார்த்துக் கொண்டிருக்கிறுர்.

இந்த நாவலில் டாக்டர் செல்லப்பா ஒருவர் தான் முக்கிய பாத்திரம். அவர்தான் கதையின் எல்லாமாகவும் விளங்குகிறுர். அவரைச் சுற்றியே கதை

நடக்கிறது. ஆயினும் ஒரே காட்சியில் வந்து மறைந்து விடுகிற எமிலியும் அவள் தாயாரும் ஒரு காட்சியிலேயே தங்களின் முழு உருவையும் காட்டி விடுகிறார்கள்.

உண்மையின் பிரதிபலிப்புத்தான் இலக்கியம் என்று நம்புகிறவர்களுக்கு இந்த நாவல் ஒரு சிறந்த விருந்தாகும்.

தொடர்ந்து தமது நூல்களை வெளியிடும் வாய்ப்பினை எங்களுக்களித்து வரும் ஆசிரியை அவர்கட்கு எங்கள் மனப்பூர்வமான நன்றி.

சென்னை
4-7-67

தமிழ்ப் புத்தகாலயத்தார்

# முன்னுரை

புத்தம் வீட்டுக்குப் பிறகு என்ன என்ற கேள்வி என் மனத்தில் எழுந்தது. வாழ்க்கை ஒரு திருமணத்தோடு முடிந்து விடுவதில்லை. வருஷங்கள் ஓடிக்கொண்டே இருக்கின்றன. அல்லது மனிதன் சூழ்நிலையிலிருந்து சூழ் நிலைக்குத் தாவுகிறான். லிஸியையும் தங்க ராஜையும் பனைவிளையிலிருந்து வெளியே கொண்டு வருவதற்கில்லை. அவர்கள் விவசாயத்துக்கும், பழமைக்கும் கட்டுப்பட்டவர்கள். அங்கே அவர்கள் போராட்டங்கள், பிரச்சினைகள் அவர்களுக்கு. ஆனால் படிப்பில் துடியாக இருக்கும் தங்கராஜ் தம்பி செல்லப்பனின் விஷயம் வேறு. அவன் நாகரிக உலகத்தில் பிரவேசிக்க வேண்டியவன்.

பனைவிளை வாசனையை விட்டு, நாகரிக உலகத்தில் புகுந்த பலரையும் திரை மறைவில் இருந்து கவனித்திருக்கிறேன். புது உலகத்தின் போராட்டங்களும் புதுரகந்தான். எதிர்த்து வெற்றி பெற்ற வெகு சிலரை அறிவேன். பெரும்பான்மையோரும் தோல்வியுற்றவர்கள். தங்கள் தனித்துவத்தை. ஆளத்துவத்தை, இழந்தவர்கள். புது உலகச் சூழலில் விழுந்து விட்டவர்கள்.

செல்லப்பன் குறுகுறுத்த கண்களும், நிமிர்ந்த தோற்றமும், படிப்பில் மிகுந்த ஆர்வமும் உள்ளவன் ஆனபடியால் 'முன்னுக்கு' வரவேண்டியவன். பாசமுள்ளவன்; பொறுப்புள்ளவன்; ரசிகன்; ஆண்மைக்கே உரிய தன்மானமும் கௌரவமும் உடையவன். என்றாலும் அவனிடம் லட்சிய நோக்கை நான் காணவில்லை. கலையும், பாசமும், உலகமயக்கமும் ஆட்டி வைக்கும் அவனை, புதுமை உலகத்திற்குள் அனுப்பி வைத்து, அதன் விளைவுகளைக் கவனிக்க விரும்பினேன். கண்டு மிக வருந்தவும் செய்தேன். அருமையான ஒரு உயிர், அநியாயமாக நஷ்டமாகிவிட்டது என்ற உணர்ச்சி என்னுள் பரவி நின்றது. அதன் பயன்தான் 'டாக்டர் செல்லப்பா.'

இந்த நாவலில் என் கணவர் எனக்கு அளித்த ஊக்கம் அதிகம். 'புத்தம் வீடு' நாவலில், பெயர் சூட்டினதோடும், ஒருசில பிழை திருத்தங்களோடும், அவர்கள் கை நின்று விட்டதெனலாம். ஆனால் 'டாக்டர் செல்லப்பா', அவர்கள் கண்காணிப்பிலேயே வளர்ந்திருக்கிறார். ஒரு சிறு உதாரணம்: செல்லப்பாவும் பொன்னையாவும் பிரிந்ததற்குப் போதிய காரணம் இல்லையென்று, கதைப் போக்கிலிருந்த ஒரு இடைவெளியைச் சுட்டிக் காட்டி, நிரப்பச் செய்தார்கள். இதுபோன்ற பல இடங்களில், என் கண்ணுக்குத் தப்பிவிட்ட பிழைகளையோ, குறைகளையோ, முக்கியமாக அவர்கள் எடுத்துக் காட்டின படியால்தான், இந்த சிருஷ்டியை, என் திருப்திக்கேற்ப, பூரணப்படுத்துவதற்கு முடிந்தது.

'புத்தம்வீடு' ஒன்றரை மாதத்துக்குள் உருவான கதை. 'டாக்டர் செல்லப்பா' ஒன்றரை வருஷத்தையே எடுத்துவிட்டார். சிருஷ்டியின் கால வரம்பு மட்டும் ஒரு கதையின் தரத்தை நிர்ணயிக்க இயலாது என்பதை அறிவேன். கதையின் கருப்பொருள் ஜீவன் பெற்று வந்திருக்கிறதா என்பதுதான் கேள்வி. அதற்குத் தீர்ப்புச் சொல்லவேண்டியவள் நான் அல்ல.

நூலே அழகாக அச்சிட்டு வெளியிட்டிருக்கும் தமிழ்ப் புத்தகாலயத்தாருக்கு என் நன்றி.

ஹெப்ஸிபா ஜேசுதாசன்.

# டாக்டர் செல்லப்பா

---

## முதல் அத்தியாயம்

மருத்துவக் கல்லூரி ஆஸ்பத்திரி அது. தமிழ் நாட்டுப் பஞ்சைகளின் நடுவில், குப்பை கூளங்களின் மத்தியில், ஜன்னலின் தேவையை அவ்வளவாக உணராத அவர்கள் வீடுகளின் இடையில், நண்பகலில் வானம் தீயைக் கொட்டுகிற அந்தப் பழம் பெரும் வேலூர் நகரில், பொழில்களும் மாளிகைகளுமாக, கண்ணுக்கும் இதயத்துக்கும் குளிர்ச்சி தரும் இடமாக அமைந்திருக்கிறது அது. பார்த்தால் பணத்தின் செருக்கு விளங்குகிறது. அறிவின் மமதை பீடு நடை போடுகிறது. கழுத்தைச் சுற்றி ஸ்டெதாஸ்கோப் ஊசலாட, அழகாக சூட்டும் கோட்டும் மாட்டிக்கொண்டு, இளைஞர்கள் வலம் வரும் அரண்மனை அது. அவர்களுக்குச் சிறிதும் சளைத்தவர்கள் அல்ல என்னும்படி, வண்ணாத்திப் பூச்சி தன் சிறகுகளை மறைக்க முயலும் பாவனையில், நாரீமணிகளும் தம் அழகிய வண்ணச் சேலைகளுக்குமேல், நீண்ட வெள்ளைக் கோட்டுகளை அணிந்துகொண்டு, பூட்ஸ் 'டக் டக்' என்று ஒலிக்க, அங்குமிங்கும் நடமாடுகிறார்கள். இவர்களிடையே இன்னும் ஓர் இனம்: தேவ கன்னிகைகளோ

இவர்கள்! தூய வெள்ளாடை அணிந்து, மெல்லிய சேலையின் முந்தானையைக் காற்றில் பறக்காதவாறு இடுப்பில் செருகிக் கொண்டு அப்படியும் இப்படியும் இந்த நர்ஸ்மார்கள் வளைய வருவதே ஓர் அழகு. அவர்கள் மேல்மாடியிலிருந்துதான் இறங்கி வருகிறார்களா, அல்லது வான லோகத்திலிருந்து இறங்கி வருகிறார்களா?

புதிதாக மருத்துவக் கல்லூரியில் சேர வந்த இளைஞன் அவன். அவனும் தன் வாழ்நாளில் என்றுமில்லாதபடி 'டீக்' காக உடையணிந்திருக்கிறான். கல்லூரியில் ஒருபடி தாண்டி இங்கு வந்தவன்தான். ஆனால் நாகர்கோவிலில் படிக்கும் போது, தன் பூர்வீகத்தை ஒட்டியே, சற்று அடக்கமான உடை அணிந்திருந்தான். 'சூட்' வேண்டுமென்று வீட்டில் ரகளை போடவுமில்லை. யாரும் வலிந்துகொடுக்க முன்வரவு மில்லை. ஆனால் மெடிக்கல் காலேஜ் என்றால் இலேசா? அது வும் வேலூர் மெடிக்கல் காலேஜ். அம்மாடி, இங்கே ஒரு இடம் பிடிப்பதற்கென்று அண்ணன் அலைந்த அலைச் சல்! யார் யார் காலைப் பிடித்தோ இடம் வாங்கியா யிற்று. இனி இந்த சூட்டும் கோட்டும் வாங்குவது தானா பிரமாதம்? இடது கையில் கட்டியிருக்கும் 'வாச்' மாத்திரம் கொஞ்சம் மட்டம். இரண்டு மாசங் கழித்து 'ஸ்விஸ் வாச்' ஒன்று வாங்கினால் போகிறது.

இப்போதெல்லாம் அவனுக்கு ஒரே எண்ணந்தான். மருத்துவத் துறை: ஜீவ—மரணப் போராட்டம். இலகு வில் தாண்டக்கூடிய படிப்பல்ல என்று அவன் கேள்விப் பட்டிருக்கிறான். ஆனால், அதையும் அவன் விட்டு வைக்கவா போகிறான்? அவன் பூர்வீகம் எப்படிப்பட்டதா யிருந்தாலும் நாகர்கோவிலில் தலைமுறை தலைமுறையாகப் படிப்பு வாசனையில் வளர்ந்த இளைஞர்களை அவன் மட்டந்தட்டி வைக்கவில்லையா? இங்கே உள்ள குருத்துகள் மட்டும் எந்த மூலைக்கு? படிப்பை எண்ணி அவன் மனந்தளரவில்லை. அவன் விரல்கள் நோயாளிகளின் நாடியைப் பார்க்கத் துடித்தன. இதயம் மருத்துவ வானில் எழும்பப் படபடத்தது.

பிரும்மாண்டமான அந்தக் கட்டிடத்தின் அடித்தளத்தில் ஒவ்வொரு அறைக்கும் முன்பாக ஒவ்வொரு பேராசிரியரின் பெயர் பித்தளைத் தகட்டில் பொறிக்கப்பட்டிருக்கிறது. வாசலிலிருந்து நேரே உள்ளுக்கு வரும்போது எதிரில், ஓரிரு வேத வசனங்கள் கண்களில் படுகின்றன. அந்த வசனங்களும் ஒரு பக்கமாக அமைந்திருக்கும் பிரார்த்தனைக் கூடமும் இதைக் கிறிஸ்தவ மருத்துவ நிலையம் என்று நினைவுறுத்துகின்றன. இடையிடையே ஓரிரு வெள்ளை முகங்களும் காணப்படுகின்றன. நோயாளிகளைப் பார்க்கும் போது அந்த இளம்மாணவனின் உள்ளம் 'திக்' கென்கிறது. நோய்தான் எத்தனை வகை! சிலர் பெஞ்சிகளில் கிடந்து நடுங்குகிறார்கள். சில தாய்மார்கள் தங்கள் குழந்தைகளைக் கைகளில் அணைத்துக்கொண்டோ, தோள்மேல் சார்த்திக் கொண்டோ, ஆஸ்பத்திரி தெய்வத்தின் கருணைக்காகக் காத்து நிற்கிறார்கள். புண்ணில் சீழ்வடிய நொண்டி நொண்டி வருபவர்கள், பரிதாபகரமாக வயிறு உப்பிப் புடைத்தவர்கள், இரத்தமயமே அற்றுப் போனவர்கள், கன்னப் புற்றைக் கட்டுகளால் மறைத்துக்கொண்டு சோர்வோடு எதற்கோ காத்து நிற்பவர்கள், இப்படிப் பலர். இவர்களுக்கிடையே அடிக்கடி உருளை நாற்காலிகளை 'வார்டர்'கள் உருட்டிக்கொண்டு போகிறார்கள். லோஷன் நாற்றமும், சீழ்நெடியும், தும்மலும், இருமலும், முனகலுமாக அந்த இடம் அமர்க்களப்படுகிறது. அப்பப்பா! ஆஸ்பத்திரி ஒரு நரகந்தான். எதிரும் புதிருமாக இருக்கும் அந்த அறைகளில் மட்டும் மின்சார விசிறிகள் சுழன்றுகொண்டிருப்பது, அந்த அடைத்திருக்கும் அரைக்கதவுகளுக்கு மேல் தெரிகிறது. உள்ளே இருக்கும் பேராசிரியர்கள் அவனைப் பொறுத்த வரையில் ஒரு மர்மமாகவும் ஆச்சரியமாகவுந் தான் இருந்தார்கள். அவர்களை ஏதோ பார்த்திருக்கிறான். ஆனால் அவர்களைப் பற்றிக் கேட்டதுதான் அதிகம்.

இரண வைத்தியத்துறைப் பேராசிரியர் ஒரு 'இஞ்சி' என்று சொன்னார்கள். குட்டையாக, இடது கையில் ஒரு சிகரட்டுடன், நெருங்குகிறவர்கள் மனம் பனிக்கட்டியாக

உறைந்து போகக்கூடிய பார்வையுடையவர். மாணவத் தோழர்கள் துள்ளித் திரியும் பருவம் கடந்தும் கடவாமலு மிருப்பவர்கள். ஆசிரியர்களைக் கண்டால் கொஞ்சம் கிள்ளி விளையாட்டுப் பார்க்கலாம் என்ற எண்ணமுடையவர்கள். ஆனால் இங்கே அந்தப் 'பாச்சா' ஒன்றும் பலிக்காது. இந்தப் பேராசிரியர் ஒன்றும் அப்பாவி அல்ல. காரியத்திலும் கை வைத்து விடுவார் என்று—பொய்யோ மெய்யோ—பெயர் வாங்கினவர். பிறகு மாணவர்கள் ஒடுங்கிப் போகவேண்டியதுதானே!

பிள்ளை வைத்தியத்துறைப் பேராசிரியர் மாணவர்களுடன் மனம் விட்டுச் சிரித்துப் பேசிப் பழகக்கூடியவர். ஆனால் இந்த மாணவர்கள் பொல்லாதவர்கள். அவர்களை அப்படி ஒன்றும் மழுப்பிக் கண்ணில் பொடியைத் தூவிவிட முடியாது. மாணவர்களைவிட மாணவிகளிடமே அதிகம் சிரித்துப் பேசிப் பழகுகிறார் என்பது அவர்களிடையேவழங்குகிற ஒரு பேச்சு. அதையொட்டிப் பல கதைகளையும் அவர் தலையில் கட்டியிருக்கிறார்கள். அவற்றில் கொஞ்சம் உண்மையும் இருக்கலாம். யாருக்குத் தெரியும்?

புகழ் பெற்ற லேடி டாக்டர்களும் இருக்கிறார்கள். அவர்களும் மாணவர் கற்பனைகளுக்குத் தப்பவில்லை. கொஞ்சம் அழகோ, சகஜமாகப் பேசும் இயல்போ இருந்துவிட்டால் போதும். மாணவர்களுக்கு வேலை என்ன? ஓய்வு நேரங்களில் வம்பளக்க உதவுகிறது.

புற்றுநோய் நிபுணரையும் மாணவர்கள் விட்டு வைக்கவில்லை. கான்சர் வார்டில் மூன்று நான்கு ரேடியம் ஊசிகள், ஒவ்வொன்றும் எத்தனையோ ஆயிரம் விலை பிடிப்பவை. எங்கேயோ ஒரு ஆஸ்பத்திரியில் இப்படி ஒரு ஊசி களவு போய்விட்டதாகப் பத்திரிகையில் செய்தி வந்தால், அதற்கு இவர் என்ன செய்வார், பாவம்?

இந்தக் கூட்டத்தில் ஒன்றிரண்டு அப்பாவி டாக்டர்களும் இருக்கிறார்கள். தெய்வ பக்தி உள்ளவர்களாம்.

ஜெபம் செய்துகொண்டுதான் ஆபரேஷன் தொடங்குகிறார்களாம், உபதேசிமார்கள்! அவர்கள் கடந்து போகும்போது அவனுக்கும் உதட்டைப் பிதுக்கி, நாடியை ஒரு வெட்டு வெட்டலாம் போலிருக்கிறது.

இப்படிப் பல எண்ணங்களோடு, அந்தப் புதுமாணவன் பேராசிரியர்கள், டாக்டர்கள் ஆகியவர்களின் கதவுகளை ஆராய்ந்துகொண்டு, அவனுக்கு இது போன்ற செய்திகளையெல்லாம் ஏற்கனவே அறிவித்திருந்த ஓரிரு உடன் மாணவர்களுக்காகக் காத்து நின்றான். மேல் வகுப்பு மாணவர்கள் அவனை ஏற இறங்க, அலட்சியமாகப் பார்த்துக்கொண்டு கடந்து சென்றார்கள். அப்படி என்ன அவன் முகத்தில் பட்டிக்காட்டான் என்று எழுதியா வைத்திருக்கிறது? அவனும் பதிலுக்கு அதே அலட்சியப் பார்வையை வீசி விட்டு, தன் உடையையும் பளபளக்கும் புதிய பூட்சுகளையும் இலேசாகக் கவனித்துக் கொண்டான். மனதில் ஒரு திருப்தி. இனிமேல்தான் தன் வாழ்க்கையின் முதல் அத்தியாயம் தொடங்கப் போகிறது என்ற எதிர்பார்ப்பு. வாசலில் கண்.

வந்து விட்டான்கள். முதலில் டேவிட் நாகர்கோவில் ஸ்காட் கிறிஸ்டியன் காலேஜில் பழக்கமானவன். நாகர் கோவில்காரன். அவனுக்கும் தனக்கும் காத தூரம். அவனோ டாக்டர் மகன். மாடிவீட்டுப் பிள்ளை. அதற்கு ஏற்றாற் போல கம்பீரமான தோற்றம். தானோ அண்ணன் தயவில் படிக்கிறவன். தன் தந்தையோ—அவருக்கு அது முடியும்—அவர் மூத்த மகன் கொடுக்கத் தயாராக இருந்த பணத்தையும் மருமகள் வீட்டுப் பணமென்று உதறிவிட்டு, வறுமையுந் தானுமாக வாழ்ந்து வருகிறவர். "நீ வேணுமின்னா வேண்டிக்க பிலே!" என்று சொல்லிவிட்டார். அவன் வாங்கவும் செய்தான். வேறு வழி?

பின்னால் வருகிறவன் பொன்னையா. மெடிக்கல் காலேஜுக்கு வந்தபின் அறிமுகமானவன். திருநெல்வேலி ஆசாமி. தன்னைப்போல ஒரு கிராமவாசி. குடும்பங்கூட ஏழைக் குடும்பந்தான். படிப்புக்குக் கெட்டி, அதனால்

கல்யாணச் சந்தையில் விலைபேசப்பட்டு, டாக்டருக்குப் படிக்க வந்திருக்கிறான். ஆள் அப்படி ஒன்றும் அழகில்லை. உயரம் என்றோ, பருமன் என்றோ சொல்ல முடியாது. தமிழ் நாட்டு வெயில் அவன் மாநிற மேனிக்கு ஒரு கருமை மெருகு கொடுத்திருக்கிறது நடையில் ஒரு துள்ளல்; பேச்சில் சிரிப்பு; களங்கம் காணமுடியாத முகம்; எப்போதும் ஒரு உற்சாகம்; இவைகள் அவனை ஒரு இனிய தோழனாக்கி வைத்திருந்தன. ஒரு வகையில் பார்த்தால், இந்தச் சில நாட்களுக்குள்ளேயே, டேவிட்டை விடவும் பொன்னையா தான் நெருங்கிய நண்பனாகியிருந்தான். டேவிட் பெரிய வீட்டுப்பிள்ளை என்ற தோரணையைக் காட்டிக் கொள்ளா விட்டாலும் அதையிட்டு ஒரு பிளவு இருவருக்குமிடையே இருக்கத்தான் செய்தது.

வாசலில் ஏறியதும் பொன்னையா தன் முப்பத்திரண்டு பற்களையும் காட்டிக்கொண்டு வந்தான்.

“பிலே செல்லப்பா!”

முந்தின நாள், செல்லப்பன் தன் சொந்த ஊர்ப் பேச்சை அம்பலப்படுத்தியதன் விளைவு இது.

செல்லப்பன் முஷ்டி முன்னால் நீட்டிக்கொண்டு வந்தது. உடன் மாணவர்கள் பலருக்கு மரியாதை கற்பித்திருக்கும் முஷ்டி அது.

“என்ன மிஸ்டர்! பல்லு கொஞ்சம் கூடுதலாப் போச்சு, இல்லையா? அதுக்குப் பல் டாக்டர் கிட்டெ ஒண்ணும் போக வேண்டாம்.” சிரித்தபடி வந்த பதில்தான்.

“மிஸ்டர், மிஸ்டர். டாக்டர் செல்லப்பன்.”

பின்னர் கைகுலுக்கு, அர்த்தமில்லாத சிரிப்பு, சந்தோஷம். இளைஞர்கள் அல்லவா?

டேவிட் ஒரு கௌரவப் புன்னகையோடு விஷயத்துக்கு வந்தான்.

“கிளாஸ் எங்கே தெரியுமா, மிஸ்டர்?”

"மூன்றும் மாடி மிஸ்டர்; ரூம் நம்பர் டென்." மூவரும் துள்ளலும் பாய்ச்சலுமாக மாடியேறிப் போனார்கள்.

அந்தச் சில நாட்கள்:

டாக்டராவது அத்தனை இலகுவான காரியமா? நாடி பார்ப்பதோடும் காய்ச்சல் அளப்பதோடும் அது நின்று விடாது. மருந்து வகையறுக்களை மனப்பாடம் செய்வதாலும் ஆகிவிடாது. அழகாகப் படம் போட்டுவிட்டாலும் போதாது.

இவையெல்லாவற்றிலும் செல்லப்பன் கைதேர்ந்தவன் தான்.

மனத்தைக் கல்லாக ஆக்கிவிட வேண்டும். கையை இரும்பாக மாற்றி அமைக்க வேண்டும். பேராசிரியர் முறைத்துப் பார்த்தால் அந்தப் பார்வையைத் தாங்கிக் கொள்ள வேண்டும். நோயாளி ஒருவரின் மரணப்படுக்கை அண்டையிலும் கண்ணீர் வராமல் தன் மானத்தைக் காப்பாற்ற வேண்டும். புன்னகை வேண்டும்; கடுமை வேண்டும்; இனிய பேச்சு வேண்டும்; மன நெகிழ்ச்சி கூடாது. முதல் பிரேதப் பரிசோதனை நடந்த சமயம் செல்லப்பன் 'நெஞ்சு 'திக்திக்' என்று அடித்துக் கொண்ட வேகம்! உடன் மாணவர்களின் ஏளனப் பார்வையை உணர்ந்தவனாய் அந்த இக்கட்டான நிலைமையில், விழித்துக் கொண்டான்.

அறுவை நிபுணர், அவன் நிலையை உணர்ந்து, சிறிதேனும் இரக்கம் இல்லாத குரலில், "என்ன மிஸ்டர்! அழப் போறீரா?" என்று தமிழிலேயே கேட்டுவிட்டார். அதைத் தொடர்ந்து, 'களுக்' என்ற மெல்லிய ஒலி. அந்தக் குழுவிலுள்ள பெண்களில் கைதேர்ந்த ஓரிருவராக இருக்க வேண்டும்.

"நோ ஸார்" நடுக்கம் நின்றபாடில்லை.

"கெட் அவுட்!"

அந்தக் கண்டிப்பான கட்டளைக்குப் பிறகு அங்கே நிற்க உரிமை ஏது?

அந்த உரிமையைப் பெற்றுக் கொள்ளாவிட்டால் டாக்டர் ஆவதுதான் எப்படி?

மாணவர் விடுதிக்கு வந்தபோது, அன்றைய நிகழ்ச்சியை நேரில் கண்ட ஒரு சில மாணவர்கள் அரைச் சிரிப்புச் சிரித்துக்கொண்டு போனார்கள்.

அவனுக்குக் கோபம் பொத்துக்கொண்டு வந்தது. அறைக்குள் சென்று, மேசைமேல் கைகளை நீட்டிப் போட்டுக் கொண்டு, முகங் கவிழ்ந்து கிடந்தான். தோல்வியின் உச்ச நிலை. வியர்த்துக் கொட்டிற்று.

"மிஸ்டர் பனைவிளை!"

திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். பொன்னையாவின் சிரித்த முகம். பின்னால் டேவிட்.

"என்ன மிஸ்டர் நடந்தது? நாகர்கோவிலில் காட்டின வீரம் எல்லாம் எங்கே போச்சு?" கேட்டவன் டேவிட்.

"ஷட் அப்."

பொன்னையா ஒரு ஸ்டூலை இழுத்துப் பக்கத்தில் போட்டுக் கொண்டான். மெதுவாகத் தன் கையைச் செல் லப்பன் தோள்மேல் வைத்தான். மறுகணம் அந்தக் கை மேசைமேல் பொத்தென்று வந்து விழுந்தது.

"ஓஹோ. மிஸ்டருக்கு ரொம்ப ரொம்பக் கோபம். வாரும் வேய், ஒரு கப் காப்பி சாப்பிட்டுக்கிட்டு வரலாம். கோபமெல்லாம் எங்கே போகுது பார்ப்பம்."

மறுபடியும் கை தோள்மேல் ஏறிற்று. இந்தத் தடவை அது வந்து விழுந்த வேகத்தில், பாவம், அதன் சொந்தக் காரன் முகத்தில் இருந்த சிரிப்பு எங்கு போயிற்றோ தெரி யாது. அதற்குப் பதிலாக அங்கு அசடு வழிந்தது.

விஷயம் முற்றி விடாமலிருக்க டேவிட் பொன்னையா வைப் பார்த்து, "வாங்க மிஸ்டர். கொஞ்சநேரம் இப்படித்

தான் இருக்கும்'' என்று சொல்லி அவன் கையைப் பிடித் திழுத்தான்.

பொன்னையா, போக எழுந்தவன், திடீரென்று புத்தக அலமாரிக்கு நேரே பாய்ந்தான்.

''ஓஹோ, இங்கே இது எப்படி வந்தது?'' என்று சொல்லிக்கொண்டு, ஒரு புல்லாங்குழலைக் கையில் எடுத்து வந்து, மறுபடியும் ஸ்டூலிலேயே உட்கார்ந்து கொண்டான்.

அந்த அறையை இனிய வேணுகானம் நிரப்பிற்று. பொன்னையாவின் கருமையான விரல்கள் குழலின் துளைகள் மேல் படபடத்தன. சுரங்கள் சிறகடித்துக் கொண்டு எழும்பின.

டேவிட், பொறுமை இழந்தவனாய், அவனைத் தொட்டு ''வாங்க மிஸ்டர்'' என்றழைத்தான்.

ஆனால் செல்லப்பன், மேசைமேல் போட்டிருந்த கையை எடுத்துக்கொண்டு நிமிர்ந்து உட்கார்ந்தான். அவன் விழிகள் எங்கேயோ பறந்து செல்லும் சுரகணங்களின்மேல் ஒன்றியிருந்தன.

பொன்னையா நிறுத்தினவுடன் செல்லப்பன், ''என்ன மிஸ்டர், இது எத்தனை நாளாய்?'' என்றான்.

''நில்லுங்க சொல்றேன். ஒண்ணு, ரெண்டு, மூணு, இல்லை நாலு ஜென்மங்களுக்கு முந்தி, அஞ்சாவது ஜென்ம பாடம். பழங்கணக்கு, மிஸ்டர், பழங்கணக்கு!''

''கேட்ட கேள்விக்கு யார் பதில் குடுக்கிறாங்க''

''இல்லை மிஸ்டர். சங்கீதத்தில் நான் ஒரு ஒட்டுப் பொறுக்கி மட்டும். ஆனால் புல்லாங்குழல் ஒண்ணு என் கைவசம் வந்து வருஷம் அஞ்சாகுது.''

''அப்படியா சங்கதி?'' செல்லப்பன் விழிகள் சுடர் விட்டன. ''நான் இதைப் போன மாசந்தான் வாங்கினேன். எழவு, சத்தம் சரியா வருதில்லே. ஆனால், இங்கே

பாருங்க, என்று சொல்லிக்கொண்டே எழுந்து போய் ஒரு 'மவுத் ஆர்கனை' எடுத்து வந்தான்.

"இது என் பழைய சொத்து."

உடனே டேவிட், "சரிதான். சங்கீத வித்வான்கள் சபையில், பாவம் என்னைப்போலுள்ள டாக்டர்களுக்கு இடமில்லை. நாகர்கோவில் ஹாஸ்டலில் இந்த 'மவுத் ஆர்கன்' தொந்தரவுதான் பெரிய தொந்தரவாப் போச்சு. நீங்க ஒருவரை ஒருவர் நல்லா 'போர்' அடியுங்க. என் மனமார்ந்த ஆசிகள். போய் வர்றேன் மிஸ்டர்! ஸலாம்!" என்று கிண்டலாகக் கூறிவிட்டு எழுந்தவன், தனது இடது கையை லாவகமாக ஒரு திருப்புத் திருப்பி, பளிச்சிட்ட தன் பொன் கைக் கடிகாரத்தின்மேல் ஒரு பார்வை விட்டான்.

"அடடே! இங்கே சங்கிதக் கச்சேரி முடியுமுன் சாப்பாட்டு வேளை ஆகிவிட்டதே! வாங்க மிஸ்டர். அவங்க சாம்பாரும் புளிச்ச மோரும்! நமக்காகக் காத்திருக்குது" என்று இருவரையும் இரு கைகளால் பிடித்து இழுத்தான்.

"மிஸ்டர், நீங்க பணக்காரப் பிரபு ஆச்சி. நமக்கு சாம்பாரும் புளிச்ச மோருந்தான் அமுதம்" என்று செல்லப்பன் அரைகுறை மனத்தோடு எழுந்தான். பொன்னையா புல்லாங்குழலை மிடுக்காக இடுப்பில் செருகிக்கொண்டு அவர்களைப் பின்தொடர்ந்தான்.

"வாங்க மிஸ்டர். நான் கத்துக் குடுக்கிறேன். நீங்க என் சிஷ்ய பக்தனுக்கும்" என்று செல்லப்பன் முதுகில் தட்டிக் கொடுத்தான் பொன்னையா.

சாப்பாட்டு அறை ஒரு பெரிய கூடம். நீண்ட மேசைகளுக்குமுன் நாற்காலிகளில் உட்கார்ந்துகொண்டு, வெள்ளைக்காரர் மாதிரிதான் சாப்பிட்டார்கள். சாப்பிடும்போது ஒரே இரைச்சல். சாப்பாடு நன்றாகத்தான் இருந்தது. ஆட்டுக்கறியின் மணம் எட்டுத் திக்கிலும் வீசியது. ஆனால் டேவிட்டைப்போல் முகத்தைச் சுளித்துக்கொண்டு பெரிய வீட்டுப் பிள்ளைகளாகச் சாப்பிட்டவர்களும் இருக்கத்தான்

செய்தார்கள். செல்லப்பன் சாப்பாட்டு விஷயத்தில் விட்டுக் கொடுப்பவன் அல்ல. ஆனால் பொன்னையாவுக்குச் சாப்பாட்டைவிட அதைப்பற்றிய ஆராய்ச்சியில்தான் அதிக ஈடுபாடு.

சாப்பாடு முடிந்ததும் அவன் செல்லப்பனிடம், "என்ன மிஸ்டர், இனி எத்தனை பிணத்துக்கு வேண்டுமானாலும் பதில் சொல்லலாம். அப்படித்தானே?" என்றான்.

செல்லப்பனின் வலது கை குழாயடியில் தண்ணீர் அபிஷேகம் பெற்றுக் கொண்டிருந்தது. என்றாலும், சிரிப்பை வரவழைத்துக்கொண்டு, இடது கையைப் பின்னால் வீசினான்.

"யார்டா இவன்!"

பொன்னையா சட்டென உடலை வளைத்து, அந்தக் கை விச்சுக்கு மரியாதை செய்யும்படியாக ஒதுங்கிக் கொண்டான்.

அன்று பிற்பகலில் இருவரும் பூதக் கண்ணாடியில் ஏதோ கிருமிப் பரிசோதனை செய்து கொண்டிருந்தார்கள். சிறு கண்ணாடித் துண்டில் துளியாக எதையோ தொட்டு வைத்து, கருவியின் அடியில் தள்ளிக் கொடுத்தான் செல்லப்பன். மற்றவன் குனிந்து, அதை ஆராய்ந்து கொண்டிருந்தான்.

இள மஞ்சள் நீரில் ஏதேதோ சிவப்பாகவும் வெள்ளையாகவும் மிதந்து வருவதும் போவதுமாக இருந்தது. தண்ணீரில் எண்ணெய் படர்வதுபோல வட்டமாகவும் தட்டையாகவும் இருப்பவை, கையும் காலும் நீட்டியும் விரித்தும் உருமாறுவதைப் பார்க்க வேடிக்கையாக இருந்தது. அவற்றின் இடையே காணப்படுவது கட்டெறும்பை நினைவுறுத்தும் ஏதோ ஒன்று; அல்ல பல.

பொன்னையா ஒரு கண்ணை அந்தக் கருவியின் மேல் சேர்த்து வைத்துக்கொண்டு, மறு கண்ணை அடைத்து, முகத்தைச் சுளித்துக்கொண்டு குனிந்து நின்றான்.

"என்ன மிஸ்டர், மூஞ்சி ரொம்ப அழகா இருக்கு?"

"மிஸ்டர், மிஸ்டர்! இங்கே துள்ளியில்லா விளையாடுது!"

"யார் குழந்தைங்க?"

"அப்படி வாங்க வழிக்கு. நேற்று 2-ம் ஃபீவர் வார்டில் தெற்கு மூலையில் கிடந்த பேஷண்ட் ஞாபகமிருக்கோ?"

"அதுதான் ராத்திரி குளோஸாகிப் போச்சே!"

"ஆச்சு, ஆச்சு! இந்தா, இந்தக் கேஸ் ஷீட்டை நல்லாப் படிச்சுப் பாருங்க."

"அடடே! அந்த ரத்தம் தானா? 'வைரஸ்' நல்லா ஜீவனோடே இருக்கு!"

"அந்த மனுசன் அருமையா வயித்திலே வச்சு வளத்த பிள்ளைங்க! இல்லையா மிஸ்டர்? அவன் இப்ப எப்படி இருக்கிறான்னு நெனச்சுப் பாக்றேன்."

"சீ மூதி!"

"மிஸ்டர், ஜென்டர் தப்பு, தப்பு!"

பிறகு வேறு பல கண்ணாடித் தட்டுகளை எடுத்து ஆராய்ந்தார்கள். நோட்டுகளில் குறித்துக் கொண்டார்கள். நேரம் போவதை உணரவே உணராமல் படித்தார்கள். புத்தகங்களைப் புரட்டினார்கள். ஒருவரோடொருவர் விவாதித்தார்கள். ஒருவருக்கொருவர் 'மண்டுகம்' பட்டம் சூட்டினார்கள். அந்த இடத்திலிருந்து எழுமுன் இருவருக்கும் மிஸ்டர் என்ற வாக்கு மறந்தே போயிற்று. அதற்குப் பதிலாக 'டே'யும் 'லே'யும் தாராளமாக வழங்கலாயின.

நேரம் கிடைக்கும் போதெல்லாம் இருவருமாக நோயாளிகள் கிடக்கும் இலவச வார்டுகளில் சுற்றுவார்கள். கட்டில்களில், கால்மாட்டில் தொங்கவிட்டிருக்கும் பலகைகளை ஆராய்வார்கள். ஸிஸ்டர்களையெல்லாம் அறிமுகப்படுத்திக் கொண்டார்கள். செல்லப்பன் பட்டும் படாமலும் இள

நகையோடு அவர்களுக்கு வணக்கமளிப்பதற்குத் தன்னைப் பழக்கப் படுத்திக்கொண்டான். பொன்னையா மட்டும் ஒரு குறையும் வைக்காமல் "குட் ஈவ்னிங் ஸிஸ்டர், குட் ஈவ்னிங்" என்று ஒரு தடவைக்கு இரு தடவையாக வணக்கம் கூறிக் கொள்வான். அவர்களும் பதிலுக்கு வணக்கமளித்துவிட்டு "யார் இந்தக் கோமாளி?" என்னும் பாவனையில், பொருள் பொதிந்த ஒரு சிரிப்புச் சிரித்துவிட்டு, அவரவர் வேலைகளைப் பார்க்கச் சென்று விடுவார்கள்.

குழந்தைகளின் இலவச வார்டு அமர்க்களப்படும். எப் போதும் ஓரிரு குழந்தைகள் இரைந்து கத்திக்கொண்டிருக் கும். தாய்மார்கள் தூங்கி வழிந்து கொண்டிருப்பார்கள். மூலையில் கிடக்கும் 'மெனிஞ்சைற்றிஸ்' கேஸுகளைப் பார்க்கப் பொறுக்காது. மூக்கு வழியாக ஆகாரம் செலுத்த ஒரு குழல், பிராணவாயு செலுத்த ஒரு குழல். ஓரிரு கேஸு களைப் பெற்றோர் விட்டு விட்டுப் போனாலும் டாக்டர்கள் சாக விடமாட்டார்கள். நாராக உரித்துப் போட்ட அந்தக் கால்களையும் கைகளையும் தடவிக்கொடுக்கவென்று ஸிஸ்டர் மார் வந்து போய்க்கொண்டிருப்பார்கள். ஏழு வயதுக் குழந்தையொன்று ஏழுமாதக் குழந்தை மாதிரியே வருகிற வர்கள் போகிறவர்களை விழித்துப் பார்த்துக் கொண்டிருக் கும். என்றாலும் அரைகுறை நோயுடன் வந்து தங்கிச் சுகம் பெற்றுக்கொண்டிருக்கும் பாக்கியசாலிக் குழந்தைகளும் உண்டு. குழந்தைகள் தான் எத்தனை வகை! கறுப்பு, சிவப்பு, மாநிறம், உருண்டை, மெலிந்தவை, மான்போல மிரள மிரள விழிப்பவை, சிரிப்பதற்குத் தயாராக இருப்பவை, சுறுசுறுப் புள்ளவை, ஊசி போடவரும் நர்ஸின் கையில் கடிக்கப் போகிறவை, இப்படிப் பல. அவைகளுடன் உரையாடுவதும், இலேசாகக் கிள்ளி விளையாடுவதும், குழந்தைகளுக்கு ஆஸ் பத்திரியிலிருந்து அளிக்கப்பட்டிருக்கும் விளையாட்டுச் சாமான்களைப் பகிர்ந்து கொடுப்பதும், இரு நண்பர்களுக்கும் வேடிக்கையான பொழுதுபோக்கு. அதைவிட முக்கியமான விஷயம், இருவருமே பிற்காலத்தில் பிள்ளை வைத்தியத்தைத் தனிப்பாடமாகப் படிக்க விரும்புகிறவர்கள். அதிலும் இரு

வருக்கும் ஒற்றுமை இருந்தது. ஆகவே அடிக்கடி இருவரும் ஏதோ சாக்கில் அந்த வார்டுக்கு வருவதும், கிடைக்கிற சௌகரியங்களைப் பயன்படுத்திக் கொள்வதும் உண்டு. மாலை வேளைகளில் யாவரும் உள்ளே செல்லலாம். அதிலும் கையில் பூக்களும் படங்களுமாக வருகிறவர்களுக்குக் குழந்தைகளின் விசேஷ வரவேற்புக் கிடைக்கும். குழந்தைகளின் பெற்றோர்களோ, இந்த அரைகுறை டாக்டர்கள் தம் குழந்தைகளுடைய நோய்களின் ரிக்கார்டுகளைப் புரட்டிப் பார்த்தாலே நோய் பாதி அகன்றுவிட்டதாகத் திருப்திப் பட்டுக் கொள்வார்கள். ஆனால் ஸிஸ்டர்களைக் கண்டுதான் இந்த டாக்டர்களுக்கு உள்ளூரப் பயம். ஸிஸ்டர்களை எந்த விதத்திலும் அதிருப்திப் படுத்திவிட்டுப் பிறகு ஆஸ்பத்திரி யிலிருந்து பிழைத்துப் போக முடியாது. ஆஸ்பத்திரி ஒரு தனி உலகம். அதில் வெளிப்படையான நியதிகளுடன் பின்னிக்கிடக்கும் மறைமுகமான நியதிகளும் சில உண்டு என்று இந்த வைத்தியக் குஞ்சுகள் விரைவில் கண்டு கொண் டார்கள். அதற்குத் தகுந்தபடி தங்களையும் பக்குவப்படுத்திக் கொள்ள ஆயத்தமானார்கள்.

இரண வைத்தியத்திலும் செல்லப்பன் வெகு சீக்கிரத்தில் தனியான அக்கறை கொள்ளலானான். பிணத்தைக் கண்டு பதறியதெல்லாம் ஒரு நாள்தான். பிறகெல்லாம் பதற்ற மென்பது கிடையாது. இரண வைத்தியம் நடக்கும் அறைக் குள். முதலில் இந்த இளமாணவர்களுக்கு அதிகாரம் கிடை யாது. ஒதுங்கி நின்று கற்றுக்கொள்ளவேண்டும்; அவ்வளவு தான். ஓரிரு நாட்களுக்குப் பிறகு. அந்த அறையில் மனிதர் கள் நடமாடுகிறதாகவும், செயலற்றுக் கிடக்கும் மனிதன் மேலே கத்திப் பிரயோகம் நடக்கிறதாகவும் தோன்றுவ தில்லை. அந்த மேசையே ஒரு தனி ஆயுதம். அதன் தலை, கால், இடை, பக்கம் எல்லாம் டாக்டரின் மனம்போல வளைந்து கொடுக்கும். மேசைமேல் நீளமாகக் கிடத்தப் பட்டிருப்பது அப்போதைக்கு ஒரு மனித ஜீவனே அல்ல. முகமும், அறுவைக்குத் தயாராகும் பாகமும் ஒழிய, மற்றப் பாகங்கள் துணியால் மூடப்பட்டு, அசைவற்றுக் கிடக்கும்

அதுவும் ஒரு மனிதனு? கல்லூரியில் படிக்கும்போது தவளையை நடுவே கீறி, தோலை உரித்து, பலகையின் இருபக்கங்களிலும் முள் குத்தி வைத்திருக்கிருன். இங்கேயானல் அதைவிட அழகாக வயிற்றைக் கீறுகிருர்கள். உள்ளேயிருக்கும் ஒவ்வொரு அவயவங்களையும் காணும்போது தவளையே ஞாபகத்துக்கு வருகிறது. நன்ருக அயோடினைத் தோலின்மேல் தடவி, நடுவே ஒரு கோடு வரைந்து, பிறகு கையை நீட்டி— ஸிஸ்டர் பளபளக்கும் கத்தியைக் கொடுக்க—எப்படி நைஸாக அந்தத் தோலில் சிவப்புக்கோடு விழுகிறது! இனி அடுத்தபடி. அடுக்கடுக்காகத் தோலை, தசையை நீக்கி, கத்தியைக் கீழே வைத்துவிட்டு, புதுப்புதுக் கத்திகளை, ஆயுதங்களை வாங்கி, இரத்தம் பீறிடாமல் அங்கொன்றும் இங்கொன்றுமாக நாளங்களை 'கிளாம்ப்' கொண்டு இறுக்கி—

பிறகு நாடகத்தின் வேகம் அதிகரிக்கிறது. நாடி பார்க்க ஒரு ஸிஸ்டர். மூச்சைக் கவனிக்க ஒரு ஸிஸ்டர். கையிலுள்ள 'வாச்'சின்மேல் ஒரு டாக்டரின் கண். பிராணவாயுக் குழல்மேல் இன்னொருவர் கவனம். கட்டிலை உயர்த்த, தாழ்த்த, பக்க உதவி. 'லைற்'றுகளெல்லாம் மேசைமேல், அந்த அறுவை நாடக மேடைமேல் சீறிப்பாய, பிராண வாயுக் குழல் இலேசாக இரைந்து கொடுக்க, மின்சார விசிறி சுழல, ஒருகை—இந்த நாடகத்தின் மையம் இதன் கதா நாயகன் கதாநாயகி எல்லாம் அதுதான்—அயராமல், அனுங்காமல், பதருமல் வேலை செய்கிறது. கிளாம்பையும் மீறிப் பீறிவரும் இரத்தம் அதற்குப் பொருட்டில்லை. அதை ஸிஸ்டர்கள் பார்த்துக் கொள்வார்கள். உடலில் புகுத்த வேண்டிய ரத்தத்தை வேறு டாக்டர்கள் கவனித்துக் கொள்வார்கள். அந்த வேலையெல்லாம் மைனர் கதா பாத்திரங்களுக்கு. கொஞ்ச நேரத்துக்கு அந்தக்கை ஒன்றுக்குத்தான் எத்தனை மேன்மை, மகத்துவம் கொடுக்கப்பட்டிருக்கிறது! நாளைக்கு இந்தக்கை என்னுடையதாக வேண்டும் என்று எண்ணுத ஒரு கத்துக்குட்டி டாக்டர் இந்தச் சூழ்நிலையில் இருக்கவா செய்கிருன்! ஆமாம், இந்தச் சூழ்நிலையில் மனிதர்களே இல்லை. குரல்கள் இல்லை.

கைகளும், கண்களும், எந்திரங்களும், துணிகளும், பஞ்சும், இரத்தமுமே. என்றாலும், அறுவை செய்யும் அந்தக் கை! வெகு சீக்கிரத்தில் மாணவர்களெல்லாம் ரசிகர் களாகி விடுகிறார்கள். அறுவை முடிந்து, கதவு திறந்து, நோயாளி தள்ளு வண்டியில் முன்னே செல்ல, ரத்தம் செலுத்தும் குழலும், பிராணவாயு செலுத்தும் குழலும் தாங்குகிற ஸிஸ்டர்கள் பின்னால் நடக்க, எல்லாரும் தாராள மாக மூச்சு விடலாம். முகத்திலிருந்து, பாதி மறைக்கும் கட்டுகளைப் பறித்துவிட்டு, வியர்வையைத் துடைத்துக் கொள்ளலாம். கையை நன்றாக நீட்டி உதறிக்கொள்ளலாம். பிறகு நேரே காப்பி சாப்பிடப் போகலாம். வழியில் காணும் முகங்களில் கவலையின் நிழல் படிந்திருக்கும். கேள்வி கள் எழும். பதில் சொல்லவேண்டியிருக்கும். ஆனால் ஒரு கப் காப்பி—

இந்த வேளையில்தான் மாணவர்கள் 'கூட்டு'ச் சேருவார் கள். நோயாளிகளைப் போலவே, நோய்களைப் போலவே, மாணவர்களும் பலவகை: பல மதம், பல குலம், பலவிதம், என்றாலும் செல்லப்பனுக்குத் தன் கூட்டாளி யார் என்று நன்றாகத் தெரியும். பொன்னையாதான், டேவிட் அல்ல. பாடம் முடிந்தால் பாட்டு இருக்கிறது. சில வேளைகளில் ஒரு சினிமா, ஒரு சங்கீதக் கச்சேரி.

ஒரு கண்டம் கடந்துதான் அதற்குப் போக முடிகிறது. ஊரிலோ, காடு புதர்களைப் பிளந்து செல்லுகிற ரோடு, வளைந்து, நெளிந்து, ஆற்றொழுக்குப் போல நிம்மதியாக, கண்ணுக்கு மறையும் வரை போகிறது. எங்கிருந்தோ தோன்றும் ஒரு காளைமாட்டு வண்டி ஆடி அசைந்து, கட கடத்துக்கொண்டே செல்லுகிறது. அபூர்வமாக ரோட்டில் தரிசனம் கொடுக்கும் மனித முகங்களுக்குப் பொருள் உண்டு; வாழ்க்கையில் ஏதோ இடம் உண்டு. அபூர்வமாக ரோட்டில் இழைந்து செல்லும் காருக்குப் புதுமை உண்டு. அதை நின்று பார்ப்பதிலும், அதை விமர்சிப்பதிலும் ஓர் இன்பம் உண்டு.

இங்கேயானால்—தெருவில் மனிதர்களில்லை. சாரி சாரியாகத் தலைகள், கண் மறைவதுவரை. மழையென்றால் ஒரே குடைகள் மயம். மழை இல்லாவிட்டால் தெருப் புழுதியை எங்கும் உணர முடிகிறது. தோள்களில் இடித்துக்கொண்டு கைகளின் வீச்சுக்கு ஒதுங்கிக்கொண்டு, அக்கம் பக்கத்தில் இரைந்துகொண்டு உருளுகிற உருளைகளைப் பயத்துடன் கண்ணோட்டம் விட்டுக்கொண்டு ரோட்டின் குறுக்கே போக வேண்டுமானால், மூச்சையடக்கி, அங்குமிங்கும் மிரள விழித்து, பிறகு ஒரு பாய்ச்சல் பாய வேண்டும். ரிக்ஷா வாலாக்கள், லாரி டிரைவர்கள், டாக்ஸிடிரைவர்கள், இவர்களெல்லாம் ஏதோ எந்திரத்தைச் சேர்ந்தவர்கள், இல்லை எந்திரங்கள்தான். நடந்து போகிற வேகத்தில், யார் மேலேயோ மோதிவிட்டுத் தட்டுத் தடுமாறினால், "இது யாருடா சனியன்!" என்று திரும்பிப் பார்ப்பதில் அர்த்தமில்லை. ரோடு அவர்களை விழுங்கிவிடும். எங்கே போகிறோம் என்ற உணர்வில்லாமல், ஒரு அசுர வேகம் மக்களை உந்தித் தள்ளிக்கொண்டு போவதைக் காணலாம். இந்த நெருக்கடியிலும் சில பசுமாடுகள்—யானையை நினைவூட்டும் பிரகிருதிகள்—ஒன்றையும் பொருட்படுத்தாமல் வழியில் நின்றுகொண்டே, சாவகாசமாக அசை போடுவதைப் பார்த்தால், அப்பப்பா, நிம்மதியுடன் ஒரு பெருமூச்சுவிடத் தான் தோன்றும்.

நாடகம் பார்ப்பதில் செல்லப்பனுக்குப் பிரமாதமான மோகம் ஒன்றும் இல்லை. ஆனால் நாடகத்தில் பாட்டு வந்து விட்டால், செவியைத் தீட்டிக்கொண்டு உட்கார்ந்து விடுவான். அதுபோல்தான் சினிமாவிலும். 'தாம் தீம்' என்று பெண்கள் குதிப்பதெல்லாம் என்னவோ அவனுக்கு ஆபாசமாகத்தான் தோன்றும். என்றாலும் பாட்டு மட்டும் தெவிட்டுவதில்லை. நல்ல கச்சேரி எங்கிருந்தாலும் நண்பன் பொன்னையாவுக்கு அந்த வாசனை எப்படியாவது எட்டி விடும். கர்நாடக சங்கீதம் என்றால் அவனுக்கு உயிர். சங்கீதத்தில், அவன் சொன்னதுபோல், ஒரு ஒட்டுப் பொறுக்கியே ஆனாலும், ஓரளவு தேர்ச்சியடைந்திருந்தான். தலையசைப்

பதிலும், தாளம் தட்டுவதிலும், 'ஆஹா' போடுவதிலும் கூட்டத்தில் யாருக்கும் சளைத்தவன் அல்ல அவன். முதலில் அவன் சேஷ்டைகளைச் செல்லப்பன் ஒரு குறும்புச் சிரிப்புடன் கவனித்து வந்தபோதிலும், நாளடைவில் அவனுக்கும் அதெல்லாம் நன்ருக வந்துவிட்டது, தொத்து வியாதி போல.

எல்லா நேரமும் டாக்டராக இருந்துவிட முடிகிறதா? இடையிடையே ஒரு ஓய்வுதான் வேண்டாமா? அதற்கு இந்த சங்கீதம் அழகாக உதவுகிறது. ஹாஸ்டலுக்குச் சென்ருல், தூக்கம் வரவேண்டுமாளுல், கதவைத் தாளிட்டுவிட்டு ஜன்னலைத் திறந்து வைத்துக்கொண்டு, தலையணையில் சாய்ந்துகொண்டே கண்களை மூடிக்கொள்ள வேண்டியது. பிறகு இராகம் குரலின் இனிமையோடு இழைந்து காற்றில் கலந்துவிடும். பாட்டின் பிடிப்பு தளரும்போது தூக்கமும் வந்துவிடும்.

## 2. வீஞகானம்.

மாணவர் விடுதி ஒரு அழகிய, புதிய இரண்டு நிலைக் கட்டிடம், ஆஸ்பத்திரியின் பக்கத்தில்தான் அமைந்திருந் தது. ஹாஸ்டல் வாழ்க்கை ஒரு அனுபவந்தான். தலை நரைத்து, உடல் தளரும்போது, எங்கிருந்தோ வருகிற பூவின் வாசனைபோல் வரும் ஞாபகம் அது. உருவத்தில் ஆடவர் களாகவும், உள்ளத்தில் குழந்தைகளாகவும், சிரிப்பும் கும் மாளமும், விளையாட்டும், கோபமும், தோழமையும் பகையு மாகக் கழிக்கிறகாலம். குமிழியிட்டு வரும் சிரிப்புக் கெல் லாம் ஒரு காரணமில்லை, பொருளுமில்லை. ஒருவரை ஒருவர் செய்கிற வேடிக்கைகளுக்கு எல்லையில்லை. சாப்பிடுவதற்கு நாற்காலியில் உட்காரப் போனால் அங்கே நாற்காலி இருக் காது. ஒருவேளை அப்படியே இருந்து விட்டாலும், அதில் ஊசியோ, முள்ளோ முளைத்திருக்கும். மூட்டைப் பூச்சிகள் தீப்பெட்டிகளுக்குள் பார்சல் செய்யப்பட்டு அறைக்கு அறை இடம் மாறுவதுண்டு. மோனச் சூழ்நிலையில், வெகு கவன மாக, புத்தகத்திலேயே, லயித்திருக்கும், மாணவனது அறை யில் திடீரென்று 'பாச்சா'க்கள் பட்டாளமாகப் பறந்து வந்து பயப்படுத்தும். தூங்கப் போகும்போது நன்றாகவே இருந்த ஜன்னல் கம்பிகள் விடியற்காலை வெளிச்சத்தில் வளைந்து நிற்கும், சரியாக ஒரு ஆள் வெளியேறுவதற்கு வசதியாக. மேசை நாற்காலிகளின் கால்கள் காரணமில்லா மலும் நொண்டியாகிவிடும். பலகை என்று எங்கே இருந் தாலும், அதில் கத்தியால் பெயர்கள் பொறிக்கப்பட்டிருக் கும். சிலவேளைகளில் அவை மாணவர்களின் பெயர்களாக

இருக்கும்; சில வேளைகளில் மாணவிகளின் பெயர்களாகவும் அமைந்துவிடும். அங்கே ஓவியக்கலையும்—அழகாகத்தான் இருக்கவேண்டுமா என்ன? —விளையாடியிருப்பதைக் காணலாம். புத்தகங்கள் எப்படி இருக்கும் என்று சொல்ல வேண்டியதில்லை.

சிறு குழந்தைகளானல் பயப்படுத்தி அடக்கி வைக்கலாம். மாணவச் சிங்கங்களை இந்த வார்டன்கள் என்ன செய்ய முடியும்?

இந்தச் சூழ்நிலையில்தான் செல்லப்பன் வாழ்வது. ஹாஸ்டல் வாழ்க்கையில் பணத்துக்கு நல்ல மதிப்புண்டு. தோழர்களை எளிதில் சம்பாதிக்கலாம். ஆனல் காயபலத்துக்கும் மதிப்பில்லாமலில்லை. செல்லப்பன் முஷ்டி வலுவுள்ளது. யாருமே அவனைச் சீண்டி விளையாட்டுப் பார்க்க அஞ்சுவார்கள். அவனுக்கு உற்ற தோழர்களும் இருந்தார்கள். பொன்னையா இணைபிரியாத நண்பன். டேவிட்டின் எதிரிலும் செல்லப்பனைப் பற்றி ஒரு சுடுசொல் சொல்லிவிட்டு இலகுவில் தப்பிவிட முடியாது. ஒரே இடத்திலிருந்து வந்திருக்கிறார்கள் என்ற பாசம் அது. அதிலும் செல்லப்பன் முதல் வரிசை மாணவன். பாட்டுப் பித்தனுங்கூட.

ஹாஸ்டலில் எல்லா வகுப்பு மாணவர்களும் உண்டு. பிராமணர்களுக்கும், சைவப் பிரமாணத்தைக் கடைப்பிடிக்கும் மற்றவர்களுக்கும் சாப்பிடுவதற்கென்று தனியே இடம் ஒதுக்கப்பட்டிருந்தது. உணவு ஏற்பாடுகளும் தனிப்பட்ட முறையில் அமைக்கப்பட்டிருந்தன. ஆகவே, சைவம், அசைவம் என்ற பெரும் பிளவு முதலிலேயே தெரிந்துவிட்டது. பெரும் பாலானவர்களும் அசைவந்தான். ஆனல் அவர்களுக்கிடையே இருந்த வேறுபாடுகள் எப்படிப்பட்டவை என்று விளங்கிக் கொள்வதற்கு ஒன்றிரண்டு நாட்கள் போதுமானவையாக இருந்தன. தினம் மூன்று வேளை தவருமல், யார் யார் நிற்கிருர்கள் என்றும், எந்த இடம் என்றும் பாராமல் துணிச்சலுடன் தரையில் விழுந்து பரம்பொருளைத் தொழுபவர்கள் ஓரிருவர் உண்டு. அவர்கள்

மகமதியர் என்பது தெளிவு. இன்னும் ஒரிருவர் மார்பிலும் நெற்றியிலும் தோள்களிலுமாக எப்போதாவது சிலுவைக் குறி இடக்கூடிய கத்தோலிக்கக் கிறிஸ்தவர்கள்; இடை யிடையே நெற்றியில் பளிச்சிடும் விபூதியால் இந்துக்கள் என்று தங்களை வரையறுத்துக் கொள்ளுகிறவர்கள்; தங்கள் புத்தக அலமாரியில் வைத்திருக்கும், அழகிய தோல்அட்டை போட்ட வேதாகமத்தால் தங்களைக் கத்தோலிக்கரல்லாத கிறிஸ்தவர்கள் என்று அறிவித்துக் கொள்ளுகிறவர்கள்; எல்லாருந்தான் இருந்தார்கள். இந்த இடையில் சாதிப் பிரிவுகள், இடப்பிரிவுகள், செல்வநிலை காரணமாக ஏற்படும் பிரிவுகள் என்று வேறு பல பிரிவுகள். இந்தப் பிரிவுகளெல் லாம் சாப்பாட்டின் போதும், சினிமா நாடகங்களுக்கிறங்கும் போதும், மதா சாரங்களில் ஈடுபடும் போதும் மட்டுந்தான். மதாசாரங்கள் வரவரத் தேய்ந்து போகிற நிலையில்தான். அவற்றிலுள்ள ஊக்கம் குறைந்து கொண்டேதான் இருக் கிறது. ஆனுல் நாகரீகப் பழக்கங்கள் வகுப்பு விட்டு வகுப்புக் குப் படர்ந்தன. உதாரணமாக, புகை பிடித்தறியாத பிரா மண இளைஞர்கள்கூட, சிகரட்டின் புகையை வளையம் வளைய மாக ஊதி மிதக்கவிடும் நிபுணர்களாகி யிருந்தார்கள். எங்கேதான் வகுப்புணர்வு இருந்த போதிலும், வகுப்பறை, டென்னிஸ்களம், சீட்டுக்கச்சேரி ஆகிய இடங்களில் அதை வெளியே காட்டாமல் நடந்து கொள்ளவாவது இளைஞர்கள் தங்களை எளிதில் பழக்கப் படுத்திக்கொண்டார்கள்.

மாணவர் விடுதிக்குச் சற்றுத் தொலைவிலிருந்தது மாணவிகள் விடுதி. அங்கும் நிலைமை ஏறக்குறைய இது தான். மதாசாரங்கள் மட்டும் சற்றுத் தீவிரமாக அனுசரிக் கப் படுவதால் மதப்பிரிவுகளுக்கு அங்கு ஓரளவு அதிகமான செல்வாக்குண்டு. மாணவிகள் பெஞ்சி, மேசை, நாற்காலி களை உருட்டித் தள்ளி அவற்றின் கால்களை ஒடிப்பதுமில்லை, பலகைகளின்மேல் கத்தியால் சிற்பவேலை செய்வதுமில்லை. அங்கு மாணவிகளுக்கென்று தனியாகச் சில கட்டுப்பாடு களும் உண்டு. அந்தக் கட்டுப்பாடுகள் காலத்துக் கேற்றவை அல்ல என்பது பொதுவாக மாணவிகளிடையில் நிலவியிருந்த

அபிப்பிராயம். ஆனாலும் கட்டுப்பாடுகள் பெரும்பான்மையும் மீறப்படுவதில்லை. குறிப்பிட்ட சமயங்களில் விடுதிக்கு வந்து சேர்ந்துவிட வேண்டும். உறவினர் வீட்டுக்குப் போவதற்குக் கூடப் பெற்றோர்களின் அனுமதி வேண்டும். உறவினரல்லாதவர்கள் விடுதிக்குள் வரக்கூடாது. அப்படியே உறவினர் என்று வந்து விட்டாலும் பலருக்கு எதிரில், விருந்தினருக்கான அறையில் இருந்துகொண்டுதான் பேசவேண்டும். வருகிறவர்களில் பலரும் உறவினர் அல்ல என்றுதான் வதந்தி. ஆனால் வதந்திகள் எப்போதும் மெய்யாக இருக்க வேண்டியதில்லையல்லவா?

பாடவகுப்புக்களில் மட்டும் கட்டுப்பாடு என்று சொல்லும்படியாகப் பெரிதாக ஒன்றுமில்லை. பெண்களின் இருக்கைகள் தனியாகப் போடப்பட்டிருந்தாலும் மருத்துவப் பரிசோதனை நடக்கும்போதும், இரண வைத்தியம் நடக்கும் போதும் யாதொரு விகற்பமும் வேறுபாடுமின்றி ஆண்களும் பெண்களும் ஒருவரை யொருவர் இடித்தாற் போலத்தான் நிற்பார்கள். இளமையின் மதர்ப்பும், கல்வியின் செருக்கும் ஒருங்கே பளபளக்கும் மாணவிகளின் கம்பீரமான முகங்களைக் கண்டு மாணவர்களே பெரும்பாலும் மரியாதையாகத் தான் நடந்துகொள்வார்கள். அவர்களாக வலிய வந்து, வம்புக்கும், குறும்புக்கும் அதிகமாகத் துணிவதில்லை. ஆனால் கொஞ்சம் இடம் கிடைத்து விட்டாலோ, பயந்தவள் என்ற சந்தேகம் முளைவிட்டு விட்டாலோ, மாணவர்களுக்குக் கொண்டாட்டந்தான். எங்கேயாவது, பேச்சுவாக்கில், ஒரு வெடிகுண்டையோ, பட்டாசையோ தூக்கி எறிந்து விடுவார்கள். தங்கள் உடன் மாணவி பயத்தால் ஒரு குலுங்குக் குலுங்குவதைக் கண்ணாரக் காணவேண்டும். அவ்வளவு தான்; குழந்தையைக் கிள்ளி அழவைத்துப் பார்ப்பதைப் போல.

சில வேளைகளில், மிகச்சில வேளைகளில், விஷயம் இதற்கும் அப்பால் போவதுமுண்டு. தாராளமாக அங்குமிங்கும் பேசிப் பழகி, நோட்டுப் புத்தகங்களைக் கைமாற்றி, நோய்களைப் பற்றிய அபிப்பிரயங்களைப் பரிமாறி, நோயாளிக

ளோடும் அவர்கள் பந்துக்களோடும் உறவாடி, வார்டுகளில் வளைய வரும்போது தப்பித்தவறி ஒரு அன்புப் பார்வை. ஒரு விளையாட்டுப் பேச்சு என்று ஆரம்பித்து விட்டால், பிறகு எங்கு சென்று முடியும் என்று நிச்சயமாய்ச் சொல்ல முடியாது. அநேக டாக்டர் தம்பதிகளும் அந்த மருத்துவ மனையில் இருக்கிறார்கள். அவர்களெல்லாம் இப்படிப்பட்ட காதலின் பயனாகக் கலியாணம் செய்து கொண்டவர்கள் என்பது வதந்தி. வதந்திதான்.

ஓரிரண்டு ஜோடிகள் இப்படி இணைவதாகத் தோன்றி விட்டால் போதும், மாணவ மாணவிகளுக்கு இன்பமாகப் பேசிப் பொழுது போக்க விஷயம் அகப்பட்டு விட்டது. தனியேயிருந்து அசை போடுவதற்கும் உணவாயிற்று. ஒருவரை ஒருவர் குறும்பாகப் பார்த்துக்கொள்ளவும் இடம் கிடைத்துவிட்டது. ஆனால் காதல் வசப்பட்ட இணைப்புறாக்கள் என்றுதான் மற்றவர்களைப் பொருட்டுத்தினார்கள்? சேர்ந்து சினிமாவுக்குப் போக அனுமதி கிடையாது. அதனால என்னதான் கெட்டுப்போயிற்று? சேர்ந்து கான்டீனுக்குக் காப்பி சாப்பிட என்று போனால் போகிறது. இனிக்க இனிக்கத் தின்பண்டங்களை வரவழைக்கிறது. அதைவிட இனிக்க இனிக்க எதையெல்லாமோ அர்த்தமில்லாமல் பேசுகிறது.

மருத்துவக் கல்லூரிக் கான்டீனைப் பார்த்தால் அழகாகத்தான் இருக்கிறது. பட்டுத் தாவணிகளைத் தழையத் தழையச் சுற்றி, பவழங்கள் இழைத்த அலங்காரப் பைகளை விரல் நுனியில் தூக்கிவிட்டு, சிவப்பேற்றி வடிவமாக வெட்டி விடப்பட்ட நகங்கள் அழகுக் கைகளுக்கு மேலும் அழகு செய்ய, காதில் விதம் விதமான லோலாக்குகள் மின்ன, 'ஸென்று' வாசனை கமகமக்க, அன்ன நடை நடந்து வருகிறவர்கள் எல்லோரும் வைத்தியத் துறையோடு ஏதோ ஒரு வகையில் தொடர்புள்ளவர்கள்தான். சிலர் லேடி டாக்டர்கள்; இன்னும் சிலர் கத்துக் குட்டிகள். சிலர் சிஸ்டர்கள். வேறு சிலர் டாக்டர்களுக்கு மனைவியர் ஆகும் கௌரவத்தைப் பெற்ற பாக்கியவதிகள். யாராக இருந்தால் என்ன?

கான்றீனில் எல்லோரும் அழகு மங்கையர்தான். ஒருவேளை இங்கே நடப்பது ஒருவித அழகுப் போட்டியாகவுமிருக்கலாம்.

இந்தக் கான்றீனில் சூட்டும் கோட்டுமாகக் காட்சி தரும் மாணவர்களை—சில வேளைகளில் டாக்டர்களையுங்கூட யார் மதிக்கிறார்கள்? விளம்புகிறவர்களுக்கு இடையிடையே ஒரு எட்டணாத் துட்டு விழுமானால் ஏதோ கொஞ்சம் மதிப்புக் கிடைக்கலாம். இல்லையென்றால் வந்தனங்களும், பணிவிடைகளும், எல்லாம் அந்த நாரீமணிகளுக்கேதான்.

செல்லப்பன் எப்போதாவது கான்றீனுக்கு வருவதுண்டு. அவ்வளவு கோழையல்ல என்றாலும் அவன் பொன்னையாவையும்கூடக் கூட்டிக் கொண்டுதான் அங்கு வருவான். கான்றீனில், ஒரு மூலையில் உட்கார்ந்துகொண்டு வருகிறவர்கள் போகிறவர்களைப்பற்றி விமர்சனம் செய்வதும் ஓரளவு இன்பமான விஷயந்தான். ஆனால் பொன்னையாவை அழைத்துப் போவதிலும் ஒருவித ஆபத்து இருந்தது. அந்தப் பழிகாரனுக்கு மெதுவாகப் பேசத் தெரியாது. போகிற வருகிற மனுஷர்களை வம்புக் கிழுக்காமல் விடவும் தெரியாது. இதற்காகக் கான்றீனுக்கு வருவதைக் குறைத்துக் கொள்ளலாம் என்றால் முடியவா செய்கிறது?

ஒரு நாள், கான்றீனில், காப்பியை இன்பமாக ரசித்துக் குடித்துக் கொண்டிருந்த செல்லப்பனின் கையை, பொன்னையா நறுக்கென்று கிள்ளி விட்டான். காப்பி செல்லப்பன் கறுப்பு சூட்டின்மேல் கொஞ்சம் சிந்திவிட்டது. முதல் வேலையாக அதைத் தன் கைக்குட்டையால் துடைத்துவிட்டு, "என்னடா, மடையன்" என்று கோபத்துடன் திரும்பினான் செல்லப்பன்.

"டாக்டர் ஸென் பாடு குஷிடா!" என்று, அவர் காப்பி சாப்பிட்டுக் கொண்டிருந்த திசையை நோக்கினான் பொன்னையா. தான் மெல்லப் பேசினதாகத்தான் அவன் நினைப்பு. குரல் நிச்சயமாகவும் அந்தத் திக்கை எட்டியிருக்கும் டாக்டர் ஸென்னும், அவர்கூடச் சிரித்த முகத்துடன்

இருந்த பெண்மணியும் இதைக் கேட்டதாக ஒன்றும் காட்டிக் கொள்ளவில்லை. அவர்கள் பாட்டுக்குப் பேசிக் கொண்டே இருந்தார்கள். ஆனால் அந்த மேஜையின் பக்கத்தில் நின்ற 'ஸெர்வர்' சட்டென்று பொன்னையாவின் பக்கமாக அரைச் சிரிப்புடன் திரும்பினான்.

''மரியாதை தெரியவில்லைடா உனக்கு. ராஸ்கல்!'' என்று பாதிக் கோபமாகவும், பாதிச் செல்லமாகவும் தன் நண்பனைக் கடிந்து கொண்டான் செல்லப்பன். பிறகு அதைப்பற்றி அவனை வாய் திறக்கவே விடவில்லை. வேறு எதையெல்லாமோ பேசினார்கள். அன்று நடந்த ஆபரேஷன்கள், டைபாயிட் காய்ச்சலைக்கூட வெல்லவல்ல புதுப் புது மருந்துகள், முந்தின நாள் பார்த்த சினிமாவிலுள்ள பாட்டுகளின் தரம், என்றெல்லாம் சம்பாஷணை ஓடிற்று.

ஹாஸ்டலுக்குச் சென்று, கட்டிடத்தின் முன்னால். விரித்த பச்சைக் கம்பளம்போல மெத்தென்றிருக்கும் புல் தரையின்மேல் உட்கார்ந்து கொண்டு, ஹாயாக இருக்கும் போதுதான் மறுபடியும் பொன்னையா அந்தப் பேச்சை எடுத்தான்.

"டேய், நான் அந்தப் பெண்ணைப் பற்றிப் பேசினதும் உனக்குக் கோபம் பொத்துக்கொண்டு வந்ததே?''

செல்லப்பனுக்கு ஒன்றும் விளங்கவில்லை.

"லே, நீ என்னலே உளர்றே; பெண்ணாவது ஒண்ணாவது?''

''டாக்டர் ஸென் கிட்டெ—''

"ஓ! அதுவா? அதுக்கென்ன இப்போ?''

"அவ யாரு தெரியுமா?''

"யாராயிருந்தா எனக்கென்ன லே?''

" அவ பாடிக் கேக்கணும் நீ.''

"நல்லா பாடுவாளா அவ?''

"கேக்கணும் நீ எங்கிறேனே?"

"உனக்கெப்படி தெரியும்?"

"எனக்கு முன்னமே தெரியும். நெல்லேயில், ஹைஸ் கூலில் நான் படிச்சேன் பாரு, அப்போ இவளும்..."

"லே லே, உன் பழைய கிளாஸ் மேற்று? அப்படிச் சொல்லு."

"போடா, உனக்கு அவ்வளவுதான் தெரியும். எங்கே படிச்சாளோ தெரியாது. ஆனு, அவ வீணை வாசிச்சிக் கேட்டிருக்கேன்."

"அவ வீட்டுக்குப் போய்த்தானே?"

"என்னடா, தொடங்கு முன்னே முடிக்கிருயே? அவ விடு வழியாத்தான் ஸ்கூலுக்குப் போகணும். நிண்ணு நிண்ணு கேட்டுக்கிட்டே போவேன்."

"ஏனே?"

"பாட்டு எப்படி இருக்கும் தெரியுமா? வீணை வாசிப்பும் அப்படித்தான்."

"ஹஹ் ஹஹ் ஹா!" செல்லப்பன் சிரிப்புத்தான்.

"போடா! நீ ஸில்லி. அவ பாடி நீ கேட்கணும்." பொன்னேயாவின் முகத்தில் புன்சிரிப்பு மறைந்து, கண்கள் சுடர்விட்டன.

"நீ நல்லா மாட்டிக்கிட்டே போலிருக்கேடா!" என்று பொய் அனுதாபத்தோடு கேட்டான் செல்லப்பன்.

"சேச்சே! பாட்டுக்கும் காதல் கீதலுக்கும் சம்பந்தம் ஏதுடா? பாட்டு தெய்வீகமானதில்லேயா? அதிலும், அவ பணக்காரர் மகள்டா. ஜாதியும் வேறே. நீயும் நானும் யாரு? நான் அப்படி நினேச்சதே இல்லியே? அதான் சொன்னேனே. நீ ஸில்லி" என்று நண்பனேக் கடிந்தான் பொன்னேயா.

நண்பனின் ஆர்வத்தைப் பார்த்து வாயடைத்துப் போனான் செல்லப்பன்.

"சரி, இவள் பாட்டும் வீணையும் எங்கே கேட்கிறது?"

"கேட்கலாம். சந்தர்ப்பம் வரும்."

"அப்படீன்னா?"

"இந்த ஊரு வள்ளுவ மன்றத்திலே விழா நடத்தப் போறாங்களாம். அங்கே இவதான்; பேரு சொல்ல மறந்திட்டேனே, கமலா. கமலாதான் வீணை வாசிக்கப் போறாளாம்."

"ரசிகர் கூட்டத்தில் நீயும் ஒருவன்."

"நீயுந்தான்."

"அது சரி. கூட்டம் எல்லாம் வருமே, பொம்பிள்ளைகளைப் பார்க்க வருமா, பாட்டைக் கேட்க வருமா?"

"அது என்னவோ? இவளைப் பார்த்தாலும் குறை சொல்ல மாட்டாங்க, கேட்டாலும்—"

"அப்படியா?" ஒரு உரத்த கனைப்பு. பொருள் நிறைந்த கனைப்பு.

"போடா ஸில்லி! உனக்கு அக்கா தங்கச்சி கிடையாது?"

"அதெல்லாம் கிடையாது போ!"

"அதுதான் நாக்கு இப்படி லொட லொடக்குது. இப்போதைக்கு விட்டிருக்கேன். இனி இப்படிப் பேசிப்பாரு."

செல்லப்பன் அடங்கி விட்டான். நண்பனின் புஜபலத்துக்கு அவன் அஞ்சவேண்டியதே இல்லை. ஆனால் அன்புக்கு அஞ்ச வேண்டியதுதானே?

வள்ளுவர் மன்ற விழாவுக்கு நண்பர்கள் இருவரும் போகத்தான் செய்தார்கள். போகும் வழியில் பொன்னையாவுக்கு, ஏதோ அபூர்வ ராகத்தின் அலைமேல் அப்படியே குதித்து, குளித்து, எங்கேயோ கடல் வெளியில் நீந்தி எழும்பித் தலையை உயர்த்துகிற மாதிரி இருந்தது. அவன் அமர்ந்த

குரலில் ஒரு ராகத்தை ஆலாபனே செய்துகொண்டே நண்பனுடன் நடந்தான். செல்லப்பனுக்கும் ஆவல்தான். ஏதோ கேட்டறியாத ஒன்றைக் கேட்கவும் உணரவும் போகிறோம் என்ற எதிர்பார்ப்புடனேயே நண்பர்கள் இருவரும் வண்ணக் காகிதங்களால் அலங்காரம் செய்யப்பட்ட அந்த மண்டபத்துக்குள்ளே நுழைந்தார்கள்.

சொற்பொழிவுகள் பெரும் 'போர்'. ஒவ்வொருவரும் பேசக்கிடைத்த அருமையான சந்தர்ப்பத்தை நழுவவிடக் கூடாது என்று நினைத்ததாகவே தோன்றிற்று. கூட்டம் என்னவோ, அன்று பரவாயில்லை. முன் வரிசையிலுள்ள நாற்காலி ஒன்றில் உட்கார்ந்து கொண்ட செல்லப்பன் பின்னுல் திரும்பிப் பார்த்தபோது, ஒரே கண்கள் மயமாக இருப்பதை உணர்ந்தான். தூங்கிவழியும் கண்கள், வெறிச்சிட்ட கண்கள், ஏதோ பொருளற்ற ஆர்வத்துடன் தட்டிவிழிப்பதையே மறந்துவிட்ட கண்கள்.—

பக்கத்தில் பொன்னையா நாற்காலியில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டு ஆனந்த நித்திரையை அனுபவித்துக் கொண்டிருந்தான்.

செல்லப்பனுக்குக் கொட்டாவி கொட்டாவியாக வந்தது. முடிந்தவரை விழுங்கிக்கொண்டு முன் சீட்டில் வந்து அகப்பட்டுக்கொண்டோமே என்ற வருத்தத்துடன் கைக்குட்டையால் அடிக்கொருதரம் கொட்டாவியை மறைத்துக்கொண்டு முள்மேல் உட்கார்ந்திருப்பதைப் போல் உட்கார்ந்திருந்தான்.

பிரசங்கம், இல்லை, சொற்பொழிவு தொடர்ந்து கொண்டிருந்தது.

திரையின் பின்னுல் எங்கேயோ ஒரு தம்புராவை மீட்டும் ரீங்காரம் வரத்தொடங்கிற்று. அப்பாடா! செல்லப்பனுக்கு உயிர் வந்தது. பக்கத்திலிருந்த நண்பனைக் கிள்ளுவதற்குக் கையை எடுத்தான். ஆனுல், அதற்குள் அவனும் விழித்து, கண்ணைக் கசக்கிக் கொண்டிருந்தான்.

பாகவதரின் பாட்டு நன்றாக இருந்தது. பக்கவாத்திய மும் சுமார் என்று சொல்லிவிடுவதற்கில்லை. ஆனால் வீணைக் கச்சேரி கமலாவின் வீணைக் கச்சேரி—வந்தபோது பூலோ கமே தேவலோகமாக மாறி விட்டது. வீணையின் மெல்லிய, நுண்ணிய, தேன் போன்ற இசை மன்றத்தை நிறைத்து, வந்திருந்தவர்களின் உள்ளங்களையும் அசைத்துக் கொண் டிருந்தது. சபையில் "ஆஹா! அற்புதம்! அற்புதம்!" என்று சொன்னவர்களோடு நண்பர்கள் இருவரும் சேர்ந்துகொண் டார்கள் என்று கூறவேண்டியதில்லை.

இராகமாலிகையில் பூமாலையின் மென்மையும், அழகான தொடுப்பும் இருந்தது.

ஆமாம், அந்த விரல்கள் பூத்தொடுக்க வேண்டிய விரல் கள்தான். இல்லை. மென்மையும் இனிமையும் தங்கிய வீணைத் தந்திகளை வருட வேண்டிய விரல்கள்!

செல்லப்பன் இப்போது நன்றாய் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டு அவளைக் கவனித்தான்.

முழுவதும் ஜரிகை இழைத்த ஸாரி கட்டியிருக்கிறாள். அட்டிகையின் வைரப் பதக்கம் சுடர் விடுகிறது. முகத்தில் 'மேக்-அப்' இருந்ததோ என்னவோ, அப்போது மலர்ந்த ரோஜாப்பூவாகத்தான் தோற்றம் அளிக்கிறது. தந்தத்தில் கடைந்தெடுத்த அந்தக் கை, தங்கவளையல்களுக்கே மெருகு கொடுக்கும் கை, வீணைத் தந்திகளின் துடிப்பில் வேகமாக ஜாலவித்தை செய்து கொண்டிருக்கிறது. கண்கள்—ஒரே நோக்கமாக வீணையில் பதிந்திருக்கின்றன.

அப்போதைக்கு அந்தக் கண்களைச் சந்திக்க முடியவில்லை தான். கச்சேரி முடிந்து, கூட்டம் கலையும்போது பார்த்துக் கொள்ளலாம்.

இளம் மாணவர்கள் இருவரும் அவசரமாக மேடையண் டைக்குச் சென்று அந்த வீணை மேதையைச் சந்தித்து, தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டார்கள். மிஸ் கமலா அவர்களை அடையாளம் கண்டுகொண்டாள். கல்லூரி

யில் ஒரே வகுப்பல்ல என்ருலும் ஒருவகையில் உடன் மாண வர்களல்லவா? பொன்னையாவை அவள் பார்த்த பார்வை யில் ஏனே ஓரளவு ஏளனம் கலந்திருந்தது. பாவம், அவன் கூசிக் குறுகிப் போனன். ஆனல் செல்லப்பன் விஷயம் வேறு. குளிர்விக்கும் சுடர்களான அவள் கண்களால் அவனுக்கு நன்றி செலுத்தினள். அந்த மூவரையும் நகர்ப் பிரமுகர்களில் ஒரு கூட்டம் வளைத்துக் கொண்டது. ஜரிகை உருமால்களாலும், வைர மோதிரங்களாலும், இளந்தொந்தி களாலும் தங்கள் செல்வநிலையைப் பறைசாற்றிக்கொண் டிருக்கும் சீமான்கள் பலர், அந்தப் பேரழகியின் கடைக்கண் பார்வைக்காக வந்து நின்றுகொண்டு புகழ்மாரி சொரிந் தார்கள்.

"நீங்க பிரமாதமாகப் பாடக்கூடச் செய்வீங்களாமே?"

"அடிக்கடி வந்து நம்ம மன்றத்தைச் சிறப்பிக்கவேணும்."

"உங்களைப் பத்தி ரொம்பக் கேட்டிருக்கேன் இன்றுதான் நேரிலேயே சந்திக்கும் பாக்கியம் கிடச்சுது."

"இத்தோடே விட்டுடாதேயுங்கோ. உங்களுக்குக் கை வந்திருப்பது அருமையான வித்தை."

"தெய்வீகமானது."

இப்படி இன்னும் பல புகழ்மாலைகள்.

மிஸ் கமலா எல்லாவற்றுக்கும் ஒரு சிறிய புன்னகை யுடன், கைகூப்புடன், அளவாக, அழகாக, நன்றி தெரிவித் துக் கொண்டிருந்தாள்.

பிறகு அங்கு காத்துநின்ற ரோல்ஸ் ராய்ஸ் கார்—அது ஒரு பிரமுகருடையது—அவளை ஏற்றி மாணவிகள் விடுதிக்கு நேராக நீந்திச் சென்று கொண்டிருந்தது.

காரில் ஏறும்போது அவள் உடன் மாணவர்களைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை.

அப்போதுதான் தெருவில் விளக்கும் போடப்பட்டு விட்டதைச் செல்லப்பனும் பொன்னையாவும் உணர்ந் தார்கள்.

ஆமாம், நேரம் இருட்டி விட்டது.

பஸ் ஏறித் தாமதிக்காமல் ஹாஸ்டலில் போய்ச் சேர வேண்டும்.

பஸ்ஸிற் கொன்றும் பஞ்சமில்லை. ரோல்ஸ் ராய்ஸ் காரில்லாவிட்டால் என்ன?

நண்பர்கள் ஹாஸ்டலில் போய்ச் சேரும்போது தரையில் நன்ருகக் காலைப் பதிய வைத்துத்தான் நடந்தார்கள்.

''எப்படி இருந்தது டேய்?'' இது பொன்னையாவின் கேள்வி.

பதிலில்லை.

''என்ன டேய்! உனக்கு ஊமைப் பைத்தியமா பிடிச்சிருக்கு?''

''லேய், மரியாதை!'' செல்லப்பனின் முஷ்டி முன்னுக்கு வந்தது.

''எஸ் ஸார்! மரியாதை!'' பொன்னையா பின்வாங்கிக் கொண்டான். குமிழியிட்டு வந்த சிரிப்பு, பக்கென்று உடைந்தது.

''சரியாச் சிரிச்சித் தொலையேன்லே. பாட்டு நல்லாத் தானிருந்தது.''

''வேறென்ன நல்லாயில்லை?''

''..................''

நண்பர்கள் நேரே கான்றீனுக்குச் சென்ருர்கள்.

''டேய், நீ திருக்குறளை நல்லா ரசிச்சியே!'' கேட்டவன் செல்லப்பன்.

''அவங்க திருக்குறளைப் பத்திப்பேசவா செஞ்சாங்க? திருவள்ளுவரின் மென்னியைத் திருகிக்கொன்னுல்லா போட்டாங்க! இந்தக் கண்ருவியே நான் எதுக்குப் பார்க்கணுமின்னு தூங்கினேன். அதுக்கென்ன இப்போ? நீயாவது எல்லாம் கேட்டியோ, இல்லையோ?''

"விடுவளு பார் எண்ணு முளிச்சிருந்தேன். ஒரு வார்த்தை கூடக் கேட்காமல் விடலே."

"திருவள்ளுவர் என்ன சொல்லியிருந்தார்?"

"திருவள்ளுவரா? பேச்சைக் குறச்சிக்கிட்டா நல்லது, அப்படீண்ணு சொல்லியிருக்கார்."

"இல்லே, நான் கேட்கிறேன். இவங்க பேசிப் பேசியே எல்லாத்தையும் குட்டிச்சுவரா அடிக்கிறுங்களே! கொஞ்சம் நடத்தையிலும் காட்டப் படாதோ? நம்ம நாவல் கதா பாத்திரங்க கூட இவங்களுக்குத் தேவலேயே! ஆமா, உங்க கோவிலிலும் இதைத் தானே செய்ருங்களாம்?"

"யார் அங்கேயெல்லாம் போருங்க? கொஞ்சம் நிம்மதி யாப் பாட்டுக் கேட்கலாமிண்ணு வந்தா, இந்த அதிகப் பிரசங்கிமாரு இங்கேயுமில்லா வந்துட்ருங்க?"

"ஐயோ பாவம்! மிஸ்டர், செல்லப்பனுக்காகவாவது பிரசங்கத்தைக் கொஞ்சம் குறைச்சிக்கடப்படாதோ? அது போகட்டும். பாட்டாவது தெய்வீகமானதென்று சம்மதிக் கிருயோ?"

"ஆமாம்."

"பாட்றவங்க?"

"………………"

"அதையேன் கேட்கவேண்டும் என்கிருய். அப்படித் தானே?"

"அப்படிச் சொல்லலே, பாட்றவங்க மனுசங்க, பாட்டு தெய்வீகமானது".

"அப்படிப்போடுடா சக்கை! சரி, கமலாவைப் பத்தி என்ன நினைக்கிறே?"

"நான் என்ன நினேச்சா உனக்கென்னலே?"

"சொல்லமாட்டாய்?"

''மாட்டேன்.''

''மாட்டாய்?''

''பதிலுக்குச் செல்லப்பன் விசுக்கென்று தன் அறைக்குள் நுழைந்து கதவைப் படீரென்று சாத்தித் தாழிட்டு விட்டான். ஜன்னல் வழியாகக் கீழே பார்த்தால், பொன்னையா வின் பல்வரிசை தெரிகிறது. பிறகு அது சட்டென்று மறை கிறது.

பொன்னையா, முற்றத்திலிருந்து கொஞ்சம் மணலை வாரி அந்த ஜன்னலுக்குள் வீசி எறிந்துவிட்டு, பாதிக்கோபமும் பாதி விளையாட்டுமாகத் தன் அறைக்குச் சென்றுவிட்டான்.

அரைமணி நேரம் கழித்து, சாப்பாட்டுக் கூடத்தில் சந்தித்தபோது' எல்லாம் பழைய மாதிரிதான்.

''டேய், கோழை!'' அழைத்தவன் பொன்னையா.

''வாறியாலே, யாரு கோழைண்ணு பார்ப்பமா?''

''அது இருக்கட்டும் டேய். இது ஆட்டுக்கறியா, மாட்டுக் கறியா?''

''எதுவாயிருந்தா என்னலே, நல்லாத்தானே இருக்கு?''

''மனுஷக்கறியா இருந்தாலோ?''

''அட, மனுஷக்கறியா இருந்தாக்கூட ஒண்ணுமில்லை எங்கிறேன்.''

அடுத்த மேசையின்முன் உட்கார்ந்து, வேண்டா வெறுப்பாகக் குதப்பிக் கொண்டிருந்த டேவிட், ''மிஸ்டர், இது மனுஷக்கறிதான். அதுதான் இப்படி இருக்கு'', என்று விமர்சனம் செய்தான்.

அந்த மேசையில் எழுந்த சிரிப்பு, கிளுகிளுப்பு, செல்லப்பன் இருந்த மேசையிலும் அலைமோதிற்று.

சிரிப்பும் ஆரவாரமுமாகச் சாப்பாடு முடிந்தது.

செல்லப்பன் படிப்பதற்கு நேரமாகிவிட்டதென்று அறைக்கு விரைந்தான்.

பொன்னேயா, சாப்பிடவரும்போதே, கையில் பதுக்கி வைத்திருந்த ஒரு பிரெஞ்சு நாவலைத் திறந்ததும் திறவாததுமாக, நடையைக் கட்டினன்.

## 3. பழங்கஞ்சி

**கி**றிஸ்மஸ் விடுமுறை. பரீட்சை முடிந்து விட்டது என்ற விடுதலை உணர்ச்சி மாணவர்களுக்கு. ஹாஸ்டல் காம்பவுண்டில் ஒரே ஆரவாரமாயிருக்கிறது, பெட்டியும், படுக்கையும், கூலிகளுமாக, மாணவர்கள் கையில் பையுடன் கடைக்குப் போவதும் வருவதுமாக இருக்கிறார்கள். ஊரில் வேண்டியவர்களுக்குச் சாமான்கள் வாங்கிக்கொண்டு போக வேண்டாமா? ஒருவருக்கு ஒரு சாமான் என்று வாங்கினாலுமே பை கனத்துப் போகிறது; பெட்டி, படுக்கை எல்லாம் நிறைந்து விடுகிறது. இந்தக் கஷ்டமெல்லாம் டேவிட் போன்றவர்களுக்குத்தான். செல்லப்பன் கையிலும் நண்பன் கையிலும் ஒவ்வொரு தோல்பை மட்டும். நெருக்கமாக வளர்த்து, ஒழுங்காகக் கத்தரித்து விட்டிருந்த செம்பருத்திச் செடி வரிசைகளுக்கிடையில், அவர்கள் பையை ஆட்டி ஆட்டிச் சென்று கொண்டிருந்தார்கள். வேனில் காற்றுச் சூடாக அடித்துக்கொண்டிருந்தது, வேளை சாயங்காலம் நான்குமணி ஆகியும். 'கேட்'டைக் கிட்டி விட்டார்கள். எதிரில் ரோட்டில் ஒரு கார் புழுதியைக் கிளப்பிவிட்டுப் பறந்து போயிற்று.

"டேய்! இது அந்த ரோல்ஸ் ராய்ஸ் தானேடா?" கேட்டவன் பொன்னையா.

"எந்த ரோல்ஸ் ராய்ஸ்? உனக்கதா?"

"அப்படித்தான் வச்சிக்கவேன். அண்ணைக்கி அந்தக் கமலாவைக் கொண்டு விட்டானே, அந்தக் கார்."

"இருக்கலாம், நான் கவனிக்கவில்லே."

"இங்கே எதுக்காக வந்திருக்கும்?"

"ஏன், ரோட்டில் கார் போகக் கூடாதா. மிஸ்டர் பொன்னேயா நிக்கிறதிஞலே?"

"அதுக்கில்லே. அது அவ கார் இல்லே. அவளே வீட்டுக்குக் கூட்டிக்கிட்டுப் போக வந்திருக்கு. தோ பார். அந்த வாசலில் நிறுத்திவிட்டான்."

ரோட்டில் நின்று பார்த்தால், கார் மாணவிகள் ஹாஸ்டல் காம்பவுண்டில் நுழைவது தெரிந்தது.

"லே. காரில் உட்காந்திருக்கிறவன் யார் பார்த்தியா?"

"அந்த வள்ளுவர் மன்றம் பிரஸிடென்ட் இருக்கிருனே, அவனுக இருக்கலாம். சரியாகத் தெரியவில்லே."

"அவனுக்கு ஜாலிதான். ஆனுலும் இந்தப் பெண்ணுகளே அப்பா அம்மாமார் இப்படியும் விடுவாங்களா?"

"டேய்! நாளேக்கு அவள் லேடி டாக்டர் ஆனு, எந்த வேளேன்னு உண்டா, யார்கூடேண்ணுண்டா அவபோறது? போருமே உன் கவலே?"

கார் திரும்பி அவர்கள் நின்ற இடத்தை நோக்கி வந்து கொண்டிருந்தது.

கமலாதான். பூவாக பூச்செண்டாகத், தோற்றமளித்தாள்.

நெருங்கி வந்ததும், தலேயை வெளியே நீட்டி, ஒரு அழகான பூவை எறிவது போல, பறித்துக் குறிவைத்து, எறிவது போல, புன்னகை ஒன்றை அந்த மாணவர்களுக்கு நேராக வீசிவிட்டு, வலது கையை ஆட்டி, "பை பை" என்று சொன்ஞள்.

எல்லாம் சினிமா மாதிரி இருந்தது.

கார் சென்று மறைந்தது.

"டேய், அந்தப் புன்னகை உனக்காக; தெரியுமா?'' என்முன் பொன்னையா.

செல்லப்பனுக்கு மயிர்க்கூச் செறிந்தது. அதை வெளிக்குக் காட்டாமல், "லே, ஏன் அப்படிச் சொல்றே'' என்று கேட்டான்.

"அவ உனக்கு நேராத் திரும்பும்போதே, அவ முகம் சொல்லிச்சுதே?''

"நீயுந்தான் கூட இருந்தே!''

"போடா; என்னை ஏன் பார்க்கப்போரு? நீ பார்க்கிறதுக் காவது ராஜா மாதிரி இருக்கே!''

"அப்போ, உண்மையா நான் ராஜா இல்லையாக்கும்?''

"ஆகலாமே, தாராளமாக. டாக்டர் பட்டம் எடுத்து, வேலைக்குப் போ. பிறகு கேளு, இந்த ராஜாவைத் தேடி எந்த ராணி வரமாட்டாண்ணு.''

"உன் சங்கதி?''

"அதுதான் உனக்குத் தெரியுமே? இன்னும் ஒரு வருஷம். பிறகு கால் கட்டு கைக்கட்டு போட்டுடுவாங்க.''

பொன்னையா இதைச் சொல்லும்போதே அவன் முகம் வாட்டமடைந்தது.

"ஏன் லே இப்படி மூஞ்சியைச் சுளிக்கிறே? புதுமாப் பிள்ளை இப்படியா இருப்பான்?'' என்முன் செல்லப்பன்.

"நான் அடிமைடா. அடிமை. என் விலை தெரியுமோ? ஐயாயிரம் ரூபாய்!''

பொன்னையாவின் சிரித்த முகத்தின் மறைவில் இத்தனை கசப்பா கிடக்கிறது?

"லே! பெண் எப்படி இருப்பா?''

"எப்படியோ இருப்பா. யார் கண்டா? உனக்கென் னடா அதிருஷ்டசாலி. அண்ணன் இருக்கிமுன்; கஷ்டம் அறியாமே பாத்துக்கிட்டுமுன். எனக்கு யார் இருக்கா?''

அண்ணனை நினைத்தபோது செல்லப்பனின் உள்ளம் பெருமிதத்தால் விம்மிற்று. நண்பனுக்கு ஆறுதல் சொல்ல வேண்டும் போலிருந்தது. ஆனால் ஒன்றும் சொல்லக் கூடவுமில்லை.

ரயிலில் மூன்றும் வகுப்பில் சொல்லமுடியாத கூட்டம். நண்பரிருவரும் எப்படியோ முண்டியடித்து ஏறிக்கொண்டார்கள். மாணவர்கள் பலர் ரயிலில் ஏறினார்கள். ஆனால் மெடிக்கல் காலேஜ் மாணவர்கள் அநேகமாக இரண்டாம் வகுப்பில்தான் இருந்தார்கள். டேவிட்டைப் பற்றிக் கேட்கவா வேண்டும்?

திருச்சி ஸ்டேஷன் வரை ஒரே அரட்டைதான். பிறகு கொஞ்சம் இடம் கிடைக்கவே, பொன்னையா, செல்லப்பன் முதுகோடு முதுகாக இருந்துகொண்டு குறட்டைவிட ஆரம்பித்தான்.

வண்டியில் இருந்தவர்களை ஆராய்வதில் ஈடுபட்டான் செல்லப்பன்.

பெரிய மூட்டை முடிச்சுகளுடன் ஒரு வயோதிகப் பிராமணப் பெண். தலை அலங்கோலம் செய்யப்பட்டிருந்தது.

செல்லப்பன் கண்களை மூடிக்கொண்டான். பின்னும் திறந்து பார்த்தான்.

தலையில் முண்டாசு கட்டிக்கொண்ட கூலியாட்கள், கிழவர்கள், குழந்தைகள், பெண்கள். பெண்களில் ஒரிருவர் அழகிகளாகத்தான் இருந்தார்கள்.

ஆனால், கமலாவைப் போல அல்ல.

கமலாவைப் போன்றவர்கள் ஏன் மூன்றும் வகுப்பில் பிரயாணம் செய்யப் போகிறார்கள்?

இங்கு எல்லார் முகங்களிலும் மூன்றும் வகுப்புப் பிரயாணத்தின் அசதி எழுதியிருக்கிறது. எல்லாருடைய உடைகளும் கரிப்புகை படிந்து அழுக்காய் இருக்கிறது.

கமலா அழகிதான்.

பாட்டு தெய்வீகமானது. அழகும் தெய்வீகமானது தானே?

இவள்தான் பணக்காரி ஆயிற்றே! எதற்காக டாக்டர் வகுப்பிற்குப் படிக்க வந்திருக்கிறுள்? எதற்காக வீணைக் கச்சேரி செய்யவேண்டும்?

அதில் யாதொரு தவறுமில்லை. சங்கீதந்தானே. அதுவும் வீணுகானம் தெய்வீகமாயிற்றே!

எதற்காக இன்னொருவர் காரில் சவாரி செய்ய வேண்டும்?

ஆமாம், அவள் மேதைக்கு ஒருவர் மரியாதை செய்ய வந்திருக்கிறுர். அவள் அதை ஏற்றுக்கொள்ளக் கூடாதா என்ன?

அவள் ஏற்றுக்கொண்டாள், ஏற்றுக்கொள்ளவில்லை, இவன் யார் அதைப்பற்றிக் கேட்க?

செல்லப்பன் விழித்துக்கொண்டான். அவன் இதயமும் விழித்துக்கொண்டது. அடுத்த ஸ்டேஷன் மதுரை. மதுரை வந்ததும் ஒரு பத்திரிகை வாங்கி அதில் ஈடுபாட்டான். பொன்னையாவும், கண்களைக் கசக்கிக்கொண்டு, ஒரு கொட்டாவியோடு, "அட கும்பகர்ணு!" என்று தொடங்கிவிட்டான். பிறகு நெல்லைவரை சமயம் போனது தெரியாது. காலேஜ் வம்புகள், வேடிக்கைகள். வெறும் வாயாக இருந்தாலே விடமாட்டானே பொன்னையா?

நெல்லையில் இருவருக்கும் இரண்டுவழி. பொன்னையா திசையன் விளைக்கு, இடையன் குடி பஸ்ஸில் ஏறினுன். செல்லப்பனுக்கு நாகர்கோவில் பஸ். பஸ் ஏறுமுன் ஒரு டஜன் ஆரஞ்சுப் பழம் வாங்கினுன். அந்த ஆரஞ்சுதான் அவன் வீட்டுக்குக் கொண்டுபோகிற கிறிஸ்மஸ் பரிசு.

ஆறேழு மாதத்துக்குப் பின் வீட்டில் காலெடுத்து வைக்கும்போது நெஞ்சு 'திக்திக்' கென்று அடித்துக் கொள்ளுகிறது.

பனை ஓலைக் குடிசை. சுற்றிலும் மரச்சீனி காடுபோல வளர்ந்து கிடக்கிறது. இடையிடையே ஒருபனைமரம்' வீட்டுக்கு முன்னால் வைக்கோல் போர் ஒன்று. அதனண்டை யில் இரண்டு எருமைக் கடாக்களைக் கட்டிப் போட்டிருக்கிறார் கள். சுகமாகப்படுத்துக்கொண்டு சாவகாசமாக அசை போடுகின்றன. அவற்றின் முதுகின்மேல் உட்கார்ந்து கொண்டு, எதையோ கொத்தித் தின்றுகொண்டிருந்த ஓரிரண்டு காகங்கள், செல்லப்பனைக் கண்டதும் சந்தேகப் பார்வை பார்த்துவிட்டுப் பறந்தன.

வாழ்க்கை ஒரு சொப்பனமா?

கண்ணின் முன் காண்பது மெய்யா, நேற்றுக் கண்டது மெய்யா?

தன்வீடு என்ற உணர்ச்சியில் அவனுக்குத்தான் மயிர் சிலிர்த்து விட்டதே!

அப்படியானால், அந்த பிரமாண்டமான மெடிக்கல் காலேஜ், ஹாஸ்டல், கமலா எல்லாம் கனவுதானா?

வாழ்க்கையில் எதுதான் நிலைத்துவிடப் போகிறது?

திண்ணையில் அவன் கால் வைத்ததுதான் தாமதம். உள்ளேயிருந்த இருட்டிலிருந்து ஒரு நிழல் தள்ளாடிக் கொண்டே எழுந்து வந்தது வாசல் வரைக்கும்

ஆறு மாசத்தில் அப்பனுக்கு இத்தனை வித்தியாசம் வந்திருக்கும் என்று அவன் எதிர்பார்க்கவில்லை.

"அப்பனுக்குக் காய்ச்சலா இருந்துதா? எனக்கு ஏன் எழுத்துப் போடேலே?"

"எனக்கொண்ணுமில்லெ மோனே. நீ, பரிச்சை நல்லா எளுதினியோ?"

செல்லப்பன் 'ஆம்' என்று சொல்வதற்குப் பதிலாகத் தலையை அசைத்தான். பேசினால் ஒருவேளை அழுகை வந்து விடுமோ என்ற பயம். அதற்குள் அவன் தாய் எங்கிருந்தோ ஓடிவந்து அவன் கையை எடுத்து முத்தமிடத் தொடங்கி

விட்டாள். அவள் சேலையிலெல்லாம், அடுக்களையிலுள்ள அழுக்கு. தலைவாரி எத்தனை நாளாயிற்றோ? காதுகளில் ஒற்றைப் 'பாம்படம்' மட்டும் ஊசலாடிக் கொண்டிருந்தது. சிறு வயதில் அவைகளைப் பிடித்து விளையாடியிருக்கிறான். பள்ளிப் பருவத்தில் அவற்றையிட்டு அவளைக் கேலி செய்து மிருக்கிறான். இப்போது என்னவோ 'அம்மை' என்ற உரு வத்தோடு இந்தச் சின்னங்கள் எல்லாம் ஒன்றிப்போய் விட்டன. ஆனாலும் அம்மை இன்னும் கொஞ்சம் அழுக்கில் லாமல் உடுத்தியிருக்கலாம். என்ன இது? ஒரே ஒப்பாரி யாகத் தொடங்கி விட்டாளே! செல்லப்பனுக்குக் கிலி பிடித்து விட்டது.

"மோனே! பொன்னு மோனே! வந்தியாடா ராசா! கொப்பன் சாவக் கெடந்தாரே மோனே! நம்ம வைத்தியங் கூடக் கைவிட்டிற்றுனே! நீ கிட்டெயா இருக்யே. ஒன்னெ விளிச்சிக் காட்டலாமிண்ணு? மவன் பரிச்சையிலே தோத்துப் போவான், எளுதப்படாதுண்ணு இந்தப் பாவி மனுசன் பிடிச்சிக்கிட்டாரு! வந்து சேந்தியே மோனே? ஒன்னெக் காணத்தானே அவரு பொளச்சாரு!" என்று அவன் கையில் முத்தமாரி பொழிந்தாள். அவள் கண்ணீர் அவன் கையை நனைத்தது.

செல்லப்பனுக்கு துக்கம் கோபமாக மாறிற்று.

"சீ போருமே, அண்ணன் எங்கே?"

"நேத்துத்தான் பெண்டாட்டி வீட்டுக்குப் போனான் மோனே. பத்து நாளா ராப்பகலா அவனும் பெண்டாட் டியும் கண்ணடச்சதே இல்லே. சும்மா சொல்லப்படாது."

"ஆமா, சும்மா சொல்லப்படாது." அவன் தந்தையும் இதை ஆமோதித்தார். "அங்கேயும் பின்னே அந்தக் கிளவி மாத்திரந்தானே உண்டு? அவளும் சாவக் கிடக்யாளாம். நம்ம தங்கையன் பெண்டாட்டி வந்து விளிச்சா. நாந்தான் போவச் சொன்னேன். இஞ்செ ஒரு மாசமா என்னெப் பாக்க நின்னியேடா, மாமியாளையும் பாக்கண்டாமா,

எண்ணு போவச் சொன்னேன். இண்ணு சந்தைக்குப் போயிருப்பான். புளி எல்லாம் ஒரு மாசமா இருந்து போச்சி, சந்தைக்குக் கொண்டு போவ ஆளில்லாமே''

''பொம்மி எப்படி இருக்கா?'' என்று தன் அண்ணன் குழந்தையைப் பற்றி விசாரித்தான். அது செல்லப்பன் அவளுக்கு ஆசையாக இட்ட பெயர்.

அவன் தந்தையின் முகத்தில் ஒரு பெருமை ஒளிவீசிற்று.

"அவளா? அது ஒரு பொல்லாத குட்டி. நா ஒறங்கிக் கிடந்தா. எனக்குக் கண்ணெ தொறந்து தொறந்து பாக்கும். செத்துப் போவேண்ணு அவளுக்குப் பயம். வீட்டிலே, வைத்தியன் சொல்லியிருப்பான் போலேயிருக்கு. எண்ணும் வரணும் மோனேண்ணு சொல்லி அனுப்பினேன்.''

''நீரு ஒரு ஆளு. அவனெ நிக்கவச்சுக்கிட்டு!'' என்று கடிந்துகொண்டாள் தாய்.

மகன் கையிலிருந்த தோல் பையை வாங்கிவிட்டு அவனே ஏற இறங்கப் பார்த்தாள். எந்தத் தாயும் பெருமைப் படக் கூடிய மகன்தான். அவன் கையைப் பிடித்து. ''வா மோனே. கொண்ணன் ஒனக்கிண்ணு செஞ்சு வச்ச முறியெப் பாரு.'' என்று அந்த இருட்டறையின் ஒரு பக்கத்தில் புதிதாக அமைந்திருந்த ஒரு கதவைத் திறந்து காட்டினாள். செல்லப் பன் வாயைப் பிளந்தான்.

''நான் முதலில் காணலியே! ஏம்மா. அண்ணனுக்கு மூளை இருக்கு, இல்லியாம்மா?'' என்று சிரித்தான்.

"இதுக்கு மூளை வேணுமா பிலே? நீ பின்னே ஒனக்க கால் சட்டை மேல்சட்டை எல்லாம் அந்த அக்கானி அடுப்பி லேயா கொண்டு வைப்பே?''

அழகான சிறிய அறை. அதில் ஒருபுதிய பனைநார்க் கட்டில். பலாப் பலகையால் செய்த ஒரு சின்ன மேசை. அதற்கேற்றாற்போல இரண்டு நாற்காலிகள். பச்சைப்பசே

லென்ற மரச்சினியிலைகள் உள்ளே எட்டிப் பார்க்கும் ஒரு சின்ன ஜன்னல்.

“இது சொர்க்க மாச்சே அம்மா?” என்று கூவி விட்டான் செல்லப்பன்.

வீட்டில், அவனுக்கு இத்தனை சௌகரியங்கள் செய்து கொடுத்திருக்கும் அண்ணனை என்ன சொல்வது.

அறை வாசலில் அப்பன் கதவைப் பிடித்துக்கொண்டு நிற்கிறார்.

“ஆமா, தம்பியெப் பாக்க நாலு பேரு வருவான். இருக்க எடம் வேண்டா மாண்ணு செய்திருக்யான். நீ பனையேறிக்க மவனானாலும் டாக்கிட்டரில்லியா பிலே?” என்றார். பின்னர் மனைவியைப் பார்த்து, “ஏ, பயலுக்கு வவுத்துப்பசி இருக்காதுண்ணு நெனெச்சே? குடுக்க என்ன இருக்கு?” என்று கேட்டார்.

“பளஞ்சி கெடக்கு. நல்ல ரூல்மீன் கறியும் இருக்கு. வாபிலே துணியெ மாத்திக்கிட்டு,” என்று ஒரு பழைய வேட்டியைக் கையில் கொடுத்தாள் தாய்.

பழங் கஞ்சியும் ரூல்மீன் கறியும்! சாப்பிட்டு யுகங்கள் ஆனாற்போல் இருக்கிறது. செல்லப்பன் வயிற்றில் ரென்று ஒரு யானைப்பசி. துணியை மாற்றிவிட்டு ‘அக்கானி’ அடுப்பண்டையில், ஒரு குறுங்கட்டிப் பலகையைப் போட்டு உட்கார்ந்து கொண்டான். சாப்பாடு தேவாமிர்தமாக இருந்தது.

சாப்பிட்டுவிட்டு, ஏதோ ஒரு இராகத்தை முனகியவனாய், அந்த ஆரஞ்சுப் பழப் பொதியை எடுத்துக்கொண்டு, வேலியைத்தாண்டி, முன்மனையிலிருந்த அண்ணன் வீட்டுக்குச் சென்றான். அங்கேயும் இப்போது எல்லாம் ஒரே மரச்சீனிக் காடாகவே இருந்தது. இடையிடையே வானளாவ வளர்ந்து நிற்கும் பனை மரங்களின் ஓலைகள் சலசலப்போடு அவனை வரவேற்றன.

பொம்மி வீட்டின் பின் பக்கம், படிகளின் அண்டையில், பரற்கற்களைப் பொறுக்கி விளையாடிக் கொண்டிருந்தது. இப்போது இரண்டு வயது நிரம்பி இருக்கலாம். வீடு ஓடு போட்ட வீடு. ஆனால், பின், வாசலின் ஒரு பக்கமாக, ஓலை வேய்ந்த சிறு 'சாய்ப்பின்' கீழ் பனையிலிருந்து இறக்கிய அக்காவி காய்ந்து கொண்டிருந்தது. சூளையாக எரியும் அடுப்பண்டையில், மலைபோல் குவித்திருந்த காய்ந்த சருகுகளை, ஒரு கழியால் அடுப்புக்குள் நீக்கிக் கொண்டிருந்தாள் ஒரு ஸ்திரி. அவள் அந்த மனையிலுள்ள பனைகளை ஏறுகிற தங்கையன் மனைவி.

செல்லப்பன், "பொம்மிக் குட்டீ!" என்றதும் குழந்தை நிமிர்ந்து பார்த்தது. மிரண்ட பார்வையோடு எழுந்து படிகளில் ஏற முயன்றது. செல்லப்பன் குனிந்து, அவள் கால்களை உதைத்து விறிடுவதையும் பொருட்படுத்தாமல் ஒரு கையால் லாவகமாகச் சுற்றி தூக்கியெடுத்து போரில் வெற்றி கண்ட பெருமிதத்துடன் வீட்டுக்குள் ஏறிச் சென்றான்.

அண்ணி ஒரு பழுப்பேறிக் கிழிந்துபோன வேதாகமத்தில் கவனமாக அடுக்களை வாசலில் உட்கார்ந்திருந்தாள்.

"இந்தா அண்ணி உங்க மக. என்னாலே அவளைத் தூக்க ஏலாது. பெரிய சாம்பியனாயிருக்கா" என்று செல்லப்பன் குழந்தையை இறக்கிவிட்டான்.

அண்ணி சிரித்துக்கொண்டு. காய்கறிகளை அப்படியே வைத்துவிட்டு, பொம்மியை மடியில் இருத்திக் கொண்டாள்.

"அண்ணா இப்பத்தான் சந்தைக்குப் போனார். இண்ணு இவ்வளவு நேரமாக் காத்திருந்தார். வந்தவுடனே சொல்லி அனுப்யேன்" என்று கூறிவிட்டுக் கொழுந்தனுக்கு காப்பி கொடுக்க எழுந்திருந்தாள்.

அதற்குச் செல்லப்பன், "இப்ப வேண்டாம் அண்ணி, வயிற்றில் இடமில்லே" என்று சொல்லிவிட்டுக் குழந்தையைப் பார்த்து, "இந்தா பொம்மி ஆரஞ்சு, அப்பா வந்த

வுடன் அனுப்பணும் தெரிஞ்சுதா?'' என்று கொஞ்சலாகக் கட்டளையிட்டான்.

அவன் வீடு திரும்பும்போது நேரம் இருட்டியிருந்தது. அவன் அறையில் மேஜையின் மேல் ஒரு சிறு மண்ணெண்ணெ விளக்கு மினுக் மினுக்கென்று எரிந்து கொண்டிருந்தது இடையிடையே காற்றில் அதன் சுடர் அசைந்தது. அறை முழுதும் இலேசான புகை நாற்றம் வெளியே ஒரு குரல் கேட்டது. அண்ணன் குரல்தான்.

அதற்கு மேலே அப்பனுடைய உற்சாகமான குரல். ''பிலே ராசா! தம்பி பரிச்செ நல்லாச் செய்திருக்கயான்'' என்று கணக்கொப்புவிக்கிறார்.

அண்ணனும் தொடர்ந்து, ''அப்பன் அவங்கிட்டே சொல்லிச்சோ?'' என்று விசாரிக்கிறார்.

எதை?

''அதெல்லாம் ஒம்பாடு பிலே'' என்று சொல்லுகிறார் அப்பன்.

செல்லப்பன் கதவைத் திறந்துகொண்டு வாசலில் தோற்றமளித்தான்.

''அண்ணு!''

''வீட்டிலே அறிஞ்சேன் பிலே.'' பிறகு பெருமையுடன். ''பொம்மி சொல்லிச்சி'' என்று முடித்தார்.

தமையனும் தம்பியும் அறை இருட்டில் ஒருவரையொருவர் பார்த்துக் கொள்கிறார்கள். அந்த நடு அறையிலும் மண்ணெண்ணெ விளக்கொன்று சுவரில், விளக்குக் குழியில் புகைந்து கொண்டிருக்கிறது. பனைநார்க் கட்டிலில் அன்பையன் வயிற்றைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்திருக்கிறார். இளம் டாக்டரின் கண்கள் அங்கே பாய்கின்றன.

''அண்ணு! அப்பனை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போய்ப் பரிசோதனை செய்யணும்.''

"அதெல்லாம் நீ டாக்கிட்டராகும்ப பாக்கலாம் பிலே. இப்ப நம்ப ஊர் வைத்தியரே போரும்" என்ருர் தகப்பனர்.

"அதுவரெ இவரு இருக்கப் போருரா?" என்ருள் தாயார்.

"இங்கெ பாரும், அப்பன் அதுவரை இருக்கணுமாஞ இப்பவே கொண்டுபோய்ப் பரிசோதனே செய்யணும்" என்ருன் செல்லப்பன் அண்ணனைப் பார்த்து.

"ஆருபிலே அதுக்கு சம்மதிக்யா? நா ஆயிரந் தடவை சொல்லிப் பாத்தாச்சி. அப்பன் வீட்டெ விட்டு அசையவே மாட்டாரு. டாக்டரெயாவது கொண்டு வரலாமிண்ணு, அதுக்கும் விடமாட்டாரு" என்ருர் தங்கராஜ்.

"குத்திவச்சிப் புண்ணுக்குவான் பிலே." அன்பையனுக்கு ஊசி போடுவதென்ருல் அவ்வளவு பயம்.

"அய்யே! அது எறும்புக் கடிச்சதுபோலில்லா இருக்கும்? அதுக்கு இப்படி பயந்தா!" என்ருன் இளம் டாக்டர்.

"இல்லெ பிலே. இந்தக் கிளாயம் ஒண்ணுங் கிளாசு. பத்து நாளிலெ வயித்தெறக்கம் நிண்ணு போச்சி! நம்ம வைத்தியனெ என்ன நெனச்ச பிலே? எனக்கு எத்திரெ வருசத்துப் பளக்கம்!"

"செல்லப்பா! சொல்லிப் பிரயோசனமில்லெ. சொல்ல வேண்டியதெல்லாம் சொல்லியாச்சி. வா, ஒங்காரியங்களெக் கேப்பம்" என்று தம்பியை அவன் அறைக்குத் தனியே அழைத்துச் சென்ருர் தங்கராஜ்.

"ரூம் எப்படி?"

"நல்லாத்தான் இருக்கு. ஆஞ இதுக்கு அஞ்ஞூறு ருபாய்க்கு மேல் செலவழிஞ்சிருக்குமே? அண்ணன் இப்பப் போய் இதைச் செய்தது என்னத்துக்கு?"

"ஏம் பிலே, பெண்வீட்டுக்காரன் வந்தா, மாப்பிள்ளேக்குக் கிடக்க இடம் உண்டாண்ணு பாக்க மாட்டாஞ?"

செல்லப்பனுக்குப் புரியத் தொடங்கிற்று: அண்ணியின் அசாதாரணமான முகப்பிரகாசத்தின் காரணமும் விளங்கிற்று. சிறிதும் எதிர்பார்க்காத விஷயமாகையால், அவனுக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியவில்லை. தமையன் தான் மேலும் தொடர்ந்தார்:

"நல்ல சம்மந்தம். கொளுத்த பணக்காரன் ஒன்னே ராஜாபோல வச்சிக்கிடுவான்."

ராஜாப்போல! ராஜாப்போல!

"ஏண்ணு! எனக்குப் படிப்பு முடிஞ்ச பிறகு கலியாணம் போருமே? இப்ப எனக்கு வயசா ஆகிப்போச்சி?"

"அது சரிதாம் பிலே. ஆனு இப்படிப்பட்ட சம்மந்தம் எப்பவும் வருமா?"

"இதைவிட நல்லது வந்தாலோ?"

தங்கராஜ் ஒரு நிமிஷம் மௌனமாக இருந்தார். செல்லப்பன் தொடர்ந்து, "அண்ணு! எனக்கு இப்ப உலகந் தெரிகிற வயசுகூட ஆகலியே?"

தங்கராஜ் சிரித்து விட்டார்.

"அதுக்கென்ன பிலே, கலியாணம் ஆன பெறவு தெரிஞ்சிக் கிட்டாப் போச்சி."

"அதுக்குச் சொல்லலே அண்ணு. எனக்கு இப்போ இருபத்தி மூணு வயசுதானே ஆகுது? அதுக்குள்ளே என்ன அவசரம்?"

"அவசரம் இருக்கு. சொல்யேன், பொறு."

"......................"

"இந்த ஆறு மாசத்திலெ ஒனக்கு என்ன செலவாச்சிண்ணு தெரியுமா?"

"கொஞ்சம் தெரியும். அது முந்தியே எதிர்பார்த்தது தானே?"

"இப்படி எதிர்பார்க்கலெ. நா என்னெண்ணு லும் ஒரு புளி யாவாரிதானே பிலே? மாசச் சம்பளக்காரனு?"

அப்படியானுல் ஏன் என்னைப் படிக்கவைக்க வேண்டும் என்று கேட்பதற்குச் செல்லப்பனின் நாவு துடித்தது. ஆனுல் அந்த நாக்கைக் கடித்து அடக்கிக் கொண்டான்.

தமையனே மேலும் தொடர்ந்தார்: "இப்ப வெல்லாம் யாவாரம் முன்னெப் போல இல்லெ. அதுவும் போன மாசம் நீ என்ன கண்டே? ஒன்னெக் கவலைப் படுத்தவும் நான் நினைக்கேலெ. இஞ்செ அப்பன் பட்ட பாடும். எல்லாமாக ஒரு காசு கையிலில்லெ. வைத்தியன் என் பெண்டாட்டிக்குச் சொந்தமின்னு. மருந்தும் சும்மாவா தருவான்? நானும் ஒரு மாசம் படுத்தா ஒனக்கு ஆரு பணம் அனுப்புவா பிலே?"

"................."

"சரியான புள்ளியா வந்து வாச்சிருக்கு. ஒன்னெ கண்ணெப்போல வச்சிக்கிடுவான். நாங்க எப்படியோ பிளச்சிக்கிடுவம். எங்களுக்குக் கூட தாங்கிக்குடுக்க ஒனக்கு முடியும்.'

"அவ்வளவு தானே?"

செல்லப்பனின் குரலில் எல்லையற்ற கசப்பு ஏறிக்கிடந்தது. தங்கராஜ், அந்த மங்கிய வெளிச்சத்தில், தம்பியின் முகத்தை ஆராய்ந்தார்.

"அதுக்காக எந்தப் பெண்ணையும் பிடிச்சு ஒன் தலையிலே வைக்கப் போறேண்ணு நெனெச்சிக்கிடாதே. நீ பெண்ணைப் போய், கட்டாயம் பாக்கணும். பெண் சினிமாக்காரி ஒண்ணுமில்லெ பிலே. ஆனு..."

"எனக்கு பெண்ணும் பாக்கவேண்டாம், மண்ணும் பாக்கவேண்டாம்."

கதவு திறந்தது. அன்பையன் உள்ளே வந்து, நாற்காலியில் உட்கார்ந்து கொண்டார்.

"சின்னப்பய அப்பிடித்தான் சொல்லுவான் பிலே. நீ அவனெ ஒருநா அங்கே கூட்டிக்கிட்டு போய்க் காட்டிக்குடு." என்று தங்கராஜைப் பார்த்துக் கூறினர்.

தந்தை வந்ததும் செல்லப்பன் வாய்திறக்கமுடியாமல் திணறினன். அவன் இதயம் விம்மி வெடித்துவிடும் போலிருந்தது. எப்படியோ சமாளித்துக்கொண்டு கம்மிய குரலில் கேட்டான்:

"அப்போ, அண்ணன் என்னைப் படிப்பிக்க முடியாது, இல்லையா?"

"எனக்கு முடியுமிண்ணு தோணேலெ பிலே. எனக்குச் சுமக்க முடியாத பாரமாத்தானிருக்கு."

செல்லப்பன் சடக்கென்றெழுந்து வெளியே போய் விட்டான்.

"இருட்டிலே எங்கலே போறே?"

அன்பையன் பதற்றத்துடன் எழுந்தார். ஆனல் மூத்த மகன், அவரைப் பிடித்து உட்காரவைத்தார்.

"அப்பன் இருக்கணும், அவன் வெளியேபோய் ஆலோசிக்கட்டும். பெறவு சரியா வருவான். நான் போயிட்டு நாளெ வாறேன். அப்பன் பயப்படண்டாம். பய அப்பிடி மடையன் ஒண்ணும் இல்லே" என்ருர்.

பிறகு தங்கராஜ் எழுந்திருந்தார். தாயைப் பார்த்து, "பய சோறு தின்னுச்சா?" என்று விசாரித்துவிட்டு முன் வாசல் வழிபாகத் தன் வீட்டுக்குப் போக இறங்கினர்: வாசலின் ஒரு பக்கமாக, நிழலோடு நிழலாக, சுவரில் சாய்ந்து நின்ற தம்பியைக் கண்டும் காணதவர் போல விடுவிடென்று நடையைக் கட்டினர்.

செல்லப்பன் நீண்ட நேரம் அதே நிலையில் நின்ருன். ஒரே எண்ணம் அவன்மேல் மோதி அவன் மனத்தை உளையச் செய்தது. "எங்களுக்குக்கூடத் தாங்கிக் குடுக்க ஒனக்கு முடியும்." அப்போ, அண்ணனுக்குத் தாங்கிக் கொடுக்க வென்று தம்பி கலியாணம் செய்யவேண்டும். அண்ணன் தவமிருந்து காத்துக் கிடந்து, பெண்ணைக் கொண்டார். தம்பி அண்ணனுக்காக எவளையோ கட்டி அழவேண்டும்.

எவளையோ! பெண் சினிமாக்காரியாக இருக்க மாட்டாளாம். சினிமாக்காரி வேண்டுமென்று அழுதவன் யார்? கமலாவைப் போல் ரம்பையாக, வீணை மேதையாக வேண்டும் என்று கேட்கவா செய்தான்? நினைப்பதற்குச் சிறிது அவகாசம் வேண்டும். தான் விரும்பி மணந்து கொள்ளவேண்டும். அவ்வளவுதானே? அண்ணனுக்குள்ள சுதந்திரம் தம்பிக் கில்லையா? பொன்னையா அன்று சொன்னானே 'நான் அடிமைடா அடிமை. என்னை ஐபாயிரம் ரூபாய்க்கு வாங்கி விட்டாங்க" என்று. தன்னையும்...

மூளை கொதிப்பது போலிருந்தது. அதற்கு வெளியில் ஜில்லென்று அடிக்கும் காற்று சற்று இதமாகத் தானிருந்தது. பனையோலைகளின் சலசலப்பு வரவர அதிகமானதுபோல் இருந்தது. தொலைவில், எத்தனையோ 'விளை'களுக்கப்பால், ஏதோ ஒரு பனையிலிருந்து "கூஉ" என்ற சப்தம். அதற்கு எதிரொலிப்பது போல், அதே தொலைவிலிருந்து "கூஉ" என்ற பதில். யாரோ பனையேற்றுத் தொழிலாளர்கள். இன்னும் வேலை நிரவில்லை போலிருக்கிறது. எங்கிருந்தோ ஆந்தைகளின் அலறல். வௌவால் ஒன்று அவன்மேல் தன் சிறகுகளினால் காற்றை வீசிக்கொண்டு தாழ்ந்து பறந்து போயிற்று.

எல்லாம் பழக்கமானவைகள்தான். இதே சூழ்நிலையில் கிடந்து செல்லப்பன் ஊறிப்போனவன். ஆனால் இந்த உண்மை அவனுக்கு அப்போது விருப்பமாகயில்லை. எல்லாம் ஒரே மயக்கம், கனவு. சிறிது நேரத்துக்குப் பின் தகப்பனார் கதவைத் திறந்து வெளியில் வந்து "இந்தப் பய எங்கெ போனான்" என்று பார்த்தார்.

அவர் பின்னால், "ஏம் பிலே இஞ்செ இப்படி நிக்யே? பேயோ கீயோ இல்லா அடிச்சுப்போடும்!" என்று சொல்லிக் கொண்டே தாயும் வந்தாள்.

"எம்மா உனக்கு உறக்கம் வரலியா?" என்று அவளைக் கடிந்து கொண்டான் செல்லப்பன்.

அவள் படபடப்புடன், "ஏம் பிலே, ஒனக்கு வேண்டா மிண்ணு வேண்டாமிண்ணு சொல்லேன். கொன்னு போடு வான் கொண்ணன்? பய ஒறங்கக் கூட வராமெ நிக்யதெப் பாக்கணும்!'' என்று பாதி மகனிடமும், பாதி கணவனிடமு மாகக் கூறி அங்கலாய்த்தாள்.

"நான் வேண்டாமிண்ணு சொல்லலியே?'' என்றான் செல்லப்பன்.

"அப்படிச் சொல்லு மோனே!'' அன்னபையன் குரலில் தொனித்த அடக்க முடியாத ஆவல். செல்லப்பனைச் சற்று அதிர வைத்தது.

"அண்ணனைத் தாங்கிக் குடுக்கலாம். அண்ணன் இஷ்டம் போல நடக்கட்டும்'' என்று தாழ்ந்த குரலில் கூறிவிட்டு, அவன் விடுவிடென்று தன் அறைக்குப் போய் விட்டான். பாவம், அன்னபையனுக்கோ, அவன் மனைவிக்கோ, அந்த வார்த்தைகளில் தொனித்த வன்மம் புரியவில்லை. அவன் முகத்தையும் அந்த இருளில் காண முடியவில்லை. ஆகவே, பயலுக்கு வெட்கம் போல இருக்கிறது என்றெண்ணி அதை விட்டு விட்டார்கள்.

செல்லப்பனுக்கு அறையிலும் இருப்புக் கொள்ளவில்லை. ஜன்னலில் போய் நின்று கொண்டான். நிலா வெளிச்சம் மெதுவாக வானத்தில் படர்ந்துகொண்டு வந்தது. பனை யோலைகளின் ஓரங்களெல்லாம் வெள்ளி கட்டியதைப் போல் தோற்றமளித்தன. இது குக்கிராமம். வாழ்க்கை கிராம வாழ்க்கை. நேற்று அவன் நகரவாசியாக இருந்தான். நேற்று அவனுக்குச் சங்கீதம் கேட்க முடிந்தது. கமலா தான் எப்படி வீணை வாசிக்கிறாள்! கான்டீன்; ஹாஸ்ட லுக்கு முன்னுள்ள பசும்புல் தரை; கழுத்தில் ஸ்டெதாஸ் கோப் ஊசலாட டீக்காக உடைதரித்த இளைஞர்கள் வலம் வரும் அரண்மனை; மின்சார விசிறி சுழல, பிராணவாயுக் குழல் லேசாக இரைந்து கொடுக்க, அங்கே அயராமல் பதறு மல் வேலை செய்யும் அந்தக்கை...

இங்கே மரச்சினி வளர்ந்து காடாக மண்டிக் கிடக்கிறது.

அம்மை முன்பெல்லாம் என்ன அருமையாக அவனுக்கென்று ஒரு கம்பைப் பிடுங்கி, அந்தக் கிழங்குகளை சாயங்காலம் 'உப்புத்துண்டா'க வேகவைத்துத் தந்திருக்கிறாள்! காலை வேளைகளிலும் பழங்கஞ்சியுடன் 'மயக்கின்' கிழங்கு இல்லாத நாள் கிடையாது. அவன் சிறுவயதில் அதிகமாக விரும்புவது மரச்சினிக் கிழங்கும் கருவாடும்—வெளியே சொல்லலாமா?

செல்லப்பன் ஒரு பெருமூச்சுடன் தலையை ஜன்னலிலிருந்து உள்ளுக்கு இழுத்துக்கொண்டான்.

# 4. வீடும் காடும்

அன்று விருப்பமில்லாமல் இசைந்தவன்தான். ஆனாலும் மனம் ஒரு குரங்கு. கலியாண காரியங்களை நினைக்க நினைக்க அவன் மனத்தில் ஒரு கிளு கிளுப்பு உற்சாகம் பெருக்கெடுக்கத் தொடங்கிற்று. பொன்னையாவைப்போல நாமும் விலைப் பட்டுப்போகிறோம் என்ற வருத்தம் நாளுக்கு நாள் தேய ஆரம்பித்தது. பெண்ணைப் பார்க்கவேண்டாம் என்று தமையனிடம் சொன்னவன், கலியாணம் நடக்க இருந்த அடுத்த விடுமுறையில், ஒரு ஞாயிற்றுக்கிழமை காலையில், டேவிட்டைக் கூட்டிக்கொண்டு நாகர்கோவில் கற்கோயிலின் முன்னால் போய் நின்றுகொண்டான். ஆண்களும் பெண்களும் சாரி சாரியாக ஆலயத்துக்குள் புகுந்து கொண்டிருந்தார்கள். பெண்கள் எல்லாருமே பொதுவாக அலங்காரமாகத்தான் உடுத்தி யிருந்தார்கள்.

டேவிட்டுக்குப் பெண்வீட்டாரை நன்றாகத் தெரியும்.

"எஸ்டேட் புள்ளிகள் மிஸ்டர். உம்மபாடு யோகந் தான்" என்று சொன்னான்.

செல்லப்பன் பதில் சொல்லவில்லை. அவன் கண்கள் எதையோ தேடுவதுபோல் பெண்கள் வரிசையில் வட்ட மிட்டுக் கொண்டிருந்தன. டேவிட் குறிப்பாகக் காட்டிய ஒரு திசையில் உற்றுப் பார்த்தான். இதுவரையில் வெறும் வர்ணங்களும் பட்டுகளும் நகைகளுமாக வண்ணாத்திப் பூச்சிகள் வரிசையாகப் போய்க்கொண்டிருந்த அந்த இடத்தில், தன் வாழ்க்கைத் துணைவியாகப் போகிறவள் போகிறாள்

என்ற எண்ணத்தோடு பார்த்தான். அவளும் அலங்காரமாகத் தான் உடுத்தியிருந்தாள். கறுப்பு என்று சொல்லிவிட முடியாது. அழகில்லை என்றும் சொல்ல முடியாது. அண்ணன் ஒன்றும் தன்னைக் கிணற்றில் கொண்டு தள்ளிவிடவில்லை. ஸ்டைலுக்குக் குறைவில்லை. செருப்பின் குதிகால் இரண்டு அங்குல உயரமாவது இருக்கும். வழியில் நின்ற தங்களை ஏறிட்டுப் பார்க்காமலே ஒரு நடுத்தர வயசுப் பெண்மணியுடன்—தாயாகத்தான் இருக்கவேண்டும்—ஆலயத்துக்குள் அவள் புகுந்தது செல்லப்பனுக்கு ஓரளவு திருப்தியாக இருந்தது.

வீட்டுக்கு வந்ததும் ஏற்பாடுகள் விரைவாகத் தொடர்ந்தன பண விஷயங்களுக்கெல்லாம் தங்கராஜ் முன்னுலேயே பெண் வீட்டாரோடு ஒழுங்கு செய்திருந்தார். பெண் வீட்டார் பணம் என்று பார்க்காமல் வாரி இறைத்துத்தான் இருந்தார்கள். செல்லப்பன் வீடு ஓடு போட்டு வெள்ளை அடித்தாயிற்று. அந்த வீட்டிலல்லவா பெண் கொடுக்க வேண்டும்? பெண்ணுக்குத் தாலிக்கயிறு மட்டும் ஆறு பவுனில், முறுக்குச் செயினுகச் செய்வதற்குக் கொடுத்திருந்தார்கள். பெண்ணுக்குப் பொன் ஜரிகை—வள்ளியும் கொடியும்—போட்ட பெனுரஸ் வெள்ளைப் பட்டுச் சேலையும்; மாப்பிள்ளைக்கு ஸர்ஜ் துணியில் கறுப்புக் கோட்டும் சூட்டும்; பெண்ணின் அலங்காரத்துக்கு வேண்டிய பொருட்கள்; தலையில் வைப்பதற்குச் செயற்கைப் பூமகுடம் அல்லது 'ரீத்' அழகிய பின்னல் வேலையுடன் கூடிய பட்டுநூல் வலை அல்லது 'வேயில்'; 'பின்' 'ரிபன்'. 'ஸென்ந்' பௌடர் எல்லாம் தயாரிக்கவேண்டும். வீட்டுக்கு முன் பந்தல் போட்டுப் பட்டியானமும் செய்யவேண்டும்.

அன்பையன் வீடு உருமாறிவிட்டது. இரவு பகலாக வேலை நடக்கிறது. அண்ணனும், அண்ணியும் பொம்மியும் உற்சாகத்துடன் தினமும் எதிர் வீட்டிலிருந்து வருவதும் ஏதேதோ செய்வதும் போவதுமாக இருக்கிறுர்கள். அண்ணியின் கொழுந்தனுர்—வைத்தியர்—அன்பையனை விசாரிக்க

வருகிறதும், கலியாண ஏற்பாடுகளில் கலந்து கொள்வது மாக இருந்தார். அன்பையன் உறவினனான தங்கையனே, உதவி செய்வதற்காக வந்து தன் குடும்பத்துடன் தங்கியே விட்டான். ஆலயத்தில் 'தகுதிப் பத்திரம்' வாசித்தாயிற்று. அழைப்பிதழும் பறந்தது. வாழைக் குலைகள், பனைநார்ப் பெட்டிகள்—முறுக்கு வைப்பதற்கு—வாழையிலைக் கட்டுகள், கோரம் பாய்கள், காய்கறிகள் என்று ஒன்றன்பின் ஒன்றாக வந்து கொண்டிருந்தன.

கல்யாண நாளும் வந்தது. பூமணம் எங்கும் கமழ்கிறது. பிச்சிப் பூமாலை, பூச்செண்டு, பூச்சரங்கள்—அப்பப்பா, தலை வலிக்கு வேறெங்கும் போக வேண்டாம். கலியாண ஆரவாரத்துக்கிடையே, இரவு தூக்கமின்மை வேறு. என்றாலும் ஸர்ஜ்கோட் அணிந்து, அதன்மேல் கனத்த ரோஜா ஹாரம் புரள, ரோட்டில் அலங்கரிக்கப்பட்டு நின்ற காரில் செல்லப்பன் ஏறிக்கொண்டபோது, அவன் முகத்தில் புது மாப்பிள்ளைக்குள்ள பெருமிதம் பளிச்சிடத்தான் செய்தது.

பக்கத்தில் இருந்த தந்தையின் முகம் நன்றாக வெளிறிப் போயிருந்தது. அதை இப்போது கவனித்தால் அமைதி ஏது? அம்மையோ வரவில்லையென்று மறுத்து விட்டாள். முறையல்லவாம்! இந்தக் காலத்தில் முறை என்ன முறை? காரில் பெண்களாக—பொம்மிக் குட்டியை விட்டால்—அண்ணியைத் தவிர யாருமில்லை. சகோதரி இல்லாக் குறையை அண்ணியே தீர்த்து வைத்து விட்டார்கள். 'பேழைப் பெட்டி' எடுக்க வேண்டிய பொறுப்பு அவர்களுக்குத்தானே! அண்ணன் முகத்திலிருக்கும் கம்பீரத்தைப் பார்த்தால், அண்ணன்தான் புது மாப்பிள்ளையோ என்னும்படி இருக்கிறது. ரோஜாஹாரம் ஒன்றுதான் குறை. உயர்ந்த தோள்களைப் பொற்சரிகை 'நேரிய'தால் நன்றாக மூடிக் கொண்டு, அண்ணன் பக்கத்தில் வைத்தியர் உட்கார்ந்திருக்கிறார். வைத்தியர் மனைவியும்கூட வந்திருக்கலாம். அப்படி என்ன யாருக்கும் இல்லாத பச்சை உடம்பா! பிள்ளை பெற்று நாற்பது நாள் 'கெடு'தான் கழிந்ததே என்று அம்மை

சொல்லவில்லையா? போகட்டும். வைத்தியராவது வந்தாரே போதும். அவருக்கு இடம் மாப்பிள்ளைகாரில்தான். தன் குடும்பத்தோடு எத்தனை நாளைய தொடர்பு? காரைப் பின் தொடரும் ஸ்பெஷல் பஸ்ஸில் ஏறிக்கொள்ள அவரை அப்பன் சம்மதிக்கவில்லை. அதுவும் சரிதான்.

பெண் வீடு. வாழைக் குலைகள், செந்தெங்குக் குலைகள் நிறத்தாள் அலங்காரங்கள். இவற்றுக்கு மேலாக அதன் மொட்டை மாடி தெரிகிறது. டேவிட் சொன்னது சரியாக இருக்க வேண்டும். இங்கே காசு கொடிகட்டித்தான் பறக்கிறது! உள்ளேயிருந்து 'பாண்டு' வாத்தியம் செவியில் கூடம் போட்டு உடைக்கிறது.

இந்த ஒரு நாளும் கடப்பது ஒரு கண்டம் தப்புவது போலத்தான். ஏரே இரைச்சல் கடல்போல. மாப்பிள்ளையை எதிரேற்க ஒரு இளைஞன் பூமாலையும் கையுமாக வருகிறான். பன்னீர் தெளிக்கிறார்கள். பந்தலுக்குள் நுழையும்போது புது மாப்பிள்ளையின் தலை இலேசாக ஒரு மூங்கில் கழிக் கோலில் தட்டுகிறது. அண்ணன் முதலில் பதறிவிட்டார். பிறகு ஒன்றுமில்லை யென்றாலும் தம்பியின் உயரத்தை நினைத்துப் புன்முறுவல் செய்கிறார். பந்தலுக்குள் அரைமணி நேரம் வேறு பாட்டு, பிரார்த்தனை, காப்பி, முறுக்கு பழம் என்று கழிந்தது. ஆயிற்று. அண்ணி வீட்டுக்குள் நுழைவது தெரிகிறது பேழைப் பெட்டிகளுடன். அதில் கொண்டுவந்த துணிமணிகளால் மணப்பெண்ணை அலங்கரிக்கப் போகிறார்கள்.

வெளியே இறங்கி வருகிற அந்த உருவம்—உறவினர்களால், அதிலும் பெண்களாலும் பிள்ளைகளாலும் புடை சூழப்பட்டு இறங்குகிற அது—ஒரு பெண்ணின் உருவமாகத் தெரியவில்லை. ஆமாம், தன்னைப்போல அன்றைக்கு அவளும் ஒரு பொம்மைதானே? பூமாலையும், பொன் நகைகளும் 'வேயி'லும், 'ரீத்'தும், பூச்செண்டும், பொன்னுடையும்—அவள் முகத்தை ஒருகணம் ஏறிட்டுப் பார்த்தான் செல்லப்பன். அதில் நம்பிக்கையின் ஒளி பரிபூரணமாக வீசியது

ஒரு சிறு நெட்டுயிர்ப்புடன், மனத்தில் ஒரு புது அமைதியுடன் 'மாப்பிள்ளைக் காரி'ல் ஏறி உட்கார்ந்து கொண்டான். தன் கார்தானே மணப்பெண்காருக்கு வழிகாட்ட வேண்டும்?

நாகர்கோவில் 'கற்கோயில்' ஒரு தனிப்பெருமை கொண்ட உலகந்தான். அதன் பழம்பெரும் 'ஆர்கனி'ன் கடல் போன்ற முழக்கம் செல்லப்பனின் காதுகளை நிறைத்தது. சினிமா மெட்டுகளும் கர்நாடக சங்கீதமும் ரசிக்கும் அவனுக்கு இதில் ஒரு புதுமை இருந்தது. ஆமாம், இங்கே வீணை இல்லை. கமலா—

பக்கத்தில் ஆடாமல் அசையாமல் மூச்சு விடுகிறாளோ என்பதுகூடத் தெரியாமல் நிற்கிற பெண் கமலா அல்ல.

கமலா—அழகிதான். ஆனால் நாலுபேருக்கு முன்னால் அழகி. அவள் சங்கீதமும், புன்னகையும், நாலு பேரைச் சந்தோஷப்படுத்துவது.

நாளைக்குக் கமலா புகழ் ஏணியில் நிற்பாள், இவள், எமிலி—மனைவி.

தாயின் இடத்தில், மாறாத அன்புள்ளவளாக வருகிறவள்.

உலக வாசனை அறியாதவள்.

தன்னையே தஞ்சம் என்று நம்பி வருகிறவள்.

பதினாறு வயசு தானாமே?

குழந்தைக்குச் சமானந்தான்.

செல்லப்பனுக்குத் தன் மார்பு இரண்டங்குலம் விரிவிடைந்தது போன்ற உணர்ச்சி.

"செல்லப்பனாகிய நான் எமிலியாகிய இவளை என் மனைவியாக ஏற்றுக் கொள்ளுகிறேன்" என்று போதகரிடமும், அத்தனை பேர்கள் முன்னிலையிலும், 'வார்த்தைப் பாடு' ஒப்புவித்தபோது, மனப்பூர்வமாக, பெருமையோடு, கம்பீரமான புருஷக்குரலில் ஒப்புவித்தான். அவளும் மெல்லிய குரலில் வாக்குத் தத்தம் செய்தபோது, அவனுக்கு மயிர்க்

கூச்செறிந்தது. அரை மயக்க நிலையில் அவள் தந்தையிட மிருந்து அவள் கரத்தைப் பெற்றுக் கொண்டான்.

தாலி கட்டு. அது அவனுக்குங்கூட அல்லவா ஒரு அனு பவமாக இருக்கிறது?

அவளுக்கு எப்படி இருக்கும்?

கணவனும் மனைவியும், செல்லப்பனுகிய அவனும், எமிலி யாகிய அவளும் கணவனும் மனைவியுமாக நிற்கிருர்கள்.

போதகர் அவர்களுக்குப் புத்திமதி கூறுகிருர். பிறகு வேதாகமத்தை விரித்துப் பிடித்து அதிலிருந்து கம்பீரமாக வாசிக்கிருர்:

"மனைவிகளே, கர்த்தருக்குக் கீழ்ப்படிகிறது போல உங்கள் சொந்தப் புருஷருக்கும் கீழ்ப்படியுங்கள்...

"புருஷர்களே, உங்கள் மனைவிகளில் அன்பு கூருங்கள். அப்படியே, கிறிஸ்துவும் சபையில் அன்பு கூர்ந்து...தம்மைத் தாமே அதற்காக ஒப்புக்கொடுத்தார்.

"இநினிமித்தம் மனுஷன் தன் தகப்பனையும் தாயையும் விட்டு தன் மனைவியுடன் இசைந்து. இருவரும் ஒரே மாம்ச மாய் இருப்பார்கள்."

அமைதியான அந்த வேளையில், வெகு ஜனங்களின் மத்தியில், அந்த வார்த்தைகளின் முழக்கம், செல்லப்பனை இன்னதென்று அறியாத ஒரு ஆழ்ந்த அனுபவத்துக்கு ஆளாக்கிற்று. கைக்குட்டையை எடுத்து, முகத்திலுள்ள வியர்வையைத் துடைப்பதுபோல, தன் கண்களையும் துடைத் துக் கொள்கிறுன்.

தொடர்ந்து பாட்டு, பிரார்த்தனை, ஆசீர்வாதம், கடைசி யில் கையொப்பம்.

இப்போது செல்லப்பன் ஒரு புது மனிதன்; குடும்பஸ்தன். புது மனைவியின் கரம் பற்றியவனுய், ஆலயத்தின் நடுவழி நெடுக நடந்து வந்து வெளியே காத்து நின்ற 'மாப்பிள்ளைக் காருக்கு நேராகப் போனுன் புகைப்படங்கள் எடுக்கப்

பட்டன. சுற்றி நின்ற ஜனக்கூட்டம் மெதுவாக நீங்கிக் கொடுக்க, காரில் தம்பதிகள் ஏறியதும், காரும் மெதுவாக நகர்ந்தது. செல்லப்பன் முகத்தில் வியர்வைத் துளிகள் அரும்பி நின்றன. நல்லவெயில். போதாக் குறைக்குக் கம்புளிக் கோட்டு. பக்கத்தில் இருந்த புதுப் பெண்ணின் முகத்தில் 'பவுடர்' எல்லாம் கலைந்திருந்தது. கைக்குட்டையால் முகத்தைத் துடைத்துக்கொண்டிருந்தாள் தன்னைப் போல அவதிப்படும் அவளை அனுதாபத்தோடு பார்த்தான் செல்லப்பன்.

இன்னும் இருக்கிறது நிகழ்ச்சி நிரல். பெண்வீட்டில், குழந்தைகள் பந்தலில் வந்து நின்று மலர்களை வாரிச் சொரிந்து, மங்களகீதம் பாடுகிறார்கள். அபசுரந்தான். ஆனால் அந்தக் குழந்தைகளைப் பார்க்க சந்தோஷமாக இருக்கிறது. பிரமுகர் ஒருவர் படாடோபமாக எழுந்து நின்று ஆங்கிலத்தில் வாழ்த்துக் கூறுகிறார். அதற்குப் பதில், நாலுவாக்கு புன்னகையோடு, அதுவும் ஆங்கிலத்தில் கூறியாக வேண்டும், சங்கடமான நிலைமைதான். ஆனாலும் சமாளித்துவிடுகிறான். சாப்பாடும் திருப்திதான். தொடர்ந்து வழியனுப்பும் படலம். பெண்வீட்டார் கண்ணீர் சிந்தும் கட்டம். செல்லப்பன் அந்தப் பக்கமே திரும்பிப்பார்க்கவில்லை. 'அவள்' அழுதால் என்ன செய்கிறது?

எல்லாம் முடிந்து, 'பெண்ணு மாப்பிள்ளை' பனைவிளைக்குத் திரும்பும்போது, செல்லப்பன், கம்பீரமாகக் காரின் பின் ஸீட்டில் சாய்ந்து, உட்கார்ந்து கொண்டான். முன் ஸீட்டில் பட்டுச் சட்டையும் ஜரிகை நேரியதுமாக உட்கார்ந்திருந்த அண்ணன், பெருமையோடு திரும்பி தம்பியின் முகத்துக்கு நேராக ஒரு பார்வை பார்த்தார். பிறகு, திருப்தியடைந்தவராய்த் திரும்பிக்கொண்டார்.

நீண்ட பட்டுப் பாவாடையைச் சுமக்க முடியாமல் சுமந்து வந்த பொம்மி, இதுவரையிலும் செல்லப்பனின் கண்களில் தட்டுப்படாமல் இருந்தவள், இப்போது புதுப் பெண்ணை நெருக்கிக்கொண்டு, அவளுக்கும் செல்லப்பனுக்

கும் இடையில் வந்து உட்கார்ந்து கொண்டாள். அவள் தாயின் சிரிப்பைக்கேட்டுத் திரும்பின அவள் கணவன், "பொம்மி! எங்கிட்டெ வாறியா?'' என்று கூப்பிட்டான்.

பதிலுக்குப் பொம்மி தன் முகத்தைத் தன் சித்தப்பாவின் கோட்டில் மறைத்துக்கொண்டாள். முன்னால் இருந்த அன்பையன், சற்றுச் சிடுசிடுப்போடு, ''அவ கக்குவா. துணியெ எல்லாம் இல்லாதெ ஆக்குவா இப்பிடி எடுவே அவளெ,'' என்றார்.

செல்லப்பன் விடுகின்றதாக இல்லை. கைக்குட்டையை எடுத்துக் குழந்தையின் முகத்திலிருந்த வியர்வையைத் துடைத்தான்.

'பொம்மி! எனக்க பொம்மிக் குட்டிதானே? என்னை விட்டுக்கிட்டு எங்கே போகும்?'' என்று கொஞ்சலோடு மடியிலேயே உட்கார வைத்துக் கொண்டான். அவள் அங்கே இருப்பது அவனுக்கு ஒரு வகையில் சௌகரியமாய்த்தான் இருந்தது. பக்கத்திலிருந்த புது மனைவியிடம் பேசவும் வேண்டும். அதற்கு இன்னும் வேளையும் வாய்க்கவில்லை.

புதுப்பிக்கப்பட்ட அன்பையன் வீட்டின் முன் வீட்டுக்கும் வைக்கோல் போருக்கும் இடையில், ஒரு பெரிய பந்தல் போடப் பட்டிருந்தது. அங்கேதான் வரவேற்பு. பிரார்த்தனை எல்லாம். அன்பையன் நேரே சென்று வீட்டுக்குள் புகுந்தார். அவர் வயிற்றைப் பிடித்திருந்ததைச் செல்லப்பன் கவனிக்கவில்லை. பந்தலில் அவரைக் காணாதபடியால், தமையனிடம் கேட்டான். தங்கராஜ் உள்ளே சென்று, குப்புறப்படுத்திருந்த தந்தையைக் கண்டு பதறி விட்டார்.

''அப்பா என்ன?''

''ஒண்ணுமில்லெ மோனே. அந்தப் பருப்புக்கறி வயத்தைக் கடிக்குது. நீ போ, நான் இதா வாறென்'' என்று கூறித் தங்கராஜைப் பந்தலுக்கு அனுப்பினார் அன்பையன்.

கலியாண நாள் எப்படியோ கழிந்தது. வைத்தியர் தந்தையின் பக்கத்திலேயே இருந்தார். செல்லப்பன் தந்தை

பின் நோயைப் பற்றிச் சொல்லிச் சொல்லி அலுத்துவிட்டான். ஆஸ்பத்திரி சிகிச்சைக்கு அவர் இணங்கி வருகிறதாக இல்லை. தந்தை 'ஆண்டவா!' என்று முனகும் போதெல்லாம் அவன் வேறு பக்கம் முகத்தைத் திருப்பிக் கொள்வான். இன்றோ பெண்வீட்டார் 'வீடுகாண' வரும் நாள். செல்லப்பன் சொல்வது போல, 'குப்பைகூளங்கள்' அதாவது வெண் கலபாத்திர வகையருக்கள் மாப்பிள்ளைக்கும் தமையனுக்கும் மோதிரங்கள், என்றெல்லாம் மரியாதைகள் செய்யப்படும் தினம். போதாக்குறைக்கு வருகிற டாக்டர் நண்பர்களுக்கு 'ரிஸப்ஷன்' அதாவது வரவேற்பு வேறு சிறப்பாக ஒழுங்கு செய்யப்பட்டிருந்தது செல்லப்பனுக்கு ஒரே குழப்பம். அவசரம் அவசரமாக ஏதோ பெயரளவில் காரியங்கள் நடந்தேறின. வருகிற போகிற விருந்தினர்களுக்குப் போதுமான மரியாதை செய்யக்கூட இயலவில்லை. அண்ணனுக்கோ, அப்பனின் கட்டிலைவிட்டு விலகவே முடியவில்லை. அண்ணியும் அம்மையும் அடுக்களையில்; வெந்நீர் தருகிறதும் வைத்தியர் தந்த குளிசையை மண் 'கார்வை'யின் தூரில் உரசுகிறதும், கஷாயம் போடுகிறதுமாயிருந்தார்கள். குழந்தை பொம்மி குறுக்கும் நெடுக்குமாகத் திரிந்தது. புதுப்பெண்ணை உட்காரவைத்திருந்த அறையில், கிராமத்திலுள்ள பெண்கள் அவளைச் சுற்றி, நெருங்கி நின்றுகொண்டிருந்தார்கள். காற்றுக்கூட வராதபடி ஜன்னலையும் மறைத்து நின்றார்கள். ஆனால் செல்லப்பனோ, கடலில் அலைபடுகிற துரும்பு போல, விருந்தினர்களிடையே தத்தளித்துக் கொண்டிருந்தான்.

நேரம் இருட்டுகிற வேளையில் வந்து சேர்ந்தான் பொன்னையா. அவன் முகத்தில் வழக்கமான தெம்பு ஒன்றும் இல்லை. விலையுயர்ந்த சூட்டும் கோட்டும் அணிந்திருந்தாலும் ஒரளவு தன்னம்பிக்கை குறைந்தவனாகவே தோன்றினான். நண்பனை நெருக்கத்தில் கண்டு பிடித்ததும், நேரே பாய்ந்து சென்றான். நண்பர்கள் கைகுலுக்கிக் கொண்டார்கள். பொன்னையா தன் கையை விடுவித்ததும், செல்லப்பன் முதுகில் ஒரு குத்து விட்டான்.

"என்ன புதுமாப்பிளே? எத்தனை நாளா இந்த ரகசியம்?" என்று பொய்க் கோபத்துடன் விசாரித்தான்.

"போலே, டேவிட்டைக் கேள்" என்று சொல்லிவிட்டு, அவனைப் பந்தலில் உட்காரச்செய்து, மற்றக் காரியங்களைக் கவனிப்பதில் பம்பரமாகச் சுழன்று கொண்டிருந்தான் செல்லப்பன்.

கூட்டத்தில் டேவிட்டும் பொன்னையாவும் சேர்ந்து கொண்டு, பேச்சிலும் வேடிக்கையிலும் புகை ஊதுவதிலும் ஈடுபட்டிருந்தார்கள். செல்லப்பன் திரும்பி வந்தபோது டேவிட் மிகவும் பெலமாகக் கைகுலுக்கிக் கொண்டான். ஆனல் பொன்னையாவின் முகத்தில் அனுதாப உணர்ச்சி படர்ந்திருந்தது. நண்பர்கள் கலியாண விஷயமாகப் பிறகு வாய் திறக்கவில்லை. ஆனலும் பேசுவதற்கு, ஈடுபடுவதற்கு, விஷயம் நிறைய இருந்தது.

அன்பையன் கட்டிலில் புழுவாகத் துடித்துக் கொண்டிருந்தார். இப்போது வைத்தியர் அங்கே இல்லை. கையை விரித்து விட்டுப் போயிருக்கிறார் என்று பந்தலில் பேசிக் கொண்டார்கள். அன்பையனே, கத்துக்குட்டி டாக்டர்களைத் தொடவும் விடவில்லை. டேவிட் அருகில் சென்று உற்றுப்பார்த்து விட்டுத் திரும்பி வந்து, செல்லப்பனிடம், "மிஸ்டர், திஸ் இஸ் ஸீரியஸ்" என்று சொன்னன்.

"என்ன செய்யலாம், மிஸ்டர்? பிறவிக் குணம்" என்று சலித்து கொண்டான் செல்லப்பன்.

"ஆமாம், அவர்சம்மதிக்கவில்லையானல், மற்றவர்களுக்கு என்ன? ரண்டு தடி மக்களில்லையாடா, ஆஸ்பத்திரிக்குத் தூக்கிக்கொண்டுபோக?" என்று பொன்னையா உரிமையுடன் கடிந்து கொண்டான்.

கலியாணவீடு அல்லோல கல்லோலப்பட்டது. நாகர் கோவில் பந்துக்களும் கும்பல் கும்பலாகக் கூடிக்கொண்டு, நோயாளியின் நிலைமையைப் பற்றி விமர்சிக்கத் தொடங்கி

விட்டார்கள். செல்லப்பனின் மாமனாரும், பெண்வீட்டார் புடைசூழ, அவனைத் தேடி வந்தார்.

கணீரென்று, ''என்ன மாப்பிள்ளை, சொல்லுங்க; நாகர் கோவிலுக்கே கொண்டு போகலாமா?'' என்று தன் பெருந் தன்மையைக் காட்டிக் கொண்டார்.

மருமகன் கையைப் பிசைந்தான். அப்பன் சம்மதிக்க வில்லை.

விருந்தினர் ஒவ்வொருவராய்ப் போய்விட்டார்கள். அநே கருக்கு இந்த இக்கட்டான சந்தர்ப்பத்திலிருந்து நழுவி விட்டால் போதும் என்றிருந்தது. பெண் வீட்டாரும் புறப் பட்டு விட்டார்கள்.

''பெண் எடுத்த வீட்டுக்குப் பாரமாகப் போக வா பிலே?'' என்று வயிற்று வலியினிடையிலும் கவலைப் பட்டார் அன்பையன்.

இரவு பொம்மியைத் தவிர யாரும் தூங்கவில்லை. புதுப் பெண் குற்றவாளி மாதிரி, ஒன்றும் செய்யவும் தோன்றாமல், வாசலில் நின்று கொண்டே இருந்தாள். மூத்த மருமகள் அடுக்களையில். மாமியார்க்காரி, ' கலியாணம், நல்ல கலியா ணம்!'' என்று முணுமுணுத்தவாறு அன்பையன் வயிற்றைத் தடவிக் கொடுத்துக்கொண்டிருந்தாள்.

இரவு நேரம் ஆக ஆக நிலைமை அத்துமீறிக் கொண்டி ருந்தது. அன்பையன் கூச்சல் போடுகிறார். செல்லப்பனால் இனியும் அடக்கிக்கொண்டிருக்க முடியவில்லை.

"அண்ணா! நான் எங்கேயாவது போறேன். ஒண்ணு, நான் கார் பிடிச்சிக்கிட்டு வந்து அப்பனை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போணும். இல்லேண்ணா நான் மட்டும் எங்கே யாவது போணும். என்னால் இதைப் பார்த்துக்கிட்டிருக்க முடியாது.'' என்று கோபத்தோடு கூறினான்.

"அப்பன் கேக்கணும்'' என்றார் தங்கராஜ் தகப்பனைப் பார்த்து.

அன்பையன் கண்களைத் திறந்தபோது, வயிற்று வலி அவற்றில் தெரிந்தது.

"எனக்குச் சுட்டி நீ என்னத்துக்கு பிலே போனும்? போ, எந்த எளவையுங் கொண்டுவா. என்னெ எந்தக் காட்டிலேயும் கொண்டுபோ. போய், குத்திக்கிறி கொண்ணு போடு இந்த நோவாவது போவுமே!" என்று தன் சம்மதத்தைத் தெரிவித்தார்.

தங்கராஜ் தம்பியைப் பார்த்து. "நீ இரு. நான் போயிக் கார் கொண்டு வாறென் அரை மணியில்" என்று சொல்லி விட்டு, சிந்திய மூக்கோடு இறங்கிப் போனன்.

தந்தையின் அருகில் அமர்ந்து, தலைகவிழ்ந்தவாறே உட்கார்ந்திருந்த செல்லப்பன், தலையை உயர்த்திப் பார்த்த போது சந்தித்தது அவன் மனைவியின் கண்களைத்தான். மங்கின ராந்தல் வெளிச்சத்தில், அந்தக் கண்களில் கண்ணீர் பளபளத்தது.

தந்தையின் வேதனையே உலக முழுதும் நிறைந்திருந்த அந்த நேரத்தில், செல்லப்பனுக்கு மனைவியின் நினைவே இல்லை. ஆனல் திடீரென்று அந்தக் கண்களைச் சந்தித்த போது அவனை என்னவோ செய்தது. எல்லைபற்ற இரக்க உணர்ச்சி அவனுள் கடல் போலப் பொங்கி எழுந்தது. அவனை நம்பி வந்து நின்ற ஒரு உயிர், செய்வதறியாது திகைத்து நிற்பதுபோல அவனுக்குத் தோன்றிற்று. அவள் அவனுடையவள்; அவன் மனைவி. இந்த எண்ணம் அவனுள்ளத்தைச் சிலிர்க்க வைத்தது. அந்த மங்கிய ஒளியில் அந்த முகத்தில் ஏதோ அழகு இருப்பது போலத் தோன்றிற்று. உண்மையாகவே அந்த முகத்தின் பாவத்தில் ஒரு அழகு இருந்தது. மருண்ட பார்வை. ஆனல் எழுந்திருந்து கிட்டப்போய் ஆறுதல் கூறக்கூட முடியாத நிலை.

கார் வந்துவிட்டது. அவசரம் அவசரமாக அன்பையனைக் காரில் ஏற்றினர்கள். தாய் ஒப்பாரியோடு தானும்

கூட ஏறினுள். எடுக்கவேண்டிய தட்டுமுட்டுச் சாமான்கள் ஒன்றும் யாருக்கும் ஞாபகமில்லே.

''மெடிக்கல் காலேஜுக்குக் கொண்டுபோக வழியில் லேயே அண்ணு!'' என்று வருத்தத்துடன் செல்லப்பன் கேட்டான், திருவனந்தபுரத்தை நினைத்துக்கொண்டு.

''அத்தனே தூரம் நமக்குத் தாங்குமா பிலே. கிட்ட உள்ள ஆஸ்பத்திரி ஏதாவது சொல்லு. நல்ல டாக்கிட்டர் ஆராவது உண்டுண்ணு சொல்லு. மார்த்தாண்டம் போரும்.''

''இல்லேயண்ணு, நெய்யூர்'' என்று திட்ட வட்டமாகக் கூறிவிட்டான் செல்லப்பன். பிறகு, கார் புறப்படுமுன் வீட்டுக்குள் திரும்பிப் பார்த்தான்.

''பொம்மி! சித்தியைக் கூப்பிடு'' என்று சித்தியிடம் பழகினவன் மாதிரிக் கூறினுன்.

''தித்தி அளுதுக்கிட்டிருக்கா'' என்று குழந்தை கூறி முடிக்குமுன், புதுமணப் பெண் முகத்தை அவசரமாகத் துடைத்துக்கொண்டு வாசலில் வந்து நின்ருள்.

செல்லப்பன், ''எமிலி! பாவம்; இன்றைக்கா உனக்கு இப்படி சம்பவிக்கணும்? நான்—என் தலேவிதி வேறு என்ன சொல்ல?'' என்று சொல்லும்போதே அவன் தொண்டை கம்மிற்று.

''இப்ப எனக்காக நீங்க கவலேப்படாதிங்க. தைரியமாய்ப் போய்விட்டு வாருங்க. மாமாவுக்குச் சுகம் கிடைக்கட்டும். எனக்குத் தெரியாதா?'' என்று எமிலி தைரியம் கூறினுள்.

செல்லப்பனின் நொந்த இதயத்துக்கு அவள் சொற்கள் மிகவும் இதமாய் இருந்தன.

அவன் பதில் கூறுமுன், பொம்மி ''சித்தப்பா! காரிலே நானும் வாட்டா?'' என்ருள்.

"வேண்டாம்மா. நாங்க ஆஸ்பத்திரிக்குப் போறோம். நீ அம்மாக் கிட்டயும் சித்திக் கிட்டயும் நில்லு'' என்று காரில் ஏறப் போனான்.

"சித்தப்பா! பொம்மியும் ஆச்சுபத்தி வாறே...ன்'' என்று கூவின குழந்தையை எமிலி வாரி எடுத்துக்கொண்டாள். கார் புறப்பட்டபோது செல்லப்பன் தலையை வெளியில் நீட்டிக் கையை ஆட்டியது, உதைத்து முரண்டு பண்ணும் குழந்தைக்கா, அல்லது தனக்கேதானா, என்று எமிலிக்குச் சந்தேகமாயிருந்தது.

எமிலியின் உள்ளம் அன்று குழம்பி யிருந்தால் அவளை யார் குற்றம் சொல்ல முடியும்? கணவன் வீட்டில் அவள் அடியெடுத்து வைத்த வேளை என்னவெல்லாம் குழப்பங்கள்! அப்பா வீட்டுக்குக் கூட போக முடியாத நிலை. இங்கேயும் விடிருக்கிறதே தவிரத் தன்னை அணைத்து ஆதரிக்க யாரிருக்கிறார்கள்? கலியாண வேளையில் போட்ட பூமாலை வாடுமுன், கலியாணப் பந்தல் கலையுமுன் அனாதையாய் விடப்பட்ட ஒரு அனுபவம். குழந்தை பொம்மியும் அவள் தாயுந்தான் வீட்டை நிறைத்துக்கொண்டிருந்தார்கள். லிஸி குழந்தையைச் சித்திக்கு ஆறுதலாக விட்டு விட்டு, வீட்டு வேலைகளைக் கவனித்துக் கொண்டிருந்தாள். ஆனால், லிஸிக்குத்தானே குழந்தை ஆறுதலாக இருக்க முடியும்?

செல்லப்பனுக்கோ, வீட்டிலிருந்து ஏழே மைல் தூரத்திலிருந்த ஆஸ்பத்திரியிலிருந்தாலும், வீட்டைப்பற்றிய நினைப்பில் நிம்மதியில்லை. மனைவியைப் பற்றிப் பேசுவதற்கு இடமில்லை. முதலில் தந்தைக்கு 'அட்மிஷன்' வாங்கவேண்டும். செல்லப்பன் மருத்துவக் கல்லூரியில் படிக்கிற செய்தி தெரிந்திருந்த படியால், அதில் சிரமமிருக்கவில்லை. 'அட்மிஷன்' சீட்டுக் கையில் கிடைத்துவிட்டது. ஆனால் அது அவனுக்கு வேறு வகையில் அசௌகரியமாயிற்று. தந்தைக்கு வாடகை அறை எடுப்பான் என்று டாக்டர்கள் எதிர்பார்த்தார்கள். அதற்குத் தங்கராஜிடம் வசதியில்லை. மாமனார் பணத்தை இதற்காகச் செலவிடுகிறது, செல்லப்பனுக்கும் நன்றாகத்

தோன்றவில்லை. மாமனாரிடம் பணம் கேட்கும் நினைவு எழவு மில்லை. ஆனால் அண்ணன் எதிர்பார்த்தார் என்பது தெரிய வந்தது.

"முறி எடுக்கண்டாமா லே?"

"பணம்?"

"நீ நெனச்சா வராதா?"

செல்லப்பன் தன் காதில் அது விழாத மாதிரி நடந்து கொண்டான். தங்கராஜும் பிறகு அந்தப் பேச்சை எடுக்க வில்லை. அவர்கள் கவலையெல்லாம் தந்தைக்கு இந்த வேதனை யிலிருந்து விடுதலை கிடைக்கவேண்டும் என்பதாயிருந்தது. மார்ஃபியா குத்தி வைக்கவே பெரிய பாடாய்ப் போயிற்று. ஊசியைக் கண்டதும் அன்பையனுக்கு வயிற்று வலி கூட மறந்தது போலாயிற்று. அவ்வளவு பயம், கலக்கம். மனைவி காலில் விழுந்து கெஞ்ச, மக்கள் இருவரும் சிறு குழந்தை யைத் தேற்றுவது போலத் தேற்ற, அந்தப் பெரிய வேலை வெற்றிகரமாய் நடந்தேறியது. ஐந்து நிமிஷத்தில் அன் பையனுக்குத் தூக்கம் வந்தது. செல்லப்பனும் பெருமூச்சு விட்டுக்கொண்டு படுக்கையிலிருந்து எழுந்தான்.

எதிர்பார்த்ததுபோல் விஷயம் இலகுவில் தீர்ந்து விடுவ தாயில்லை. நோய் நீடித்தது. செல்லப்பனுக்கு மனமில்லா விட்டாலும், லீவு எடுக்கவேண்டிவரும் போலிருந்தது. பரிசோதனைக்கு மேல் பரிசோதனை செய்தார்கள். நோயா ளிக்கு ஒவ்வொரு தடவையும் பிராணன் போவதுபோல் இருந்தது. வேதனை மட்டும் ஆஸ்பத்திரிக்கு வந்தது முதல் தாங்கக் கூடிய அளவுதான். வேதனை அறியாமலிருக்க மந்திரமோ, மாயமோ செய்கிறார்கள். ஊசி போடுகிறார்கள், மருந்து கொடுக்கிறார்கள். நோயாளி ஏறக்குறைய அரை மயக்க நிலையில்தான். ஆனால் டாக்டர்மாரும் நர்ஸுகளும் வந்து சூழ்ந்து கொள்ளும்போது கண்ணைத் திறக்கிறார். மிரள மிரள விழிக்கிறார். பக்கத்துப் படுக்கைகளிலுள்ள நோயாளி கள் எவ்வளவு பொறுமையாகக் கிடக்கிறார்கள் என்று எத்த

னேயோ தடவை சொல்லியாயிற்று. ஆனாலும் ஊசியைக் கண்டால் அவருக்குச் சிம்ம சொப்பனந்தான். செல்லப் பனுக்கோ, தான் டாக்டர் என்ற பெருமை இங்கே தகர்ந்து போயிற்று. அண்ணன் மட்டுந்தான் அவனை ஏதோ மதித் திருந்தார். அப்பனுக்கு அவன் ஒரு பொருட்டல்ல. எப் போதாவது அவன் அவர் கையைப் பிடித்து நாடி பார்க்கப் போனால், "பிலே, நீ என்னத்தைக் கண்டே? இவனுவ என் னத்தைக் கண்டான்?" என்று ஒதுக்கிவிடுவார். டாக்டர் மார் ஒருவரும் அவனைக் கலந்துகொள்வதில்லை. அம்மையும் அப்பன் கால்மாட்டில் தூங்கி வழிந்துகொண்டிருப்பதும், அவர் முனகும்போது விழித்துப் புலம்புவதுமாக இருந்தாளே தவிர, யாரையும் நம்பி இருந்ததாகத் தெரியவில்லை.

வெளியே காப்பி குடிக்கப் போய்விட்டுத் திரும்பிவந்த தங்கராஜ் தாயைப் பார்த்து, "எப்படி இருக்கம்மா?" என்று கேட்டான்.

அதற்கு அவள் "நா என்ன கண்டேன்? ஒரு அரிக்க ஆயுத்து இருந்தா சாவமாட்டாரு. ஒந்தம்பியெக் கேளு" என்று சொல்லிவிட்டாள். அவள் குரலில் ஒரு வெறுப்பு இருந்தது.

மூன்றும் நாள். உடுதுணிக்கு மறு துணியில்லை. நோயாளியின் மனைவியின் சேலை மிக அழுக்காயிருந்தது. தங்கராஜ் தம்பியிடம் "லே, நா வீட்டுக்குப் போயி கொஞ்சம் சாமானங்கள் எடுத்துக்கிட்டு வாறேன்" என்று சொல்லி கிளம்பி விட்டான். செல்லப்பனுக்கு ஒரு கணம் நினைவு எழுந்தது. தமையன் தன்னைப் போகச் சொல்லவேண் டாமா, தன் நிலைமை அவனுக்குத் தெரியாதா, என்று எண் ணினான். வருத்தமாகக்கூட இருந்தது. ஆனால் அடுத்த கணம், அண்ணனுக்கு இப்போது என்ன ஞாபகமிருக்கப் போகிறது. தன்னைச் சமாதானப் படுத்திக்கொண்டான். தவிரவும், தான் ஒரு டாக்டர் என்ற நிலையில், தந்தையின் பக்கத்தில் இருக்கவேண்டும் என்று அண்ணன் நினைத்திருக் கலாம். அது நியாயமுந்தான். அண்ணனுக்குக் கலியாண

மாகி வருஷம் எத்தனையோ ஆகிறது. இப்போதைய புது மாப்பிள்ளையைப் பற்றி அவருக்கு என்ன கவலை?

செல்லப்பன் நோயாளியின் கட்டிலின் பக்கத்தில் நின்று கொண்டு 'கேஸ் ஷீட்'டுகளைப் புரட்டிப் பார்த்துக்கொண்டிருந்தான். அதுவும் நர்ஸுகள் இல்லாத நேரந்தான் பார்க்க வேண்டும். திடீரென்று அவனுக்கு அடிவயிற்றில் தீப்பிடித்ததுபோல் இருந்தது. 'கேஸ் ஷீட்'டில் 'கான்சர்' என்று எழுதி அதன் எதிரில் கேள்விக்குறியும் இட்டிருந்தது. ஸ்டூலில் அப்படியே உட்கார்ந்துவிட்டான். முகம் 'குப்' பென்று வியர்த்தது. அவன் பார்வை அர்த்த மில்லாமல் வாசலைத் தேடிப் போயிற்று. அங்கே இரண்டு கண்கள் கண்ணீரில் மிதப்பதாக அவனுக்கு ஒரு திடீர்ப் பிரமை. அவைகள் அவன் மனைவியின் கண்கள்தான். ஆனால் இப் போது அவன் உள்ளத்தில் இரக்க உணர்ச்சி ஒன்றும் எழ வில்லை. உள்ளமெல்லாம் வறண்டுபோய்க் கிடந்தது. தன் கண்களைக் கசக்கிக்கொண்டு பார்த்தபோது, வாசல் வெறிச் சோடிக் கிடந்தது.

அவன் தாய், "ஏம் பிலே இருந்து ஒறங்கியே? வெளிலே போய் கொஞ்சம் ஒறங்கிக்கிட்டு வாயேன்" என்றாள்.

அந்தக் குரலைக் கேட்டு விழித்த தந்தையின் கண்களைச் சந்திக்க விரும்பாத செல்லப்பன் வேகமாக வெளியே சென்று விட்டான்.

எவ்வளவு நேரம் வராந்தாவில் நின்றிருப்பானோ. அவனுக்குத் தெரியாது. தங்கராஜ் திரும்பி வந்து கொண்டிருந்தார். அவர் கையில் ஒரு சிறுபை இருந்தது. போனவர் ஏன் இவ்வளவு சீக்கிரம் வந்து விட்டார்? பாவம், அண்ணனுக்குத்தான் முகத்தில் எவ்வளவு கவலை! என்னவெல்லாம் மறந்துவிட்டு வருகிறாரோ!

"அண்ணா! அம்மைக்குச் சேலை இருக்கா?"

இருக்கு" தங்கராஜ் பையைத் தம்பியிடம் கொடுத்தார். அதில் சேலை மட்டுந்தான் இருந்தது.

"நமக்குத் துணி? ஃபிளாஸ்கு? என் சூட்கேஸைக் கொண்டு வரலாமாயிருந்ததே?"

"நில்லுடா, காரியம் கெட்டுப்போச்சு."

"...............?"

"அவளைக் கூட்டிக்கிட்டு போயிட்டானுவ, மிருகப் பயலுவ."

"எவளை?"

"ஒம் பெண்டாட்டியெ."

செல்லப்பனுக்குப் பூமி சுழன்று வருவது நன்றாகத் தெரிந்தது.

"என்ன சொல்யிரிண்ணு விளங்கலியே?"

"சொல்ல என்ன இருக்கு? ஒம் மாமன் வந்திருந்தானும் அப்பனெப் பத்தி விசாரிக்க. மவ ஒத்தையிலேயிருந்து அளுதுக்கிட்டிருந்தாளாம். வாசல் துறந்ததும், இவ லிஸி ஓடிப் போயிருக்கா. அவ மொகத்தெப் பாக்கவே இல்லியாம். மவகிட்டே, "உன் ஹஸ்பன்ட் எங்கே"ண்ணு கோவத்திலே கேட்டானும். அவ காரியத்தெ சொல்லியிருக்கா. 'இறங்கு, உன்னெக் கவனிக்க ஆளிருக்கு'ண்ணுனும். அவ அளுதிருக்கா. "இப்ப நான் வந்தா என்ன நினைப்பா"ண்ணுளாம். "நான் இருக்கேன் அதைப் பார்க்க இறங்கு"ண்ணுனும். லிஸி சொல்லிப் பார்த்திருக்கா. "பிள்ளையை வீட்டிலே கொண்டு விட்டுவிடக் கூடத் தெரியாதா இவனுக்கு? படித்த லட்சணமா"ண்ணுனும். லிஸி ஒம் பெண்டாட்டிக் கிட்டயும் சொல்லிப் பாத்தாளாம். கையெப் புடிச்சிளுத்துக் காரிலே போட்டுக் கிட்டே பொயிட்டானும்" என்று மூச்சு விடாமல் அடுக்கினர் தங்கராஜ்.

சற்று நேரம் செல்லப்பன் ஒன்றும் பேசவில்லை. முதலில் அவனுக்கு ஏற்பட்ட சந்தேக உணர்ச்சி, இரத்தக் கொதிப்பு எல்லாம் தமையன் பேச்சைத் தொடரும்போது அடங்கிப் போயிற்று. விஷயம் இவ்வளவுதான் என்று புரிய ஆரம்

பித்தது. மாமனாரிடம் நியாயமாக வரவேண்டிய கோபம் ஏற்பட ஓரிரு நிமிஷம் பிடித்தது.

தங்கராஜ் மூச்சு வாங்கினதும், "நல்ல மாமனார்தான்!" என்று கூறினார்.

செல்லப்பன் பட்டென்று, "நீர் பார்த்த மாமனார் தானே!" என்றான். எங்கோ, அவன் உள்ளத்தில் மறைந்து கிடந்த கசப்பு அவனையும் அறியாமல் வெளியே தலையைக் காட்டிவிட்டது. பிறகுதான் தன் நாவைக் கடித்துக்கொள்ள வேண்டும் போலத் தோன்றிற்று.

அண்ணன் பதில் பேசவில்லை. அவரை ஆற்றும் முறையில் செல்லப்பன் பேச்சைத் தொடர்ந்தான்:

"அண்ணா, இப்ப அம்மைக்கிட்ட ஒண்ணும் சொல்ல வேண்டாம். சும்மா அப்பனைக் கலவரப் படுத்துவா. வாரும் அப்பன் கிட்டெ. அவர் நிலைமை அவ்வளவு நல்லாயில்லெ."

"............ம்?"

தங்கராஜ் தம்பியின் முகத்தை ஊடுருவுவதுபோலப் பார்த்தார். செல்லப்பனுக்கு நன்றாகத் தெரியும், அண்ணன் படிக்காவிட்டாலும் மடையன் அல்ல என்று. கான்சர் என்றால் புரியும். ஆனால் வார்த்தை நாவை விட்டு வர மறுத்தது. சும்மா தலையை அசைத்துவிட்டு, என்றுமில்லாத அருமையுடன் அண்ணன் கையைப் பிடித்துக்கொண்டு வார்டின் உள்ளே அழைத்துச் சென்றான்.

நோயாளியின் மக்கள் இருவரும் கட்டிலின் இரு பக்கத்திலும் நின்றார்கள்.

செல்லப்பன் விஷயம் தெரிந்தவன், உலர்ந்த மரமாக நின்றான்.

தங்கராஜ் விஷயம் தெரியாதவர், ஈரத்தால் பளபளக்கும் கண்களோடு மௌனமாக நின்றார்.

டக் டக் டக்.

பெரிய டாக்டர் வருகிறார். இளைஞர்களின் பணிவான வணக்கத்துப் பதிலாக இலேசாகத் தலையை அசைத்துவிட்டு நோயாளியிடம் செல்லுகிறார். 'கேஸ் ஷீட்'டுகளைப் புரட்டுகிறார். பிறகு, அதில் எதையோ குறித்துவிட்டு யார் முகத்தையும் பார்க்காமல், அடுத்த படுக்கைக்கு விரைகிறார். பின்னால் தள்ளு வண்டி ஒன்று வந்து நிற்கிறது. வெள்ளைத் தொப்பியும் வெள்ளை உடுப்பும் தரித்த நர்ஸுமார் இருவர், "பெட் நம்பர் 25, எக்ஸ்-ரே" வார்டு ஸிஸ்டர்மாரிடம் கூற' செல்லப்பனும் தங்கராஜும் விலகிக் கொள்கிறார்கள்.

அன்பையன் குழந்தை மாதிரி மிரள மிரள விழிப்பது பரிதாபமாயிருந்தது. இனம் தெரியாத ஒரு பயம் அவரைச் சூழ்ந்து கொண்டது. அந்த பயத்தை ஆஸ்பத்திரியில் யாரும் பொருட்படுத்துவதாகத் தெரியவுமில்லை. செல்லப்பன் டாக்டராக இருந்தாலும் தந்தையின் உணர்ச்சிகள் அவனையும் தாக்கின. ஒரு ஸிஸ்டரிடம், மெதுவாக, "நானும் கூடப் போகலாமோ?" என்று கேட்டான். "ஊஹூம்" என்று மறுத்த அவளிடம், "நான் மெடிக்கல் காலேஜ் ஸ்டுடன்ட், ஸிஸ்டர்" என்று தாழ்ந்த குரலில் விளக்க, "ஓ. கே" என்று ஸிஸ்டர் தள்ளு வண்டிக்குப் பின்னால் சைகை காட்டினாள். தள்ளு வண்டியிலிருந்து அவனைத் திரும்பிப் பார்த்த கண்களின்—வேதனை நிறைந்த கண்களின்—நன்றியுணர்ச்சி அவன் வயிற்றில் சூடாக இறங்கிற்று.

இருட்டறையில் அன்பையன் மகன் கையைப் பற்றிக் கொண்டார். அந்த இயந்திரங்களின் இடையே ஏதோ ஒரு மனித ஆதரவு அவருக்குப் பெரிய ஆறுதலாகப் பட்டது. டாக்டர்களால் கொடுக்கக் கூடாத ஆறுதல் அது. அந்த ஒரு நிமிஷம், தன்னை டாக்டராகப் படிக்கவைத்த விதியை, தன்னைத் தந்தைக்கு இப்படி உதவியாக வைத்த விதியை, வாழ்த்திக் கொண்டான் செல்லப்பன். ஆனால் அதே விதிக்குத் தன் தந்தையைக் காப்பாற்ற முடியுமா? தனக்கும் தன் புது மனைவிக்கும் இடையே வந்து முளைத்திருக்கும் மனத் தாங்கலை எளிதில் மாற்ற முடியுமா? அண்ணனைப் போல

அவனுக்கு மனைவி வீட்டாரோடு அத்தனை கோபம் இல்லை. பாவம். எமிலி என்ன செய்வாள்? அழுவாள். அவள் கண்கள்—அந்த மறக்க முடியாத பார்வையை அவனுக்கு நேராகத் திருப்பின கண்கள்—உண்மையையும் இரக்கத்தையும் தெரிவித்தன. அவள் என்ன செய்வாள்? மாமனுருந்தான்—அவரும் என்ன மரமா கல்லா, புது மணப்பெண்ணுன செல்வ மகளின் தனிமையைந் பார்த்துக் கொண்டிருப்பதற்கு? என்றுலும் இந்த பலாத்காரம் வேண்டாம். இந்த சந்தர்ப்பத்தில். பேச்சு; என்ன பேச்சு பேசுகிருர்? பணக்காரர் குணம் போலிருக்கிறது. தனக்கும் தெரியாமல் போயிற்று. அவளை அவள் வீட்டில் தானே கொண்டு விட்டிருக்க வேண்டும். இப்போது என்னதான் கெட்டுப் போயிற்று? அந்த மனுஷன் கோபம் அவரோடு. அவர் எங்கேதான் போய் விடப் போகிருர்?—ஆனல் வீட்டில் எவ்வளவு தொல்லைகள், பூசல்கள் வரும்? அம்மை அறிந்தால் இலேசில் விட்டுவைப்பாளா? பூகம்பத்தைக் கடந்துதானே அமைதியைக் காண வேண்டியிருக்கிறது? அந்தப் பூகம்பத்தை எதிர்பார்த்துத் தானிருந்தான் செல்லப்பன்.

அப்பனுக்கு ஆபரேஷன் என்கிருர்கள். ஆபரேஷன் செய்து பார்க்கலாமாம். என்னத்தைப் பார்க்கிறது? செல்லப்பனுக்கு மன அமைதியில்லை. நம்பிக்கையுமில்லை. ஆபரேஷன் தியேட்டருக்குள் அவனை அனுமதிக்கவில்லை. அவனைப் பொறுத்த வரையில் அதுவும் நல்லதாகப் போயிற்று. தனது திடத்தில், தைரியத்தில், இப்போதெல்லாம் அவனுக்கு நம்பிக்கையில்லை. எதிர்காலம் வெறும் சூன்யமாகத் தெரிந்தது. என்றுலும் அன்பையனுக்கு, தியேட்டருக்கு எடுத்துச் செல்லப்படும் வரை, தன்னுலான தைரியம் கூறினுன்.

'அப்பன் ஒன்றுமே அறியமாட்டீர். சுகமாக உறங்கிக் கொண்டிருப்பீர். கண் முளிச்சா வேதனையும் இருக்காது கட்டியும் இருக்காது.'' என்றபோது அன்பையனுக்குக் கூட ஒரு அமைதி பிறந்தது.

ஆபரேஷனுக்குப் பிறகு ஒன்றும் விடியவில்லை. வலி போகவில்லை. கட்டியை எடுக்கவும் முடியவில்லை. அறுத்த இடத்தில் நோவு இருந்தது. ஊசி போடும் நோவு வேறு. "எனக்கு ஏன் இப்படிச் செய்கிறாய்?" என்ற பாவனையில் மகன் முகத்தைக் காணும் போதெல்லாம் அன்பையன் விழிக்கிறார். செல்லப்பனின் இதயம் கண்ணீராக உடைகிறது.

இந்த நரக அனுபவம், 'கிழவனும் சாகவில்லை, கட்டிலும் ஒழியவில்லை' என்ற நிலை, நீடிக்கவில்லை. மூன்றாம் நாள் அன்பையன் மயக்கத்தில் ஆழ்ந்து விட்டார். செல்லப்பன் பதைத்த பதைப்புக்கும், அவன் ஸிஸ்டர்களிடமும் டாக்டர்களிடமும் தன் குறுகிய அறிவுக்கெட்டின சிகிச்சைகளைப் பற்றிக் கேட்டுக் கொண்டதற்கும் அளவில்லை. அவனுக்கு யார் செவி கொடுக்கிறார்கள்? பெரிய டாக்டருக்கு அவன் ஒரு கத்துக்குட்டி மாத்திரம், ஸிஸ்டர்களோ, கேஸ் ஷீட்டையே அவன் கண்ணில் படாமல் மாற்றி விட்டார்கள். ஒரு டாக்டர் அவனைப் பேஷண்டுக்குப் பக்கத்தில் அனுமதிக்கக் கூடாது என்று வேறு அச்சுறுத்துகிறார். மௌனமாகத் தாங்குவதல்லாமல் வழியில்லை.

நோயாளியைச் சுற்றித் திரைச் சீலைகளை விரித்து, பிராண வாயுக் குழலைக் கரகர வென்று இழுத்து வந்தபோது செல்லப்பனுக்குப் புரிந்தது. தாயும் மக்களும் திரைச்சீலைக்கு வெளியில், டாக்டர் மாரும் நர்சுகளும் உள்ளே. சீக்கிரமாகவே அவர்கள் வெளியேறி விட்டார்கள். போகும்போது வெளியே காத்து நின்றவர்கள் முகங்களில் விழிக்கவுமில்லை. அவசரமாக மூவரும் உள்ளே விரைந்து படுக்கையின் மேல் சென்று விழுந்தார்கள்.

இல்லை, அப்பன் உயிர் இன்னும் போகவில்லை கண்ணை விழிக்கிறாரே! எதையோ, எங்கேயோ கண்களால் தேடுகிறாரே! ஜெனரல் வார்டில், சுற்றித் திரை விரித்திருக்கும் போது, இங்கே இழவு ஜன்னலா இருக்கிறது. வெளியில் பார்க்க? வெளியே காகம் கரைவது கேட்கிறது. கர்ண கடூர

மான குரல்தான். ஆனால் அப்பன் இனி அதைக் கேட்கப் போவதில்லை. அதை இப்போதைக்குக் காணவாவது முடியுமோ? கண்களால் எதைத்தான் தேடுகிறாரோ, யார் கண்டார்கள்?

செல்லப்பன் குனிந்து நோயாளியின் முகத்துக்கு நேராகத் தன் முகத்தைக் கொண்டு போகிறான்.

"கலயம் நூறுக்கு விலை என்ன பிலே?" என்று கேட்கிறார் அன்பையன். பழைய ஞாபகங்கள்.

திடீரென்று தந்தையின் உடலில் சலனமில்லை என்பதை உணர்கிறான் செல்லப்பன். போராட்டம் முடிந்துவிட்டது. உயிர் எப்படி நீங்கிற்று? எந்த வழியாகப் போயிற்று! அந்த உயிர் எப்படி இருந்தது?

வெளியே காகம் கரைவது கேட்கிறது. அம்மை நல்ல வேளையாக ஒப்பாரி வைக்காமல் சடலத்தின் மேல் விழுந்து கிடக்கிறாள். நர்சுமாரைக் கண்டு பயமோ?

இனி ஆஸ்பத்திரியிலிருந்து வீடு திரும்பவேண்டும், வெற்றுடம்போடு. உதவிக்கு ஆளும் நல்லவேளையாகக் கிடைத்தது. அவர்கள் உறவினனான தங்கையன் நிலைமையை விசாரித்துப்போக வந்தவன், வாடகைக்குக் கார் கொண்டு வர விரைந்தான். காரும் துக்கச் சுமையோடு நகர்ந்தது.

வீட்டில் எட்டினாலும் மனச்சுமை நீங்கவா செய்கிறது? ஆனால் ஆண்கள் என்ற நிலையில் தங்கராஜும் செல்லப்பனும் செய்யவேண்டிய காரியங்கள் எத்தனையோ. நாகர்கோவிலுக்குத் தந்தியடிக்க வேண்டியிருந்தது. தபாலாபீஸ் மூன்று மைல் தொலைவில் இருந்தது. ஆகவே அதைத் தங்கையனிடமே ஏற்பித்திருந்தார்கள். காலையின் 'அடக்கம்' என்பதையும் அதில் தெரிவித்திருந்தார்கள்.

இரவு எப்படியோ கழிந்தது, சடலத்தை உரிய மரியாதைகளுடன், வீட்டின் நடு அறையில் கிடத்தியிருந்தார்கள். சுற்றிலும் மெழுகு வர்த்திகள் மினுக் மினுக் என்றன. அது செல்லப்பனின் யோசனை. வெள்ளைக் கோடியால் மூடியிருந்த

கடலத்தின் முகமும் கைகளும் மட்டும் வெளியே தெரிந்தன. வெளியே தெரிந்த மட்டும் தோல் சொர சொர வென்று மரப்பட்டை மாதிரி இருந்தது. வயிறு இலேசாக உப்பி, போர்வையை உயர்த்திக் காட்டியது போலத் தெரிந்தது. அந்தப் போர்வையின் மீது சில பூக்கள் சிதறிக்கிடந்தன. அதுவும் செல்லப்பனின் யோசனைதான். பக்கத்தில் கண் விழித்திருந்தவர்களுள் செல்லப்பன் பார்வை மட்டும் வாசலையே நோக்கியிருந்தது. மனைவி வரப்போகிற இந்த சமயத்தில் பழங்கணக்கு ஒன்றும் எடுபடாது என்ற எண்ணத்தில் ஆறுதல் கூட இருந்தது. என்றாலும் அவள் இரவிலேயே வந்திருக்கலாம். நேரமும் விடிந்துவிட்டது.

அவள் வரவேயில்லை. அடக்கத்துக்கு அறிகுறியாக ஆலயத்தில் மணி அடித்தாயிற்று. ஊர்க்காரர்கள் வந்து கொண்டிருந்தார்கள். பலரும் அன்பையனைப் போலப் பனையேற்றுத் தொழிலாளர்கள்தாம். ஏழைகள் இரண்டொரு வயோதிகப் பெண்களும் உண்டு. உபதேசியாரும் வந்துவிட்டார். நம்ப வேண்டாம் உலகை நம்ப வேண்டாம் என்ற கீர்த்தனைப் பாட்டு அமர்ந்த குரலில், பாடப்பட்டது. பெட்டியில் சடலம் வைக்கப்பட்டபோது, அன்பையன் மனைவியின் ஒப்பாரி உச்சஸ்தாயியில் கேட்டது. பெட்டி புறப்படுவது வரை அது அடங்கவேயில்லை. பெட்டியை ஆர்வத்தோடு சுமந்தவர்களுள் தங்கராஜும் ஒருவர்.

பெட்டிக்குப் பின்னால் ஆண்கள் மட்டுமே சென்றார்கள். ஆனால் பொம்மி சித்தப்பாகூட ஓட்டமும் நடையுமாகச் சென்றாள். அன்பையன் தன் சொந்த உழைப்பினால் வாங்கின அந்த விளையிலேயே கிழக்கு ஓரத்தில் இரவோடு இரவாக, குழி ஒன்று தயாராகி யிருந்தது. தங்கராஜும் செல்லப்பனும் சலனமற்றுக் குழிக்கரையில் நின்றிருந்தார்கள். தங்கராஜின் பக்கத்தில் வைத்தியர். உபதேசியார் இறந்து போனவரின் உறவினர்களின் ஆறுதலுக்காக ஜெபம் பண்ணினார். பெட்டி குழிக்குள் இறக்கி வைக்கப்பட்டது. தங்காராஜும் செல்லப்பனும் அழுதுகொண்டே மண்ணை அள்ளிப்

போட்டார்கள். இதன் பொருள் என்ன என்று உணராமல் திகைத்துப் பார்த்துக் கொண்டு நின்ற பொம்மி தானும் இரண்டு கையிலும் மண்ணை வாரிப் போட்டுவிட்டு, "தித்தப்பா, அப்பச்சி இனி எப்ப வரும்?'' என்று கேட்டாள்.

செல்லப்பன் குழந்தையை வாரி எடுத்து முத்தமிட்டு, "அப்பச்சி இனி வராதம்மா. நாமதான் அப்பச்சிக் கிட்டெ போணும்'' என்ருன்.

"எப்ப போணும்? நாளைக்கா?'' என்று வினவினுள் குழந்தை.

அதற்குள் தங்கராஜ் குழந்தையை அவசரமாக வாங்கிக் கொண்டு, "வா மோனே வா;என்ன சொன்னே? வீட்டுக்குப் போகலாம்'' என்று மூக்கைச் சீந்திக்கொண்டே கிளம்பினுர். வீட்டில் அவர் தாயின் ஒப்பாரி அவரை வரவேற்றது. பின் வாசலில் பார்த்துக்கொண்டே நின்ற மனைவி லிஸி, குழந்தையை வாங்கிக்கொண்டு உள்ளேதிரும்பினவள், கணவனைப் பார்த்து, "எண்ணாலும் இந்த எமிலி வந்தா இல்லியே!'' என்ருள்.

"ஸு, பையப் பேசு. அவன் இந்நாவாருன். யோகங் கெட்ட பய. நான் நல்லதுக்குச் செய்தேன். அவனுக்கு இப்பிடி வந்து சேந்துது'' என்று கூறிக்கொண்டே தங்கராஜ் வாசல் படியில் ஏறினுர். திரும்பிய லிஸியின் பெருமூச்சு அவருக்குக் கேட்டது.

செல்லப்பன் சற்றுத் தூரத்தில் பின்தொடர்ந்து வந்தவன் வாசலின் வெளியே நின்று விட்டான். அவன் மனம் முன்னைவிட இரு மடங்காகக் கனத்தது. காட்டில் அநாதையாக நிற்பது போன்ற ஒரு உணர்ச்சி.

## 5. மின்னலும் இடியும்

நாட்கள் சென்றுகொண்டே இருந்தன. செல்லப்பன் மாமனாரைப்பற்றி வாய் திறக்கவில்லை. அதிலிருந்தே அவன் எவ்வளவு வேதனைப் படுகிறான் என்று அவன் அண்ணன் ஊகித்துக் கொண்டார். 'லீவு'ம் தீரப்போகிறது. கையி லிருந்த பணமெல்லாம் அடக்கத்துக்குச் செலவாயிற்று. இனி மாமனார் கையை எதிர்பார்க்க வேண்டியதுதானே? அதை யார் செல்லப்பனிடம் சொல்லுவார்கள்?

தாய்தான் அடுப்படியும் கரியுமாக இருந்தவள் மூக்கைச் சிந்திக்கொண்டு மகனிடம் வந்தாள்.

"அப்பா மோனே! ஒனக்கு பெண்டாட்டி இல்லியா? நீ இப்பிடி சும்மா இருந்தா?''

செல்லப்பன் அவளை விழித்துப் பார்த்த பார்வையில் அவள் எரிந்து போயிருக்க வேண்டும்.

"மூத்த மகனிடந்தான் கேட்டுப் பாரேன்! என் பெண் டாட்டி காரியம் அவருக்குத்தானே தெரியணும்?'' என்றான்.

அவள் எழுந்து புலம்பிக்கொண்டே ஏதோ காரியமாக வெளியே சென்றாள்.

ஆனால், இதைக் கேட்டுக்கொண்டே வீட்டினுள்ளே ஏறிவந்த தங்கராஜ் தம்பதிகள் வாசலில் நின்றுவிட்டார் கள். பொம்மி மட்டும் துள்ளிக் குதித்துக்கொண்டு, 'சித் தப்பா' என்று அவனிடம் ஓடிவந்தாள்.

தங்கராஜ் கம்மிய குரலில், 'ஏம் பிலே! லெவலில்லாம பேசியே?' என்று கூறிவிட்டு அங்கே நிற்காமல் நேரே அடுக்களைக் குள்ளே போய்விட்டார்.

அவரைப் பின்தொடர்ந்து வந்த லிஸி, ''இங்கே பாருங்க நீங்களும் இப்படி சும்மா இருந்தா நல்லாயிருக்கா? ஒரு குடும்பம் கெட்டளிஞ்சு போவுதே!'' என்று கணவனிடம் கூறினாள்.

''அதுக்கு என்னை என்ன செய்யச் சொல்யே?''

''எனக்குத் தோணுது தந்திபோய்ச் சேரலேண்ணு.''

''ஆமா, ஒனக்கு போஸ்டாபீஸிலே உத்தியோகம். அவனுக ஒண்ணும் சும்மா சம்பளம் வாங்கலெ. சோலிக்குத் தான். தந்தியெல்லாம் போய்ச் சேந்துது. கவலைப் படாதே. அவனுகளுக்குப் பணக்கொளுப்பு. ஒங்கிட்டெத்தானே அண்ணு அப்பிடிச் சாடினான்?''

''எங்கிட்டெ சாடினாரு. சொந்த மருமவன் கிட்டெ அப்பிடிக் காட்டுவாரா? தங்கையன் கிட்டெ ரூபாயெக் குடுத்து விட்டியளே, ரஸீது கொண்டுவந்தானா?''

அப்போதுதான் தங்கராஜுக்குச் சந்தேகம் தட்டியது. தன்னைத் தானே சமாதானப்படுத்தும் பாவனையில், 'சே, அப்படிச் செய்வானா? எண்ணுவது காரியம் பப்ளிக்கை ஆவுமிண்ணு தெரியாதா?''

''எண்ணுவது ஆனா அவனுக்கென்ன? இது நல்லாயில்லே. இப்ப இதெச் சரிப்படுத்தாட்டா, பெறவு எங்கெ போய் நிக்கும் தெரியுமா?''

''அதுக்கு நான் என்ன செய்யணும்?''

''நீங்க ஒண்ணு நேரே போய் விசாரிச்சிக்கிட்டு வரப் பிடாதா?''

தங்கராஜுக்குக் கோபம் வந்தது. ''ஒனக்க மாப்பிளையெ அந்தப் பணத்திமிரு பிடிச்சவனுவ அவமானிச்சு அனுப்பினா, ஒனக்கு ஒண்ணுமில்லெ. ஆனா எனக்குப் பொறுக்க முடியாது. அதுக்கு வேறெ ஆளெப் பாத்துக்க.''

அவள் கண்களில் நீர் நிறைந்தது. முன்னால் எமிலியை ஒரு நிமிஷம் தோன்றி மறைந்தது போலிருந்தது.

"ஒங்க பெருமைக்கு ஒங்க தம்பி பலியா?"

"ஏன், அவன் ஆம்பிள்ளெதானே? அவன் போய்ப் பாக்கட்டேன், வேணுமானா?"

"வீட்டுக்கு மூத்தவர் நீங்க சொல்லாமெ, அதுபோகுமா?" லிஸி புருஷனின் தம்பியை அஃறிணையில்தான் குறிப்பிடுவாள்.

பேச்சு அடுக்களையில் நடந்தாலும் நடு அறையில் நன்றாக எட்டினது.

தங்கராஜ் உரத்த குரலில். "ஏ செல்லப்பா! இவ சொல்யதெக் கேட்டியா?" என்றார்.

செல்லப்பன் சோர்ந்த குரலில், "நல்லாக் கேட்டேன். நான் எங்கெயும் போகலே. தந்தியெல்லாம் போய்ச் சேர்ந்திருக்கும். தங்கையன் அப்படி நமக்குச் செய்யக்கூடியவன் அல்ல" என்றவன், அண்ணியின் நச்சரிப்பிலிருந்து தப்புவதற்கு வேண்டி, "நான் தந்தியின் ரெசீது கண்டேண்ணா. எங்கேயோ கிறிப் போட்டேன். தங்கையனை இப்படிச் சந்தேகப்படுவது மகா பாவம்" என்று சொல்லி வைத்தான்.

அதற்குப் பின் உள்ளே பேச்சொன்றும் கேட்கவில்லை. ஆனால் பின் புறத்திலிருந்து பெரிய 'கடவத்'தில் உலர்ந்த சருகுகளை அடுக்களைக்குள் கொண்டுவந்து கொண்டிருந்த தாய் வெற்றிலையை வாசலுக்கு வெளியே துப்பிவிட்டு, "ஆமா. தங்கையன் இல்லாட்டா நாம என்ன செஞ்சிருப்பம்? அவன் என்ன செய்தான்? இம்பிடும் செஞ்சி வச்சானே, வீட்டுக்க மூப்பன் எனக்க பிள்ளெ? அவனெ சொல்லணும். எம்பிள்ளெ வேண்டாம் வேண்டாமிண்ணு சொன்னானே. அவனெ விட்டு வச்சானா? பிடிச்சிக் கெட்டி வச்சான். அவன், பெண்டாட்டி வீட்டுக்குப் போயிருவான். தம்பிக்குத்தான்

பெண்டாட்டி இல்லாமெ அடிச்சான்'' என்று குறம் பாடினுள்.

அன்பையன் மறைவுக்குப் பிறகு, தன் மூத்த மகன் அடுத்த விளையிலிருந்த மனைவி வீட்டுக்குப் போகிறதே அவளுக்குப் பிடிக்கிறதில்லை. ஆனுல், இதற்குத் தங்கராஜ் பதில் கூறுவதற்கு முன், செல்லப்பன் ''பேசத் தெரியாட்டா சும்மாயிரம்மா என்று ஒரு அதட்டு அதட்டினுன்.

தங்கராஜ் தம்பியை ஓரக்கண்ணுல் ஒரு பார்வை பார்த்துவிட்டு, தலையைக் கீழே போட்டுக்கொண்டு விடு விடென்று வாசல் வழியாக இறங்கிப் போய்விட்டார். அவர் தாய்க்கும் மனைவிக்குங்கூட ஒன்றும் கேட்க இடமளிக்க வில்லை. அவர்கள் கண்டார்களா என்ன, அவர் நேரே, நின்ற கோலத்தோடேயே, நாகர்கோவிலில் தம்பியின் மாமனுர் அரண்மனைக்குள் நுழையப்போகிருரென்று?

வாசல் திறந்தேதான் வைக்கப்பட்டிருந்தது. வாசலில் ஒரு பக்கம் ஒரு பெரிய அல்சேஷியன் நாய், கட்டிப் போடப் பட்டிருந்தது. ஒரு உறுமலோடு அவரை வரவேற்றது. அந்த நாய்க்கும் நாயின் சொந்தக்காரருக்கும் ஏதோ ஒற்றுமை இருப்பதாகத் தோன்றியது. உள்ளே கூடத்தில், ஸோபா ஸெற்றிகளெல்லாம் செல்வந்தர் வீட்டுக்குரிய முறையில் அழகாகப் போடப்பட்டிருந்தன. அவற்ருேடு ஓரிரு அலங் காரப் பொருட்களும், ஒரு நிலைக்கண்ணுடியும் இருந்தன. கண்ணுடியில் தன் உருவத்தைப் பார்த்தபோதுதான் தங்க ராஜுக்கு தன்னைப் பற்றிய நினைவு வந்தது. முகம் வழித்து விட்டு வந்திருக்கலாம். அன்றுதான் வண்ணுன் கொண்டு வந்த வெள்ளைச் சட்டை ஒன்று மடிப்புக்கலையாமல் பெட்டிக் குள் இருந்தது. ஆனுல் பெட்டி பனைவிளையில் அல்லவா இருக்கிறது?

தங்கராஜுக்குக் கதவைத் தட்ட வேண்டும் என்ற இங் கிதம் தெரியவில்லை. வாசலில் பொருத்தப்பட்டிருந்த "காலிங் பெல்'' அவர் கண்ணில் படவுமில்லை. பட்டிருந்தா

லும் அவருக்கு அது என்னவென்று புரிந்துமிருக்காது. ஆகவே, நடுக் கூடத்தில் நின்றுகொண்டு, உரக்கக் கனைத் தார். மாடிப்படி வழியாக யாரோ தடதடவென்று இறங்கி வருகிறார்கள். வேறு யாருமில்லை, அவள்தான். தம்பி மனைவியேதான். கையில் ஒரு புத்தகம் முகத்தில் தூங்கி வழிகிற பாவம். ஒரு தங்கராஜைக் கண்டவள், திடுமென விழிப்புற்றவள் போலப் பார்த்துவிட்டு, "பப்பா!" என்று உரத்த குரலில் அழைத்துக் கொண்டே பக்கத்து அறைக்குள் ஒடி மறைந்தாள். அவள் நடந்துகொண்ட மாதிரி ஒரு சிறு குழந்தையைத்தான் தங்கராஜுக்கு நினைவுறுத்தியது. பாவம் சிறுபெண்தானே? அவள் எதைக் கண்டாள்?

லிஸி அவள் சார்பில் வாதாடுவது சரியாகத்தானே இருக்கிறது? ஆனாலும் நின்று ஒரு வார்த்தை. ஒரே ஒரு வார்த்தை மரியாதைக்காகப் பேசிவிட்டுப் போயிருக்கலாம். என்ன மாதிரிப் பெண்ணாக இவளை வளர்த்து வைத்திருக் கிறார் தகப்பனார்? போனவள் எங்கேதான் போய்விட்டாள்? அப்பா மடியில் கொஞ்சவா? அந்த அழையா விருந்தாளிக் குப் பொறுமை போய்க் கொண்டே இருந்தது.

அவள் தகப்பனார்தான் அடுத்த அறையிலிருந்து நகர முடியாமல் நகர்ந்து வந்து கொண்டிருக்கிறார். செருப்பு தரையில் உராய்கிறது. வருகிற வழியில் ஒரு கணம் நின்று மின்சார விசிறியின் ஸ்விச்சைத் தட்டிவிட்டு, ஸோபாவில் வந்து அமர்ந்து கொள்கிறார்.

தங்கராஜ் நின்று கொண்டிருந்தார். அவர் பார்வையெல் லாம் அந்தப் பெரிய மனிதரின் முகத்தில் இல்லை, முகபாவத் தின் மேல் இருந்தது.

அந்த முகத்தில் ஈயாடவில்லை.

அறைவாசலில், புதுப்பெண் எமிலி, அவர் செல்வ மகள் வந்து நின்றாள்.

"நீ உள்ளே போம்மா."

அவள் போய்விட்டாள்.

"என்ன விசேஷம்?"

தன் மாமனாராக இருந்திருந்தால் தங்கராஜ் மறு பேச்சின்றித் திரும்பிப் போயிருப்பார். ஆனால் இவர் தம்பியின் மாமனார். ஒன்றுமறியாத, குழந்தையைப் போன்ற தன் தம்பி, தன்னால்தான் இங்கே மாட்டிக் கொண்டான். ஆகவே பல்லைக் கடிப்பதோடு நிறுத்திக் கொண்டார் தங்கராஜ்.

"அப்பன் சாவுக்குத் தந்தி அடிச்சோம். யாருமே வரலியே, என்ன விசேஷமோண்ணு பாத்துக்கிட்டுப் போகலாமிண்ணு வந்தேன்." இதற்கு மேல் வினயம் இருக்க முடியாது.

பெரியவர் அவரை ஏற இறங்கப் பார்த்தார். அவர் முகம் உம்மென்றிருந்தது.

"உம்ம தம்பி எங்கே?"

"வீட்டில்தான்"

அதற்கிடையில் உள்வாசலில் வேறு ஒரு உருவம் முளைத்தது. அவர் மனைவிதான். தாடகை வேஷத்தில் வந்திருக்கிறாளா? முகம் தீப்பிழம்பாயிருக்கிறதே!

'மரணத்தெத்தான் அவுகளுக்குத் தெரிவிக்க முடியலே"

தங்கராஜுக்குத் திக்கென்றிருந்தது.

"...அன்னியனிடம் நெய்யூருக்குச் சொல்லியனுப்பி நாங்க அறியவேண்டி வந்தது. பிறகாவது, அந்தப் பையனுக்கு படிச்ச புத்தி எங்கே போச்சி? அவன் பொண்டாட்டி இருக்காளா, செத்தாளாண்ணு வந்து விசாரிக்கத் தெரியலே! இவனுக்குப் போய்க் குழந்தையெக் குடித்து" என்று விம்மினாள்.

"தந்தி கிடைக்கெலியா? உண்மைதானா?" தங்கராஜுக்கு இருந்த ஆச்சரியத்தில் எல்லாம் மறந்து போயிற்று.

"தந்தி வந்தது தந்தி! அனுப்பியிருந்தா, தானே வருது! இப்ப, தந்தி வந்ததா என்று விசாரிக்க வந்திகளா?" அந்த

அம்மாளின் குரலில் கோபம், துக்கம் ஏளனம் எல்லாம் கலந்திருந்தன.

"ஏம்மா, காரியமில்லாமலா வருவாக!'' வீட்டுக்காரர் சூடாகப் பதில் கொடுத்தார்; "காலேஜ் திறந்து ரண்டு வார மாச்சி தெரியுமோ? உன் மருமகப் பிள்ளையாண்டான் காலேஜுக்குப் போணுமா இல்லியா?''

தங்கராஜுக்கு உடம் பெல்லாம் பற்றி எரிந்தாற் போலிருந்தது.

"போவார், போவார்! அப்படிப் போக விருப்பமுள்ள வர், தானே இங்கே வராமல் வேறே யாரையுமா சொல்லி யனுப்புவார்?''

வாசலுக்குப் பின்னாலிருந்து அந்த மாமியாரின் சேலை முந்தானை இழுபடுவது தெரிந்தது.

"...ம்மா!''

மெதுவான குரல்தான். ஆனால் அது தங்கராஜுக்கு எட்டிவிட்டது. எமிலியாகத்தான் இருக்கவேண்டும். தாயின் பேச்சை எதிர்க்க அவளுக்குத் துணிவில்லை. ஆனாலும் அது அவளுக்குப் பிடிக்கவில்லை போலிருக்கிறது. பாவம், குழந்தை. தங்கராஜின் உள்ளம் தம்பி மனைவியிடம் நெகிழ்ந் தது. பெரிய இடத்து மனுஷர்களுக்கு, மரியாதை எங்கே இலகுவில் தெரிந்துவிடப் போகிறது? அவர் போவதற்குத் திரும்பினார். ஆனாலும், வாசலை எட்டினதும், அவருடைய தன்மான உணர்ச்சி படமெடுத்தது.

"ஸார், எங்க நிலைக்கு மிஞ்சின சம்பந்தம் எடுத்தது எங்க தப்புத்தான். ஆனா, என் தம்பியெ ஒங்களுக்குத் தெரியாது. கலியாணம் லேசான காரியமில்லெ. ஒங்க மகளையாக்கும் என் தம்பிக்குக் குடுத்திருக்கிய எண்ணு நெனவிருக்கட்டும்'' என்று தம்பியின் மாமனாரைப் பார்த்து அலட்சியமாகக் கூறிவிட்டு வெளியேறினார்.

"ஓ, பயப்படுத்துகிறான், பனையேறி மகன்!'' என்ற ஒரு கூறுமல்—அது அவரை எட்டாமலிருந்திருக்கக் கூடாதா?

அந்த அல்சேஷியனும் ஒரு உறுமலோடு அவருக்கு விடை கொடுத்தது.

அவர் வெளியேறிவிட்ட அந்த வீட்டிலிருந்து ரேடியோ பெரிதாக அலறத் தொடங்கியது. ஓ, பெரியவர் செவியில் அவர் மனச்சாட்சியின் குரல் கேட்காமலிருக்க வேண்டு மல்லவா?

தங்கராஜ் வீடு சேர்ந்தபோது நேரம் இருட்டிவிட்டது. தாய் வாசல்படியில் குந்தியிருப்பது, தூரத்திலிருந்தே, மின் விளக்கின் ஒளியில் தெரிந்தது. இப்படியும் ஒரு காலம். அந்த வீட்டில் மின் விளக்கு! ஆனால் அந்த எண்ணம் அவருக் குக் குமட்டலைத்தான் கொண்டு வந்தது.

தாய் அவரை எதிர்பார்த்தபடிதான் குந்தியிருந்தாள்.

"ஏம்பிலே இத்திர நேரம்? எங்கெ போனே?"

"போனேன்..." அவள் கேள்வியைத் தட்டிக் கழித்து விட்டார்...

"தங்கையன் பெண்டாட்டி நாளைக்கு வருவாளா?" என்று எதிர்க் கேள்வி போட்டார்.

"வருவா."

"அவ மாப்பிளையெ நாளை அந்திக்கே வரச்சொல்லு. சந்தைக்குப் புளி கொண்டு போணும்."

மறுநாள் சந்தை முறை. புளி சுமந்துகொண்டு போவ தும் வழக்கமாகத் தங்கையன்தான். மகனுடைய வேஷத் தைப் பார்த்தாலும் விருந்து வீட்டுக்குப் போய்விட்டு வந்த தாகத் தோன்றவில்லை. ஆகவே தாய்க்கு யாதொரு சந் தேகமும் எழவில்லை.

"ஆவட்டும் பிலே. ஆமா நீ நார்கோலுக்கு எப்ப போவப் போறே?" அவள் குரலில் கவலையும் ஆவலும் தொனித்தன.

"சும்மா பயப்படாதே அம்மா, ஒம் மருமவ வருவா. மாப்பிளெயெ விட்டு எங்கே ஓடிப்போவப் போறா? நீ ஒண்ணு" என்று ஆறுதல் சொல்லி வைத்தார்.

தம்பியின் அறைக்குள் சென்றபோது தங்கராஜ் ஒரு கணம் திடுக்கிடத்தான் செய்தார். கலைந்த கிராப்பும், தூங்கி வழியும் முகமுமாக செல்லப்பனிடம் ஒரு அரைப் பைத்தியத்தின் களை இருந்தது. கதவை இழுத்துச் சாத்தி விட்டுத் தானும் கட்டிலில் தம்பியின் அருகில், அமர்ந்து கொண்டார்.

"தந்தி கிடைக்கலியாமே லே?"

"நீர் அங்கெதான் போயிருந்திரா?"

தங்கராஜ் "ஆம்" என்று தலையை அசைத்தார்.

"உபசாரமெல்லாம் எப்படி இருந்தது?"

எப்படிச் சொல்வது?

"தந்தி அனுப்பலேண்ணு வருத்தந்தான்."

"தெரியுது. உம்ம முகத்திலெதான் எழுதிவச்சிருக்கே! தந்தி கிடைக்கலேண்ணு சொன்னது யாரு?"

"மாமியா."

"புளுகு, அப்பன்..." செல்லப்பனுக்கு விம்மாமலிருக்க முடியவில்லை. "விஷயம் நீர் சொல்லித்தான் தெரிஞ்சுதோ? பாவம்!"

"இல்லெ. வேறே ஆரையோ நெய்யூருக்கு அனுப்பி விசாரிச்சி..."

"ஓ! அப்படியாவது தெரிஞ்சுதே! போரும், போரும். புளுகு அண்ணு, புளுகு. தந்திக்கு வழி தெரியாதோ?"

"லே, ஒன்னெத்தான் தேட்டம். நீ போவலேண்ணு தான் வருத்தம்."

"நானு?"

செல்லப்பன் கசப்புச் சிரிப்புச் சிரித்தான். சிரிப்பும் இப்படிக் கசக்குமா?

"அதுக்கு ஆளு வேறே பாக்கணும் அண்ணு. அவ... அவ எங்கே போஞ?"

அவனுக்கு எமிலி பெயரைக் கூறக் கூடச் சிரமமாய் இருந்தது. அந்தக் கேள்விக்குப் பதில் கூறவும் தங்கராஜுவுக்குச் சிரமமாயிருந்தது.

"யாரு, ஓம் பெண்டாட்டியா?",

யோசிப்பதற்கு அவகாசம் தேடுகிற பாவனையில் கேட்டார்.

"எம் பெண்டாட்டியாயிருந்தா அங்கே ஏன் போரு?"

"பாவம், நீ அதை ஏன் குத்தம் சொல்யே? அளுதளுது கண்ணெல்லாம் வீங்கியிருக்கு. அப்பெனக் கண்டு பயந்து சாவுது. அது பிள்ளெதானே?"

அந்தச் சித்திரம் தங்கராஜின் சொந்த சிருஷ்டிதான். அவன் கற்பனையிலிருந்து எழுந்தது. பாவம், எமிலிக்கு தன் கணவன் பிரிவுக்கு இன்னும் அழக்கூடத் தெரியவில்லை. தாய்க் கூட்டுக்குள் இப்போதும் இன்பமாகவே இருக்கிருள் என்று அவன் கண்டாஞ என்ன?

ஆனுலும் அந்தப் பேச்சு செல்லப்பனுக்கு ஓரளவு குளுமையாகத்தான் இருந்தது. ஒரு பெருமூச்சு விட்டுவிட்டு மௌனம் சாதித்தான்.

"மறுநாள் சாயங்காலம் தங்கையன் வந்தபோது, எப்படி விசாரிப்பதென்று தங்கராஜுக்குத் தெரியவில்லை. முரட்டுப்பயல்; மீசையும், தாடியும், சிவந்த கண்கள், எண்ணெய் வழியும் கறுப்பு, பனையேற்றுத் தொழிலால் வைரமாக இறுகிப் போயிருந்த உடம்பும்...அவன் முகத்தைப் பார்த்து, "நீ ஏன் இப்படிச் செய்தாய்?" என்று கேட்பது உசிதமாகவும் படவில்லை. உற்ற வேளைகளில் உதவி செய்திருக்கிறவன். ஆஸ்பத்திரியிலிருந்து அந்த வெற்றுடம்பைக்

கொண்டுவரும் போதாகட்டும், மற்றும் கல்யாண வைபவத்திலாகட்டும் தங்கையனில்லாவிட்டால், தங்கராஜ்தான் என்ன செய்திருப்பான்? தங்கராஜின் உள்ளம் கொதித்து வெம்பிக் கொண்டிருந்தது. இவன் ஏன் இப்படிச் செய்தான்? தனக்கு, தன் அருமைத் தம்பிக்கு, ஏன் இப்படிச் செய்தான்? ஏன்?

தங்கையன் என்றும்போல்தான் இருந்தான். ஆனால் தங்கராஜ்தான் அடக்க முடியாமல், படபடப்பாக, "லே, அந்தத் தந்தி அவியளுக்குக் கிட்டேலியாமே?" என்று தொடங்கி வைத்தான்.

"......?" தங்கையன் முகத்தில் வினாக்குறி.

"அன்னு உன் கையிலே குடுத்தனுப்பினேனே தந்தி, அப்பன் மரிச்சப்போ, அது கிடைக்கேலியாமெ?"

"அதுக்கு நா என்ன செய்யணும்?"

"............"

"நா நேரிலே போய்ச் சொல்லவா. எங்கிட்டே டாக்கிட்டர் ஸாரு குடுத்தனுப்பினரு, நானே அனுப்பினேன்னு?"

"............"

"நா சொன்னா அவிய நம்புவினுமா? நீரு சொல்லித் தந்நீரு, நா பொய் சொல்யேன்னுதானே சொல்லு வினம்?"

புத்திசாலிப் பயதான். ஆனால் புத்தியைத்தான் எப்படிப் பிரயோகிக்கிறான்? என்றுமே தங்கையன் கோணல் புத்திக்காரன்தான். அவனிடம் ஒதுங்கிப் பிழைக்க வேண்டும் என்று இறந்துபோன தகப்பனாரே சொல்லியிருக்கிறார். அவன் தோழமை நல்லதல்ல. பெரிய கொடுக்கல் வாங்கலிலெல்லாம் தங்கராஜ் அவனையிட்டு சர்வஜாக்கிரதையாகவே இருந்திருக்கிறான். ஆனால் ஆபத்து வேளையில் செய்யும் இந்தச் சிறிய விஷயத்தில்கூடவா?—இது குறும்பா,

விஷமமா? விளையாட்டா, நாரதர் வேலையா? தன் உறவினன் பெரிய இடத்து சம்பந்தத்தால் டாக்டர் ஆகப் போகிறானே என்ற புகைச்சலா?

புளிச்சரக்கு அன்று வழக்கம்போல் சந்தைக்குப் போயிற்று.

இரண்டு தினங்களுக்குப் பின் தங்கராஜ் வீட்டிலில்லை. தாயாரும் பின்பக்கம் உலர்ந்த சருகுகளை 'அரிக்க' விளக்கு மாறும் 'கடவ'மும் கொண்டு போயிருந்தாள். வாசலில் 'போஸ்ட்' என்ற குரல் கேட்டது. செல்லப்பன் உடுத்தி யிருந்த வேட்டி தட்டித் தடுமாற வாசலுக்குப் போனவன், எதையோ எதிர்பார்த்து போஸ்ட்மேன் கையை நோக்கினான். அவன் சிரித்துக்கொண்டே, "ஸார், மணியார்டர்!" என்றான். செல்லப்பன் முகம் பேயறைந்த மாதிரி ஆனதை பாவம், அவன் கவனிக்கவில்லை. மணியார்டர் பாரத்தை வாங்கிப் படித்தான். சரிதான், மாமனாரிடமிருந்துதான். இருநூறு ரூபாய் மருமகனின் உடன் தேவையை உணர்ந்து அனுப்பியிருக்கிறார் புத்திசாலி. கீழே ஒரு குறிப்பு ஆங்கிலத்தில்; "போனது போகட்டும். உடன் வரவும்." செல்லப்பன் அந்த ஃபாரத்தை அப்படியே திருப்பிக் கொடுத்து விட்டான். கொடுக்கும்போது கோபத்தால் அவன் கைகள் நடுங்கின.

"...........ம்?"

"இங்கே அந்தச் செல்லப்பன் இல்லை."

"நீர்தானே மிஸ்டர் செல்லப்பன்?"

"இந்த எம் ஒ. எனக்கில்லை."

தபால்காரன் நன்றாகக் குழம்பிக்கொண்டும், ஆயிரம் சந்தேகங்களை மனதில் கற்பனை செய்து கொண்டும் அவ்விடத்தைவிட்டகன்றான்.

பின் வாசலில் இரைந்துகொண்டே அவன் தாய் உள்ளே வந்தாள் வெறுங் கையோடு. போஸ்ட்மேன் வந்ததைக்

கண்டு அவள் கைவேலையைப் போட்டுவிட்டு ஓடோடியும் வந்திருக்க வேண்டும்.

"எளுத்து வந்துதா பிலே?"

"ஆரு எனக்கு எளுதுவா?"

"ஒனக்கு பெண்டாட்டி இல்லியா பிலே?"

"அதுதான் உனக்கு நல்லாத் தெரியுமே?"

அவன் எதிர்பார்த்து ஏமாந்ததைத்தான் அம்மையும் எதிர்பார்க்கிருளா? அம்மை நிரக்ஷரகுக்ஷியானாலும் அவ்வள வுக்கு அறிவுண்டா?

"பிலே, தவால் சிவாயி வந்தானே?"

"மேல் விலாசம் தப்பி, கொண்டு வந்திற்ருன்."

"கண்ணுவெ?"

"..........."

தாயாருக்கு, ஏதோ நடக்கத் தகாதது நடந்திருக்கிறது என்று மட்டும் புரிந்தது. இல்லாவிட்டால் அந்த ஆணைக்கு அடங்கியிருப்பானே! பொய் சொல்லுகிருன் பயல். இவ னிடம் எதற்குப் போய்ப் பேச்சுக் கொடுக்க வேண்டும்?

அன்றிரவு தங்கராஜ் வந்ததும் அழுகையும் புலம்பலு மாகத் தன் பாடத்தை ஒப்புவித்து விட்டாள் தாய். தங்க ராஜ் தனிமையாகத்தான் அன்று வந்திருந்தான். அவனுக் குத் தம்பியை வழிக்குக் கொண்டுவர ஓரளவு தெரியும். தனிமையில் அவனிடம் பேச்சுக் கொடுத்து, விஷயத்தை மெல்ல அவனிடமிருந்து வாங்கிக் கொண்டான்.

அவன் தலையில் இடிவிழுந்தது போலிருந்தது.

"நான் மடையன், மடையன். முன்னுலேயே எனக்குத் தெரிஞ்சிருக்கணும். இப்பிடி நடக்குமின்னு, ஒங்கிட்டெ நேரமே இதைப் பத்திப் பேசி வச்சிருக்கணும். அடபாவி! கெடுத்துப் போட்டியே!"

"ஏண்ணு ! வேறு யாரை நான் கெடுத்தேன் ?"

"ஒன்னெ நீ கெடுத்தா போராதா ? அட மடப்பயலே ! ஓம் படிப்பெத் தொலச்சியே !"

செல்லப்பன் கசப்புச் சிரிப்புச் சிரித்தான்.

"என் படிப்பா ? அது எண்ணைக்கோ கெட்டுப்போச்சே! என்னை நீரு கொண்டுபோய், பணக்கார மாமனாரிடம் தள்ளின அண்ணைக்கே தொலஞ்சி போச்சே !"

கொஞ்ச நேரம் தங்கராஜ் வாய் திறக்கவில்லை. செல்லப்பனும் தமையன் முகத்தை ஏறிட்டுப் பார்க்கவில்லை. பிறகு, தங்கராஜ் தான் கரகரத்த குரலில், "செல்லப்பா !" என்றார்.

"ஏண்ணு !"

"நான் செய்தது தப்புதானப்பா. ஒனக்காகச் செய்தேன். அதெ எம் மூஞ்சிலே இப்பிடி வீசி எறியாதே !"

"பின்னே நான் யாரைப் போய்க் கேட்க ?'!

"ஒன்னெப் படச்சவனெக் கேளு !"

"கேட்கியேன். கேட்டுக்கிட்டே இருக்கியேன். ஆனு; பதில் மாத்திரம் கிடைக்கலெ. இந்த உலகத்திலே அதுக்குப் பதில் இல்லே. ஆனு, எனக்குப் பதில் வேணும். வாங்கித் தான் ஆகணும்."

செல்லப்பன் குரலில் இருந்த வெறுப்பும் கடுமையும் தங்கராஜைத் திகைக்க வைத்தன. தம்பியின் கண்களில் காணப்பட்ட அசாதாரண ஒளியில் அவன் உடம்பு ஒரு கணம் நடுங்கிற்று.

"என்ன பிலே பைத்தியம் புலம்பியே ? ஒனக்கு மாத்திரந்தான் சாவப் பயமில்லேண்ணு நெனச்சியா ? இந்த ஒலகத்திலே நீ மாத்திரந்தான் ஆம்பிள்ளையா ? அட...— பயலே !" என்று கோபத்தால், அடக்க முடியாமல் வெளி

வந்த வார்த்தைகளை மென்று விழுங்கிக்கொண்டு எழுந்து நின்றார் தங்கராஜ்.

தம்பி அங்கு நிலவிய மௌனத்தைக் கலைக்க முயலவே யில்லை.

தங்கராஜ்தான் திடீரென்று உணர்வு வந்தவர் போல மேலும் தொடர்ந்தார்.

''பிலே, நாம அன்னியன் கையெ எதிர்பாத்ததுதான் தப்பாப் போச்சி. ஒம் பெண்டாட்டி போனுப் போறு. அது ஒந்தலையெழுத்து...''

''என்—?''

''ஆனு, ஒம் படிப்பு ஏங்கெடனும்? அப்பன் சீவனெக் குடுத்து வாங்கிப் போட்டிருக்காரே நெலம், அது ஒம்படிப் புக்குப் போராதா? பொறவு, நீ டாக்கிட்டர் ஆன பொறவு நீயே வாங்கிப் போடு. நெலத்துக்கு ஆளா கிட்டாது, வெலைக்கி வாங்க?''

செல்லப்பன் முகத்தில் ஒரு கணம் உயிர்க் களை ரேகை விட்டது. ஆனுல் அடுத்தகணம் மங்கி மறைந்து போயிற்று.

''ஆமா, நீரு நெனச்ச உடனே வாங்க ஆளு காத்துக் கெடக்கா? இப்பவே ரண்டு சிழமெ போச்சு. இனி?...''

முகத்தைக் கைகளில் புதைத்துக் கொண்டு மேசைமேல் கவிழ்ந்து விட்டான் செல்லப்பன். வானமும் பூமியும் இடிந்து, தான் அதலபாதாளத்தில் வீழ்ந்து புரளுவதுபோல இருந்தது அவனுக்கு.

தம்பிக்கு ஒரு வார்த்தை ஆறுதல் சொல்வதற்கு, அவ னுடைய குலுங்கும் தோள்களைத் தொடுவதற்குக் கூடப் பயமாக இருந்தது தங்கராஜுக்கு. என்றாலும், தொண்டை யைப் பெலமாகக் கனைத்து, கரகரத்த குரலை எங்கிருந்தோ வரவழைத்துக் கொண்டார்.

"எனக்கு ரண்டு நாள் தாபிலே. ரண்டே ரண்டு நாள். பொறவு ஒமக்குப் பதில் சொல்லாட்டா, நான் ஆம்பிள்ளெ இல்லெ பிலே."

இரண்டே எட்டில் வாசலைத் தாண்டி வெளியே போய் விட்டார் தங்கராஜ். அவர் வாய் வீரம் பேசிற்றே ஒழிய, மனம் கல்லாகக் கனத்தது. வயலுக்கு உடனடியாக ஆள் பார்ப்பதென்ருல் இலேசான காரியமா? தான் ஜெயில் புள்ளியாக இருந்த காலத்தில், தன் உயிரைக் காப்பாற்று வதற்குக்கூட யாரும் அதை வாங்க முன்வரவில்லையே? தன் தம்பியின் பெரிய உத்தியோகத்தைக் காப்பாற்ற யார் முன் வருவார்கள் இந்த ஊரில்? யாரிடந்தான் அப்படிப் பணம் கொட்டிக் கிடக்கிறது? அந்த வயல்! குடும்பத்துக்குக் கவலை அறியாமல் சாப்பாடு போட்டு வந்த வயல்! அப்பன் ஆயுசு பூராவும் உழைத்து வாங்கின வயல்! அன்பன் துளித் துளியாக, பைசா பைசாவாக—தங்கராஜின் கண்கள் கலுழ்ந்தன.

ஆனுல், அந்த வயலையே, யார் இன்று, இப்போது வாங்குவார்கள்? எதற்கும் வைத்தியரிடம் ஒரு வார்த்தை கேட்டுப் பார்க்கலாம். அவர் கையில் பசையுண்டு. ஆமாம், ஆபத்துக்குதவாத பந்துவா அவர்?

தங்கராஜ் போகும்போது, வழியில் அந்த வைக்கோல் போர் மலைபோல நின்றிருந்தது. இரண்டு வாரமாக தங்க ராஜ் அந்த வைக்கோல் போரைக் கவனித்தவரல்ல. அதைக் கவனிக்க அவருக்கு நேரம் எங்கே கிடைக்கிறது? ஆனுல் இன்று, வேண்டுமென்றே, அதைப் பார்க்காமல் இருப்பதற்காகத் தன் முகத்தைத் திருப்பிக் கொண்டார்.

# 6. தாழ்வு

நம் முன்னுல் எதுவெல்லாம் இருக்கிறது என்று உண ராமலே நாம் அடி பெயர்த்து வைக்கிறோம். விழுந்துவிட்ட பிறகுதான் நம் தவறு நமக்கே புரிகிறது. புரிந்தாலும் ஒத்துக்கொள்கிறவர்கள் எத்தனை பேர்? மீசையில் மண் ஒட்டவில்லை என்றுதான் கூறுவார்கள்.

எமிலியின் தந்தை, 'எஸ்டேட் ஓணர்' ஜஸ்டின்ராஜ் அவர்கள் கொஞ்சங்கூட நினையாத, எதிர்பாராத சம்ப வங்கள் நிகழ்ந்துவிட்டன. பணத்தால் எதையும் வாங்கி விடலாம். சம்பந்தி வீட்டாரின் மரியாதையையும் சம்பா தித்து விடலாம் என்ற முழு நம்பிக்கையோடுதான் இருந் தார். மருமகனையும், மருமகன் குடும்பத்தையும் காப்பாற்றி, உயர்த்தி, அந்தப் பெருமையைத் தாம் அடையலாம் என்ற ஆசையோடுதான் அந்த விவாகத்துக்கு இசைந்தார். ஆனுல் அவர் எதிர்பாராத விபரீதங்களெல்லாம் அந்த விவாகத் தோடு நடந்துவிட்டன. அவருடைய ஒரே சகோதரி, அவர் திருமணத்தை முன்னிட்டு வாங்கிக் கொடுத்த சேலையில் ஜரிகை குறைந்துவிட்டது என்று கண்ணீர் பெருக்கி, தன் கணவனை மட்டும் அனுப்பி வைத்துவிட்டு, தான் கலியாணத் திற்கு வராமலேயே நின்று விட்டாள். உண்மைக் காரணம் அதுவல்ல. அவள் மகன் பி.ஏ. பட்டம்பெற்று, ஆசிரியர் வேலை பார்க்கிறவன், அண்ணன் மகளையும், திரண்ட செல்வத்தை யும் கொண்டுவருவான் என்று அவள் காத்திருந்தது வீணுய்ப் போயிற்று. செல்லப்பனையும், படிப்பில் அவனுக்கிருந்த திறமையையும் கேள்வியுற்றுக் கவனித்து வந்த ஜஸ்டின்

ராஜ் அவர்களுக்கு அவனை நன்றாகப் பிடித்துப் போயிற்று. அவர் சகோதரிக்கு ஐந்து குழந்தைகள் இருக்கிறார்கள். அங்கே அந்த சந்தைக் கூட்டத்தில் தம் ஒரே செல்வ மகளை எப்படிக் கொடுப்பது? செல்லப்பனுக்குக் கொடுத்தால், நாளைக்கு அவன் டாக்டர் ஆகும்போது அவள் சீமாட்டியாக வாழலாம். செல்லப்பனின் பூர்வீகம்—அவன் தந்தை பனை யேற்றுத் தொழிலாளி என்பது—அவருக்குத் தன் பூர்வீகத்தை நினைவூட்டினாலும், அவருக்கு அவ்வளவாகத் திருப்தி யில்லைதான். என்றாலும் வெளியில் தெரியாவிட்டால் சரி என்று அதை விட்டுவிட்டார். கேட்கிறவர்களிடம் பைய னின் தகப்பனார் ஒரு 'லான்ட் லார்ட்' என்று சொல்லிக் கொள்வார். பாவம், அன்பையனுக்குத் தான் உழைத்த உழைப்பைவிட, தான் சம்பாதித்த சிறிய 'விலை'க்கும் வய லுக்குமே மதிப்பு என்பது தெரியவில்லை. அதற்கு முன்னால் கண்ணை மூடிவிட்டார். அதுவும் அவரைப் பொறுத்த மட்டில் நல்லதுதான்.

ஜஸ்டின்ராஜ் அவர்கள் தன் சகோதரியின் ஏமாற்றத்துக் காகக் கவலைப்படவில்லை. தன் மகளின் மாமனார் தொழிலுக் காகவும், மரணத்துக்காகவும் கவலைப்படவில்லை. உண்மை யில் செல்லப்பன்மீது தன் ஆசையெல்லாம் வைத்திருந்தார். செல்லப்பனையும் தன் மகளையும் நடுவாக வைத்து எத்த னையோ ஆகாசக் கோட்டைகள் கட்டியிருந்தார். தமக்குத் தான் சிறுவயதில் படிக்க வசதியிருக்கவில்லை. உயர்தரப் பாடசாலையில் படிக்கிறார்களே அவருடைய இரண்டு பையன் கள் அவர்களாவது படித்து முன்னுக்கு வரலாம். ஆனால் அவர்கள் சீட்டியடித்துக்கொண்டு நாகர்கோவில் தெருவில் மைனர் நடை நடப்பதற்குத்தான் லாயக்காயிருந்தார்கள். அதனால் எமிலியின் கணவனைத் தன் சொந்தச் செலவில் அமெரிக்காவரை அனுப்பத் தயாராயிருந்தார் அவர். அவன் படிப்பு முடியும்போது, எந்த மாடல்கார் அவனுக்குத் தகுதியாயிருக்கும் என்றுகூட ஆலோசிக்கத் தொடங்கியிருந் தார். தமது கார் பழையதாகி விட்டபடியால் நல்ல மாட லாக இருந்தாலும், மருமகனுக்குக் கொடுப்பது நல்லதல்ல

என்று நினைத்தார். அப்படிப்பட்ட மாமனுருக்கு, அந்த அடி பலத்த அடியாய்ப் போயிற்று.

மணியார்டர் திரும்பி வந்து விட்டது. அது அவர் மருமகனுக்கு வேண்டியதாக இருக்கவில்லை. தன் அருமை மகளை தான்கண் இமைக்குள் வைத்துக்காத்த செல்வியை,எவளோ ஒரு பட்டிக் காட்டுப் பெண்ணிடம் விட்டு விட்டுக் கிளம்பியிருக்கிறுர் அவருடைய ஆசை மருமகப்பிள்ளை. மரணத்துக்குத் தந்தி அனுப்பினுர்களாம், தந்தி! அப்படியே அது கிடைத்திருந்தாலும், மருமகனே நேரில் வந்து அழைத்துப் போக வேண்டிய மரணமல்லவா அது! ஆள் அனுப்பி விசாரித்தபின் விஷயம் தெரிய வருகிறது. ஊரார் அறிந்தால், யார் வாய்க்கெல்லாம் பதில் சொல்லுவது? அக்கறையோடு, துக்கம் விசாரிப்பதற்குப் படையெடுத்தே வந்து விடுவார்களே ஊர்க்காரர்கள்?

இப்போது மணியார்டரைத் திருப்பி அனுப்பியிருக்கிறுன்.

சாய்வு நாற்காலியில் அசந்து போய் உட்கார்ந்து விட்டார் மனுஷன்.

தட்டத்தில், வெள்ளித் தமிளரில் காப்பி கொண்டுவந்து கொண்டிருந்த அவர் மனைவி ஒருகணம் திடுக்கிட்டு நின்று விட்டாள்.

பிறகு, ஓடிப்போய் மின் விசிறியின் ஸ்விச்சைப் போட்டாள்.

அவருக்கு வியர்த்துக் கொட்டிக்கொண்டிருந்தது.

எப்போதுமே இரத்த அழுத்தம் சற்று அதிகம் அவருக்கு.

எஸ்டேட் கவலைகள், புஷ்டியான ஆகாரம் ஆகியவற்றின் நாட்பட்ட விளைவு.

ஐந்து நிமிஷத்துக்குப் பிறகுதான் அவரால் பேசவே முடிந்தது.

செய்தி வேலைக்காரர்களுக்கு எட்டக் கூடாது என்ற கவலை, அந்த நிலையிலும் எமிலியின் தாயாருக்கு இருந்தது.

டாக்டர் வருவதும் போவதுமாக இருந்த தடபுடலில், தாயின் முகத்திலும், மகளின் முகத்திலுமிருந்த கவலைக் குறிகளை ஒருவரும் கவனிக்கவில்லை. ஜஸ்டஸ் அவர்களின் உடல் நிலை ஓரிரு தினங்களில் சுமாராகிவிட்டது. ஆனால் அந்த முகங்களில் படிந்திருந்த கவலைக் குறிகள் மட்டும் மாறுவதாயில்லை.

ஜஸ்டஸ் அவர்களின் மனைவி ஜூலி அம்மாள், அன்று வரையில் மகளை மருமகன் வீட்டாரிடமிருந்து காப்பாற்றுவதில் புலியாக இருந்தவள், இப்போது மகளிடமே புலியாகிவிட்டாள். அதாவது, மகள் தன்னை அண்டவிடாமல் செய்து விட்டாள். "எமிலி, எமிலி" என்று அதிகாரத் தோடும் அன்போடும் அழைக்கும் குரல் அடங்கிப்போய் விட்டது. எமிலிதான் மணியார்டரைத் திருப்பி அனுப்பி விட்டாள் என்று அவள் எண்ணியிருந்தது போல் தோன்றிற்று. புருஷன் முன்னால் ஜூலி போகிறபோது, முகத்தை நன்றாகக் கடுகடுத்து வைத்துக் கொள்வாள். அவரோ மனைவி தன் மருமகன் பேச்சை எடுத்தாலே சீறி விழுவார். "ஷட் அப்! அவன் வருவான். வராம எங்கே போகப் போறான்? அப்படிப் போறவனை ஏன் பிடிச்சு வைக்கணும்?" என்று வீம்பு பேசி வாயை அடைத்து விடுவார். ஆனால் மனைவியைப் போலல்லாமல், மகளிடம் கூடுதல் ஆதரவு காட்டத் தலைப்பட்டார். காப்பி சாப்பாட்டு வேளைகளில், எமிலி மேசைக்கு முன்வந்து உட்காரும் வரை, தட்டத்தில் கை வைக்க மாட்டார். முன்பெல்லாம், "அந்தப் பயல் எங்கே?" அல்லது "ஜார்ஜ் இன்னும் உறக்கமா? ஹூம் செகன்ட் ஷோ சினிமா இல்லையா?" அல்லது "ஜான்! நீயும் அண்ணனைப் பார்த்துப்படி, உன்னை எஸ்டேட்டில் கூலியாகப் போடுகிறேன்" என்று ஏதாவது உறுமிக்கொண்டே உட்காருகிறவர், இப்போதெல்லாம் பையன்கள் வருகிறதையோ, போகிறதையோ கவனிப்பதே இல்லை. ஆனால் மகள் வந்துசேரச் சிறிது

தாமதித்துவிட்டால், "எமிலி!" என்ற குரல் அன்புடன் மாடிவரை ஒலிக்கும். எதற்காகவாவது, அவளை வலுக்கட்டாயமாகப் பேச்சுக்கிழுப்பார், அவள் ஏதாவது ஒரு புத்தகத்தை வாசிக்கிறதாகவாவது வாசிக்கிற பாவனையாகவாவது இருந்தால் புத்தகவாசனையே இல்லாத அவர் அவள் கையிலிருக்கிற புத்தகத்தைப் பற்றி இரண்டு வார்த்தை பேசாமல் விடமாட்டார். அவள் உடுத்தியிருக்கும் ஸாரி சிறிது கசங்கினாலும் போதும், மாற்றி வரும்படி மாடிக்கு அனுப்புவார். தலைவாருதல், குளித்தல் போன்ற காரியங்களில் கூட அக்கறை காட்டினார். அவரே அம்மாவாகி விட்டதாக எமிலிக்குப் பட்டது. பவுடர், ஸோப், ஸ்னோ, சென்ட் எல்லாம் காரில் வெளியே போகும்போது தாமே வாங்கி வந்து கொடுப்பார். எங்கே மகள் மனம் ஏக்கத்தால் உடைந்துவிடப் போகிறதோ என்ற பயம் அவருக்கு.

எல்லார் மனத்திலும் கிடந்த நினைவு, அப்படியே பாறாங்கல் போலப் பாரமாகக் கிடந்தது. அதை வெளியே எடுக்க யாரும் துணியவில்லை. எல்லாரும் காத்துக்கொண்டே இருந்தார்கள்; எதற்கோ காத்திருந்தார்கள்—பையன்களைத் தவிர.

வேலைக்காரர்களிடையே கசமுச என்றுகாமலிருக்குமா? கடிதப்போக்கு வரத்து இல்லாமலிருந்தது கொஞ்ச நாள் வெளியே தெரியவில்லை 'எஸ்டேட் ஓனர்' வீட்டில் கடிதப் போக்குவரத்து இல்லாமலிருக்குமா? வழக்கம்போல் தபால்காரன் வருகிறான், போகிறான். வழக்கம்போல், சிவப்புப் பெட்டிக்குக் கத்தையாக எழுத்துப் போய்க்கொண்டுதான் இருக்கிறது. ஆனால் எமிலியின் முகம் அவளைக் காட்டிக் கொடுத்துவிட்டது

சமையல்காரி ஆனி அம்மா எமிலிக்கு வளர்ப்புத்தாய் போன்றவள். எமிலியின் திருமணத்தின்போது தன் அன்பளிப்பாக ஒரு வெள்ளிக் கரண்டி வாங்கிக் கொடுத்தவள். எமிலியிடம் அவள் கணவன் வீட்டுச் செய்திகளைப் பற்றி

உரிமையுடன் கேட்கத் தலைப்பட்டாள். முதலிலேயே அவளுடைய இரக்கம் எமிலிக்குப் பிடிக்கவில்லை.

"ஏம்மா எம்மீ! ஒன்னெ ஒண்டியா விட்டுக்கிட்டு எல்லாரும் ஆஸ்பத்திரிக்குப் போயிட்டாகளா?" என்று தொடங்கினுள்.

"இல்லே ஆனிம்மா, அக்கா இருந்தாக. மாமா பட்ட கஷ்டம்! பப்பா என்ன கண்டாக?" என்று கணவன் பக்கம் பரிந்து பேசினுள், தாயாரின் உறுமலையும் காதில் போட்டுக் கொள்ளாமல்.

பிறகு ஒருநாள், "ஓம் புருஷன் எப்போம்மா வருவார்?" என்று கேட்டே விட்டாள் ஆனி.

"மாமா ஆஸ்பத்திரியில் கிடக்கும்போது ஓடி ஓடி வர முடியுமா ஆனிம்மா?" என்று தட்டிக்கழித்துவிட்டாள் எமிலி. அவள் சிரிப்பு நிர்மலமாகத்தான் இருந்தது. அதில் நாணங்கூடக் கலந்திருந்தது.

பிறகு ஜாடையாக, "உன் மாமனுருக்கு எப்படி இருக்கம்மா?" அல்லது "நீ உன் மாமனுரைப் பார்க்கப்போக வேண்டாமாம்மா?" அல்லது "புருஷனைப் பெற்றவரில்லையாம்மா; நீ கவனிக்க வேண்டாம்? என்பாள் ஆனியம்மா. அதையெல்லாம் எமிலி எப்படியோ சிரித்து மழுப்பி விடுவாள்.

எமிலியின் மாமனுரின் மரணத்தைப் பற்றிய செய்தி வீடு முழுதும் ஒருநாள் தெரிந்துவிட்டது. பிறகு எமிலியிடம் யாரும் ஒன்றும் கேட்கவில்லை. என்னவோ, ஏதோ என்று எல்லோருக்குமே தெரிகிறது. எமிலியைத் தாயார் எதற்காகவாவது அடுக்களையில் கோபித்துக் கொண்டால் ஆனியம்மா குறுக்கே நிற்கிருள். "என்னம்மா? அதுக்கென்ன தெரியும்" என்று.

எமிலிக்கு என்ன தெரியும் என்று சொல்லிச் சொல்லியே எமிலிக்கு இப்போது புரிய வைத்துவிட்டார்கள். எமிலிக்கு இப்போது தெரிந்து என்ன பயன்?

திருமணப் பேச்சுவார்த்தைகள் நடந்துகொண்டிருந்த போது எமிலியைக் கலந்துகொண்டுதான் ஏற்பாடு செய்தார்கள். மாப்பிள்ளைப் பையனைப் பற்றி ஜூலியம்மாள் பெருமையாக, தன் மகள் எதிரிலேயே வருகிறவர்கள் போகிறவர்களிடம் அளந்து கொண்டிருப்பாள். இப்போது அந்தப் பேச்சுக்களுக்கெல்லாம் முற்றுப்புள்ளி வைத்தாயிற்று.

எமிலிக்கு அப்போதெல்லாம் பெருமையாய்த்தான் இருந்தது. தன்னையிட்டே அவளுக்குப் பெருமை, பணக்காரர் மகள் என்ற முறையில். பள்ளிக்கூட மாணவியாக இருக்கும்போது, பாடங்களில் போதிய அக்கறை காட்டாததற்கும் அது ஒரு காரணம். அவளுக்கு வேறு எதிலாவது ஒரு பிடிப்பு இருந்ததோ என்றால், அதுவும் இல்லை. ஏதோ கவலையில்லாத சிட்டுக்குருவி போல வீட்டில் வளைய வளைய வருவாள். தகப்பனாரிடம் கொஞ்சுவாள். தாயிடம் எடுத்ததற்கெல்லாம் சிணுங்குவாள். தம்பிமாரிடம் சண்டை போட்டுவிட்டு, தகப்பனாரிடம் அடைக்கலம் புகுவாள். பதினேழாவது வயதில் விவாகம் என்று ஏற்பட்டபோது ஏதோ பெரிய விழா நடக்கிறது. தான் அதன் நாயகி என்று மட்டும் உணர்ந்து கொண்டாள்.

புருஷன் வீட்டில் முதல் நாள் எல்லாம் ஒரே குழப்பமாக இருந்தது. தன் இயலாமையை உணர்ந்து கொண்டவளாய் தன்னை நொந்து கொண்டவளாய், அங்கே இருந்தாள். தனக்கும் அன்றைய கவலையிலும் பரபரப்பிலும் ஒரு பங்கு உண்டு என்று தெரிந்தது. ஆனால், எத்தகைய பங்கு உண்டு என்று நன்றாக விளங்கவில்லை. விளக்கிக் கொடுப்பாருமில்லை. மாமனாரின் வேதனையில் வெம்பித் துடித்துக் கொண்டிருந்த புருஷனைப் பார்த்தபோது கூச்சத்தையெல்லாம் ஒதுக்கிவிட்டு. அவனைத்தேற்றவேண்டும் போலிருந்தது. அதற்கும் இடமில்லாமற் போயிற்று. எத்தனையோ தடவைகளில் பேசவேண்டும் என்று நினைத்தும் சூழ்நிலை அதற்கு இடம் கொடுக்கவில்லை.

மாமனுரை ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோனபோது எமிலிக்குத் தனிமைத் துயரம் கடுமையாகத் தோன்றிற்று. வீட்டில் இருந்த லிஸி, தானே கவலையில் ஆழ்ந்திருந்ததால் புதுமணப் பெண்ணுக்கு உற்சாகமூட்டும் நிலையிலில்லை. அவள் மணப்பெண்ணின் தேவைகளை அன்போடு விசாரிக்கத் தான் செய்தாள். ஆனுல் அந்தச் சூழ்நிலையில் எப்படிக் கலகலப்பாய் இருப்பது? குழந்தை பொம்மி மட்டும் 'தித்தி' யின் நகைகளை ஆச்சரியமாகப் பார்த்தவாறு சுற்றிச் சுற்றி வந்தாள். அது போதுமா?

தகப்பனுர் எமிலியை வலுக்கட்டாயமாக வீட்டுக் கழைத்து வந்தபோது அவள் குழப்பமடையத்தான் செய் தாள். ஆனுல், வீட்டுக்கு வந்தபோது தகப்பனுர் மேல் வைத்த நம்பிக்கையிலும் மதிப்பிலும் விரைவில் தெளிவு பெற்றுவிட்டாள். மாமனுர் மரணம் வரையிலும் கவலை யறியாமல், மலர்ந்த முகத்தோடு தந்தை வீட்டில் நட மாடினுள். அவர் மரணத்துக்குப் பிறகு, தான் ஏதோ குற்றம் செய்துவிட்டதாக அவளுக்குப் பட்டது. அவள் மனம் முதல் முதலாகச் சோர்வுற்றது.

ஒரு கடிதமாவது புருஷனுக்கு எழுதியிருக்கலாம். ஆனுல் எல்லாப் பணக்காரர்களின் பெண்களைப் போலவே, அவ ளுக்கும் வீட்டில் சுதந்திரம் குறைவு. தானுக வலியப் போய் தந்தையின் ஆபீஸ் அறையிலிருந்து ஒரு கவர் எடுத்துக் கொண்டு வரலாம். ஆனுல், அவர் "ஏன், எதற்கு?" என்று கேட்டுவிட்டால்... அவள் தோழிகளுக்கு எழுதும் வழக்கம் இல்லை. குட்டு வெளிப்பட்டு விடும். கவரில் மேல் விலாசம் எழுதி யாரிடம் கொடுத்தனுப்புவது? யார் கண்ணிலாவது படாமல் போகுமா? தம்பிமாரிடம் கொடுத்தால் சொல்ல வேண்டியதே இல்லை. கேலி செய்து அவள் உயிரையே வாங்கி விடுவார்கள். மனத்தில் தெம்பிருந்தால் கேலியைத் தாங்கிக் கொள்ளலாம். இனிக்கக்கூடச் செய்யும். ஆனுல் இப்போது? அந்த மடையர்களை நம்பவே வழியில்லை. அவர் களுக்கு அக்காளின் மனநிலை தெரியத்தான் தெரியுமா?

அதைப்பற்றி அக்கறையா? தடியன்கள். காற்றுப் போன வாக்கிலே போய், சீட்டியடிக்க மட்டும் தெரியும்.

இவ்வளவு சிரமத்தையும் பார்க்காமல் எழுதுவதாக இருந்தாலும், யாருக்கு எழுதுவது? எப்படி எழுதுவது? எதற்கு எழுதுவது? புருஷனுக்கு அவள் என்னதான் தவறு செய்து விட்டாள்?ஏன் அப்படி அவர் பராமுகமாக இருக்க வேண்டும்? தன்னை அவர் புறக்கணிப்பது மெய்யானல், தன் கடிதம் எப்படி அந்தப் புறக்கணிப்பை மாற்றக்கூடும்? எழுதுவதானல் அவரைத் திட்டி எழுத வேண்டும். அல்லது அன்னியர் ஒருவருக்கு எழுதுவதுபோல் எழுத வேண்டும். அவர்தானே பராமுகமாக இருக்கிருர்! வேண்டுமானல் அவரே முதலில் எழுதட்டும். இப்படி என்னவெல்லாமோ எண்ணி அவள் அப்படியே இருந்துவிட்டாள். புருஷனைப் பிரித்து வைத்ததற்கு, புருஷன் வீட்டார் மேலேயே பழியைப் போட்டாள். தான் புருஷனுக்கு எழுத எண்ணின இரண்டு வரியில், அவர் கோபத்தை மாற்றத்தக்கதாக என்ன மந்திரம், மாயம் இருக்கப் போகிறது என்று நினைத்தாள் அந்தப் பேதை. அங்கே செல்லப்பன் யாரும் அறியாமல் தபால்காரன் கையை எதிர்பார்த்திருந்தநிலை அவளுக்கு எப்படித் தெரியப் போகிறது? லிஸியும், மாமியாரும் செல்லப்பனின் முரட்டுப் பிடிவாதத்தால் திணறுவதை அவள் எப்படி அறியப் போகிருள்!

ஒருநாள் போலவே மறுநாளும் கழிந்தது. நாட்கள் உருண்டோடின. நன்ருகச் சாப்பிடுவதற்கும், சிங்காரிப்பதற்கும், தூங்குவதற்கும்கூடக் குறைவில்லை. ஆனல் மனத்தில் மட்டும் தெம்பில்லை. இனமறியாத ஒரு வெறுப்பு, கசப்பு அதில் குடிகொண்டு விட்டது. மாநிறத்திலும் கவர்ச்சியுடையதாயிருந்த அவள் முகத்தை இருள் கவ்விக் கொண்டது. பொய்யாகச் சிரிக்கக் கற்றுக் கொண்டாள். மனுஷர்களை, அதிலும் தனக்குத் தெரிந்த பெண்களைக் கண்டால், விலகிப்போகக் கற்றுக் கொண்டாள். இப்போதெல்லாம் கோவிலுக்குப் போகிறதே இல்லை. எங்கே மற்றவர்

களின் இரக்கப் பார்வைகள் தன்மேல் விழுந்து தகித்து விடுமோ என்ற பயம். தான் பணக்காரர் மகள் என்ற நிலை போய், யாருடைய மனைவி என்று நினைக்கும்போது அழுகை அழுகையாக வந்தது. தான் அனாதை என்ற உணர்ச்சி மேலிட்டது. ஆனால் அழக்கூடாது, அது தன் பெருமைக்குக் குறைவு என்ற உறுதியான ஒரு முடிவுக்கு வந்திருந்தாள்.

ஆனாலும் அழுகை வரத்தான் செய்கிறது. அம்மாவுக்கு ஏன் தன்னைக் கண்டால் பிடிக்கவில்லை? அப்படிப் பிடிக்காமலிருப்பதற்கு அவள் என்னதான் செய்து விட்டாள்? அம்மாவின் கோபத்தையும் தாங்கலாம். அம்மா கோபித்தால் தானும் பதிலுக்குக் கோபித்துக் கொண்டு அறைக்குள் சென்று தாளிட்டுக் கொள்ளாம், படாரென்று அடைக்கும் கதவு தன் கோபத்தைப் பிரதிபலித்துவிடும். ஆனால் பப்பாவின் கவலையை எப்படித் தாங்குவது? அவள் வரும்போதும் போகும் போதும் அந்தக் கண்கள் தன்னைப் பெருமையாகப் பார்க்கும் கண்கள், அவளை விடாமல் கவலையோடு பின் தொடர்கின்றனவே! அவைகளுக்கு முன்னால் தலைகுனிய முடியாது. முடியவே முடியாது. பப்பாவுக்காக, அந்தக் கண்களுக்காக, தலைவாரிப் பின்ன வேண்டும். பவுடர், ஸ்னோ போட வேண்டும். ஸில்க்ஸாரி கட்டியாக வேண்டும். பொய்ச் சிரிப்புச் சிரிக்கவேண்டும். பாலும் பழமும் உண்ணவேண்டும். இல்லாவிட்டால் பப்பாவுக்குப் பொல்லாத கோபம் வந்து விடும். அதற்கு இடங் கொடுக்கக் கூடாது. பப்பா தன் கண்களில் கண்ணீரைக் கண்டுவிடக் கூடாது. அது தன் மான உணர்ச்சியையே ஆயிரம் ஊசிகள் கொண்டு குத்துவது போலிருக்கும்.

எமிலிதான் இப்படி வாழ்கிறாளென்றால் அவள் கணவனும் ஏறக்குறைய இதே நிலையில்தான் என்பது அவளுக்கு எப்படித் தெரியும்? அவன் இப்போது ஒரு புதிய மனிதனாகி விட்டான். கலகலப்புடன் யாரிடமும் பேசுவதில்லை. டேவிட்டைக் கண்டால் நாகர்கோவில் வாசனை அவன்மேல் வீசுவதாகத் தோன்றும். அதுவே போதும் அவன் ஒதுங்கிப்

போவதற்கு. அவன்தான் போகட்டும். பொன்னையாவிடத் திலுமா அவனுக்குக் கசப்பு? ஆனால் பொன்னையாவிடமிருந்து தப்பிவிடுவது அவ்வளவு இலேசா? விரட்டி விரட்டி பிடிக் கிறவனல்லவா அவன்!

ஊரிலிருந்து ஹாஸ்டலுக்கு வந்த செல்லப்பன் தலை யைத் தொங்கப் போட்டுக்கொண்டுதான் அறைக்கு நேரே அவசரமாகப் போய்க்கொண்டிருந்தான். ஆனால் எதிரே பாய்ச்சலும் துள்ளலுமாக வந்தான் பொன்னையா.

"டே புதுமாப்பிளே!"

அவன் குரலில் உற்சாகமும் கேலியும் மகிழ்ச்சியும் நிரம்பியிருந்தன. ஆனல். அவன் வேறு எதையாவது சொல்லி அழைத்திருக்கலாம்.

செல்லப்பன் எரிச்சலோடு தன் பார்வையை நண்பன் மேல் திருப்பினான், இதேதடா சனியன் என்னும் பாவத்தில். அதைப் பொன்னையா புரிந்து கொண்டால்தானே? நீட்டாத கையைப் பிடித்திழுத்துக் குலுக்கினான், வந்த வேகம் அடங் கும் வரையிலும்.

"டேய்! காலேஜைக்கூட மறந்து போயிட்டியே! விசேஷம் நிறைய இருக்கோ இல்லையோ?" என்று பல்லைக் காட்டினான்.

செல்லப்பனுக்கு பேச்சைத் திருப்ப ஒரே ஒரு வழிதான் புலப்பட்டது. அதுவும் சவுகரியமாய்ப் போயிற்று.

"அப்பன் இறந்து போயிட்டார்" என்று கூறி வைத் தான்.

பொன்னையாவின் உற்சாகத்தின்மேல் ஐஸ்கட்டி வந்து விழுந்தது. அவன் அசந்து போனான்.

"மன்னிச்சிக்கப்பா. நான் கொஞ்சங்கூட அப்படி நினைக் கலே. எனக்கு ஒரு லெட்டர் போடப் படாதோ? உன் லீவ் லெட்டரில்கூட உனக்கு சுகமில்லேண்ணு தானேஎழுதியிருந்தி

யாம்? சரிதான், பிரஞ்சு லீவு போட்டிருக்கான்னு சிரிச்சுக் கிட்டேன்.''

''அதுக்கிப்ப என்ன?'' செல்லப்பன் பதிலில் விரக்தியும் சோகமும் தொனித்தன.

நண்பன் கையிலிருந்து தன் கையை மெல்ல விடுவித்துக் கொண்டான். பொன்னையாவின் இரக்கம் நிறைந்த கண் கள் அவனைப் பின்தொடர்ந்தன. எனினும், இப்போது அவனைத் தொந்தரவு செய்வது சரியல்ல என்று விட்டுவிட் டான் அவன்.

இந்த நிலைமை நீடித்தது. ஒருநாள். இரண்டு நாள், ஒருவாரம், இரண்டு வாரமென்று.

பிறகு ஒருநாள் செல்லப்பன் அறைக்கதவை வந்து தட்டினான் பொன்னையா. கதவைத் திறந்த செல்லப்பன் ஒரு புன்னகையை வரவழைத்துக் கொண்டு நின்றான். அவனை உரிமையுடன் ஒதுக்கிவிட்டு, அழையாத விருந்தாளி யாக உள்ளே சென்று நாற்காலியில் உட்கார்ந்து கொண் டான் பொன்னையா. செல்லப்பனும் கட்டிலில் அமர்ந்தான்.

''டே, எத்தனை நாள்தான் அழுதுகிட்டுக் கிடப்பே? வாடா வெளியிலே. மூஞ்சியிலே வெளிச்சத்தைக் காணோமே! இண்ணைக்கு கமலாவின் வீணைக் கச்சேரி. வர்ரியா?'' என்று அன்புடன் கேட்டான் பொன்னையா.

செல்லப்பன் விருப்பமில்லை என்பதற் கறிகுறியாய்த் தலையை அசைத்தான்.

''இவன் ஒரு அழுகணி'' என்று முணுமுணுத்துக் கொண்டு எழுந்த பொன்னையா, தரையில் தாறுமாறாகச் சிதறிக் கிடந்த புத்தகங்களைப் பார்வையிட்டான். இவற் றுள், ஒரு கவர்ச்சியான அட்டைப் படம் போட்ட பிரும் மாண்டமான ஒரு புத்தகம் அவன் கவனத்தை இழுத்தது.

''லே, நீயும் இந்த புஸ்தகங்களை எடுப்பியா? நானும் உன்னை ராமபிரானென்ணில்லா நெனச்சேன்? இதெல்லாம்

ஒளிச்சி வச்சிதான் படிப்பியா?'' என்று பொருள் பொதிந்த ஒரு கனைப்புடன் அந்தப் புத்தகத்தை எடுக்கப் போனான்.

மின்சாரத்தால் தாக்கப்பட்டவன் போல, செல்லப்பன் எழுந்து, அவன் கையிலிருந்த புத்தகத்தை 'வெடுக்'கென்று பிடுங்கிக் கொண்டான். அவன் கண்கள் தீயை உமிழ்ந்தன.

“போடா வெளியே!'' என்றான்.

அவனை ஏறிட்டுப் பார்த்த பொன்னையாவின் முகம் அவமானத்தால் சுருங்கிப் போயிற்று. கௌரவத்தைக் காப்பாற்றும் பாணியில், "உன்னைத் தேடி எவண்டாவரு வான்?'' என்று ஒரு அசட்டுச் சிரிப்புச் சிரித்துவிட்டு வெளி யேறினான்.

அதன் பிறகு, வெளியே ஒருவரை ஒருவர் பார்க்கும் போது, பொன்னையா முகத்தில் அடிபட்டவன் மாதிரி ஒதுங் கிப் போய்விடுவான். முதல்தடவை அப்படி நடந்தபோது, செல்லப்பனுக்குச் சுரீரென்று தைத்தது. ஆனாலும், தான் கொஞ்சங்கூட நண்பனிடம் மரியாதையாக நடந்திருக்க லாம். குற்ற உணர்வு அவன் நெஞ்சில் ஊசியாகப் பாய்ந் தது. ஆனால், இந்தச் சனியன் மட்டும் அன்று அந்தப் புத் தகத்தைப் பார்வையிட்டிருந்தால், தன் உயிரையே வாங்கி யிருப்பானே! அதுவும் தான் இருந்த நிலையில்...அவன்தான் தன்மானமில்லாத பிறவியாச்சே? உதறித் தள்ளினாலும் அட்டைமாதிரி ஒட்டுகிறவனாச்சே? ஏன் இப்போது மட்டும் பிரமாதமான கௌரவம்? தன் கௌரவத்தை விட்டு விட்டு, வலியப்போய் ஒண்டுவது என்றுமே செல்லப்பனுக்குப் பழக்க மில்லாத விஷயம். ஒரு சில வேளைகளில் நண்பனிடம் தன் நிலையை மனம் விட்டுக் கூறி ஆறவேண்டும் போலிருந்தது. ஆனாலும் வயலிச்சென்று பொன்னையாவின் தோளில்விழுந்து அழவா முடியும்? அதிகப்பிரசங்கி. நண்பனாம் நண்பன்! ஒரு கடின வார்த்தைக்கு ஈடு கொடுக்காத நண்பன்! இவனி டம் போய் எதை, எப்போது, சொல்வது? அதற்குச் சமயம் வாய்க்கப் போவதில்லை; இனி இல்லவே இல்லை.

மனிதனுக்கு இருதயம் என்று ஒன்று இருக்கக்கூடாது. கூடவே கூடாது.

ஒருநாள் வகுப்பில் ஒரு புத்தகத்தை மறந்து வைத்து விட்டு வந்தவன், ஹாஸ்டலிலிருந்து அதை எடுக்கத் திரும்பிப் போய்க்கொண்டிருந்தான். ஆஸ்பத்திரி வாசலிலிருந்து கான்றீனுக்கு நேராக இரண்டுபேர் நெருக்கமாக சிரித்துப் பேசியபடி போய்க்கொண்டிருந்தார்கள். செல்லப்பன் திடுக்கிட்டு விட்டான்; பொன்னையாவும் ஒரு பெண்ணும்! அந்தப் பெண், அலங்காரி—

கமலாதானு?

அவளேதான், இது என்று முளைத்த உறவோ? தன்னை அறியாமல் பொன்னையாவுக்கு அப்படியும் ஒரு தொடர்பா? அல்லது வீணை மயக்கத்தின் புதிய விளைவா?

அதைப்பற்றி இனி அறிந்து என்ன? இவனை அவள் எப்படி அடுத்தாள்? இவனைத் திரணமாக நினைத்தவளாயிற்றே? புகழ்மொழிகளில் மயங்கி விட்டாளா? வெறும் சிநேகந்தானு? க்ஷண மயக்கமா?

பக்கவாட்டில் பொன்னையா தன்னைக் கவனித்தது நன்ருகத் தெரிந்தது. அந்தப் பார்வையில்தான் என்ன அகம்பாவம், அலக்ஷியம்? செல்லப்பனுக்கு விளங்கிவிட்டது. தன்னை ஒரு பொருளாக மதிக்காத பார்வை அது. அது பொன்னையாவின் பார்வைதானு என்று கூடத் தோன்றியது. பெண்ணின் தொடர்பால் ஏற்பட்ட புதிய மாற்றமா? அவன் எளிமை, சிரிப்பு இரக்கம், உற்சாகம், அன்பு எல்லாம் வெளி வேஷமா? மனிதனே வேஷந்தானு? யார் கண்டார்கள்?

தோழமையின் முடிவு இதுவா?

எது எப்படியானலும் இனித் தன் கலியாணத்தைப் பற்றி அவனிடம் பேச முடியாது. கமலாவைப் பற்றி அவனிடம் கேட்கவும் முடியாது.

பொன்னையாவிடம் பழகுவதற்கு ஒரே ஒரு வகைதான் இனி உண்டு. ஐஸ்கட்டி ஆகிவிட வேண்டும். பொன்னை யாவிடம் மட்டுமல்ல. எல்லாரிடமுந்தான்.

ஐஸ்கட்டியாயிருப்பதற்குச் செல்லப்பனுக்கு ஒன்றும் சிரமமாயிருக்கவில்லை. புல்லாங்குழலையோ, மௌத் ஆர் கனையோ கையில் எடுக்கத் தோன்றவில்லை. வெளியில் போய் சினிமாவில் மனத்தைப் பறி கொடுப்பதற்கும் விருப்ப மில்லை. யாராவது இளந்தம்பதிகளை, ஆஸ்பத்திரியிலாவது, கான்றினிலாவது காணும்போது மனது பற்றி எரியும். இப் போது செல்லப்பனுக்கு ஒரே ஒரு ஆசை: எல்லாவற்றை யும் மறக்கவேண்டும். பாடத்தைத் தவிர, அண்ணனின் வைராக்கியத்தைத் தவிர, அப்பனின் ஞாபகத்தைத் தவிர, அதிலேயே வாழலாம். அதற்காகவே வாழலாம். முதலில் டாக்டர் ஆகவேண்டும். அப்புறம்—

அப்புறம் என்ன என்று அப்புறம் பார்த்துக் கொள்ள லாம்.

அப்புறம், மெல்லிய வீணைகானம் கேட்கிறதோ என்று ஒரு சந்தேகம். மலரைப் பறித்து முகத்துக்கு நேராக எறிவது போல, ஒரு புன்னகை.

ஆனல் இப்போதைக்குப் பாடம் இருக்கவே இருக்கிறது. மனத்திலும் வைராக்கியம் இருக்கிறது. அதுவே போதும்.

ஆசிரியர்கள், டாக்டர்கள், மருந்துப் புட்டிகள் ஆபரே ஷன் அறை: இவை போதாதா? பரீட்சை வருகிறது; இந்தப் பரீட்சை மருத்துவ அறிவின் பரீட்சை மட்டு மல்ல. வாழ்க்கைப் பரீட்சையின் சின்னமுமாய் இருக்கிறது. இதில் தெரிந்துவிடும், டாக்டர் செல்லப்பன் வாழ்வதற்குத் தகுதி உள்ளவனு என்பது.

செல்லப்பன் இப்போது விளையாட்டுப் பிள்ளை அல்ல. மனிதனுமல்ல. ஒரு புது சிருஷ்டி; ஒரு லட்சியத்தின் பிடி யில் ஆடும் ஒரு ஜீவன். பால் வழிந்த அவன் முகத்தில்

இருளும், கபடும் படிந்திருக்கின்றன. அவன் நடையில் ஒரு உறுதி, ஒரு ஆவேசம். கண்களில் புதிதாக ஒரு குரூரம், ஒரு வெறி. ஆற்றொழுக்கின் வேகத்தில் உந்தித் தள்ளப்படுகிற படகைப் போல் நடமாடுகிறான் டாக்டர் பட்டந்தான் அவன் தெய்வம். அதை நோக்கியே தலைவணங்குகிறான்.

# 7. மழைக்கொரு புகலிடம்

மதுரை எர்ஸ்கின் மருத்துவக் கல்லூரி ஆஸ்பத்திரி. அதில் ஒரு புதுமை இருக்கிறது. டாக்டர்களும் பெரும்பாலும் இளமுகங்கள். மருந்துகளும் மருத்துவ முறைகளுங் கூடப் புதுமாதிரிதான். உதாரணமாக, குழந்தைகள் வார்டில் எடை பார்க்கும் கருவியொன்று புதுக் கௌரவத்துடன் அமர்ந்திருக்கிறது. நோய் வாய்ப்பட்ட குழந்தைகளை அதில் வைத்து எடை பாாத்த பிறகுதான் வார்டுக்குள் அனுமதிக்க வேண்டும் என்பது ஒரு புது நியமம். ஒரு தாய், பதைபதைப்புடன் தன் ஒன்பது வ்யது மகளைத் தாங்கிக் கொண்டு வந்தவள், ஸிஸ்டர்களைப் பரிதாபமாகப் பார்க்கிறாள். ஹும், அட்மிஷனுக்கு வழியில்லை. ஏதேதெல்லாமோ நடக்க வேண்டியிருக்கிறது. தலைமை ஸிஸ்டர் வந்தாக வேண்டும். எடைபோடுதல் ஒழுங்காக நடைபெற வேண்டும். பிறகு கேஸ் ஷீட் வாங்க ஒரு ஸிஸ்டர் ஆபீசுக்குப் போக வேண்டும். இதெல்லாம் முடிந்த பிறகுதான் அட்மிஷன் ஆகி, டாக்டர் பரிசோதனை நடக்கும்.

அந்தத் தாயோ, குழந்தையோடு தானும் சேர்ந்து விழுந்து விடுவாளோ என்று தோன்றுகிறது. சுவரோடு சுவராகச் சாய்ந்து நின்று, மேல் மூச்சுக் கீழ்மூச்சு வாங்கும் அந்தக் குழந்தையின் நெற்றி வியர்வையை முந்தானையால் துடைத்துக் கொண்டிருக்கிறாள். தன் நெற்றியில் அரும்பியிருக்கும் துளிகளை அவள் பொருட்படுத்தவில்லை. கவலையால் விகார மடைந்த கண்களால் தலைமை ஸிஸ்டரின் வருகைக்காக அங்குமிங்கும் துருவித் துருவிப் பார்க்கிறாள்.

தலைமை ஸிஸ்டரை மற்ற ஸிஸ்டர்மார்கள் தேடிப் பிடித்துக் கொண்டு வருமுன் குழந்தைக்கு ஏறக்குறைய மயக்க நிலைமை ஆகிவிட்டது. எப்படித்தான் அந்த எடை போடும் எந்திரத்தில் ஏற்றினுர்களோ, இல்லை, எதற்குத் தான் ஏற்றினுர்களோ, அந்தத் தாய்க்குப் புரியவில்லை. எப்படியோ அந்தச் சடங்குகளெல்லாம் ஆகி, ஒரு படுக்கை யில் கிடத்தியும் விட்டார்கள். தாயும் ஓய்ந்துபோய்க் கட்டிலின் கால் மாட்டில் சாய்ந்து உட்கார்ந்து விட்டாள்.

இரண்டு மணி நேரமாகியும் டாக்டரைக் காணும். வார்டு டாக்டர் வருகிற சமயம், 'அட்மிட்' செய்த டாக் டரையோ, தான் அந்நியளாக, அந்த ஆஸ்பத்திரியில் நம்பி வந்த ஒரே ஒரு ஆதரவையோ, அந்த ஆதரவைத் தேடிப் போயிருக்கும் தன் கணவனையோ, இன்னும் காணவில்லை.

சற்று நேரத்துக்கெல்லாம் 'ஸிஸ்டர்' என்று ஒரு கம்மிய அடங்கிய, என்றுலும் பீதி நிறைந்த, ஒரு பெண் குரல் கேட்டது. அங்கே அக்கம் பக்கத்துப் படுக்கைகளைத் தட்டி உதறிப் போட்டுக் கொண்டிருந்த ஒரு மாணவி— 'ஸ்டு டன்ற் நர்ஸ்'—சற்று விறைப்பாக நடந்து வந்து, "என்ன இது" என்று அந்தத் தாயை ஒரு அதட்டல் போட்டவள், குழந்தையை ஒரு கண்ணோட்டம் விட்டதும், கையிலிருந்த தலையணை உறையை அடுத்த படுக்கையில் அப்படியே வீசி யெறிந்து விட்டு, தலைமை சிஸ்டரைத் தேடி ஓடினுள். இரு வருமாகத் திரும்பி வந்தபோதுதான் தலைமை சிஸ்டரிடம் கொஞ்சம் ஏச்சு வாங்கற் தயாரான பாவம் அந்த மாணவி யின் முகத்தில் தோன்றியது. தலைமை சிஸ்டர் அதற்கு மாருக, அவசர அவசரமாக ஒரு சிட்டு எழுதிக் கொடுக்க, அப்பெண் வார்டு டாக்டரைத் தேடி ஓடினுள். நல்ல வேளை, அவர் அப்போதுதான் வாசலை நோக்கி வந்து கொண் டிருந்தார்.

எல்லாம் எவ்வளவு சீக்கிரம் ஆகிவிட்டது ! ஒரு உயிர் கூட்டைவிட்டுப் பறந்து போகும்போது, யாருடைய கட்ட ளைக்காகக் காத்திருக்கிறது ? டாக்டர்களும், நர்ஸ்மாரும்

ஒரு கூட்டமாக, சுற்றிலும் திரையிட்டிருந்த அந்தக் கட்டிலை விட்டு வெளியேறும்போது, திரைக்குள்ளிருந்து ஒரு தீன மான அழுகுரல், அமுக்கி, அடக்கி, வெளிவர இயலாமல் தத்தளிக்கும் துயரத்தின் சன்னமான குரல் மெதுவாகக் கேட்கிறது. வெளியில், அக்கம் பக்கத்துக் கட்டில்களில் தங்கள் குழந்தைகளை வைத்துக் கொண்டிருக்கும் தாய்மார் களின் முகங்களில், பீதியின் நிழல், மரண இருளின் சாயல் படர்கிறது. யாரும் திரைக்குள்ளே போகத் துணியவில்லை. அங்கே தாதிமார்களுக்கு உதவி புரியும் ஒரு பணிப் பெண், 'வார்டர்' ஒருத்தி, பையத் திரையைத் திறந்து, ஏதோ ஒரு மனித இரக்கம் உந்த, கீழே குனிந்து, தரையோடு தரை யாகக் கிடந்த தாயின் குலுங்கும் தோள்களைத் தொட்டு "அளாதிங்கம்மா. நடந்தது நடந்திரிச்சி" என்று தேற் றினாள்.

மனிதக் குரலின் ஆதரவைக் கேட்டதும் அழுகை இன்னும் பெரிதாகிறது.

"ஏம்மா, கொளந்தையை எப்படி வீடு சேக்கிறதுன்னு கவலையாம்மா ?"

"ம்......ம்—...ம்......ம்" அழுகை.

"கவலைப் படாதீங்கம்மா. கொளந்தையை இப்பவே ஐஸ் ரூமில் கொண்டு வச்சுடுவாங்க. கொளந்தைக்கு ஒண் ணும் வராதும்மா, ஒரு கேடும் வராதும்மா !"

ஆறுதல் வார்த்தை. ஆனால் அழுகை பொத்துக் கொண்டல்லவா வருகிறது ? கரை புரண்டு, பெருவெள்ள மாக.

டக் டக் டக் டக். சுற்றிலும் ஒரே பரபரப்பு.

டாக்டர் வருகிறார். ஓட்டமும் நடையுமாக வருகிறார். அவருடன் ஓட இயலாமல் இரைத்துக் கொண்டே ஓடி வருகிறார், ஒரு பட்டிக்காட்டு மனுஷர். கலைந்த தலை. வியர்வையும் அழுக்கும் படிந்த சட்டை; ஒருவார வளர்த்தி யுள்ள மீசையும் தாடியும்: கவலையின் உருவம்.

அந்த வார்டு முழுவதுமே நடுக்கத்தோடு, டாக்டர் திரைக்குள்ளே நுழைந்ததைக் கவனித்தது. உள்ளே அழுகை நின்றுவிட்டது. ஆனால் டாக்டர் உள்ளே சென்ற அதே வேகத்தோடு வெளியே வந்துவிட்டார். கையில் கேஸ் ஷீட். கண்களில் தீ. வார்டு ஸிஸ்டர், கையிலே பேஷனில் லோஷன் நீரும் துவாலையுமாக, நடுங்கிக்கொண்டே, கூனிக் குறுகி நின்றாள்.

டாக்டர் கண்களில் கனல் பறக்க, ஸிஸ்டரிடம் ஆங்கிலத்தில் ஏதோ கேள்விகள் கேட்டார். பதில் பதற்றத்தோடேயே வந்தது. கேஸ் ஷீட்டைப் புரட்டிப் பார்த்துவிட்டு, அதை ஸிஸ்டரின் கையில் விட்டெறிந்தார் டாக்டர். அவர் உடல் பதறிற்று.

''ஞே கோராமின். ஞே ஆக்ஸிஜன்.'' உறுமலாக வார்த்தைகள் வெளிவந்தன. பிறகுதான் சுற்று முற்றும் பார்த்தார். அந்தப் பட்டிக்காட்டு மனிதர், இடி விழுந்த மரம் மாதிரி சுவரோடு சாய்ந்து நின்றுகொண்டிருந்தார். கண்களில் ஜீவன் இல்லை. டாக்டரின் முகத்தில் எங்கிருந்தோ வந்த ஒரு மென்மையான உணர்ச்சி தெரிந்தது. மெதுவாகப் போய், அந்த மனிதரின் தோள்களைத் தொட்டு, "அண்ணா!" என்றார்.

குரல் கரகரத்தது. வார்த்தை வெளிப்படும்போது தம் கைக்குட்டையால்—பட்டுக் கைக்குட்டையால்—முகத்தைத் துடைத்துக்கொண்டார்.

பதில் சோகமாக வந்தது.

''என்னடா!''

''ஏன்? எனக்கு முன்னமே தெரிவிக்கக் கூடாது?''

''தெரிவிக்கலே. நேத்துத்தான் இப்பிடிக் கூடுதலாச்சி. நான் சொன்னா, இவ கேக்கலே. பெறவு வளி இல்லே. தந்தி சேரு முன்னே,: நாமே போயிருவோமின்னு வந்தோம். அதுக்கிப்ப என்ன?''

டாக்டர் செல்லப்பாவின் கண்ணீர் நிறைந்த கண்களை அந்த வார்டு ஸிஸ்டர்கள் பார்க்கக் கூசியபடி அங்கொருவர் இங்கொருவராக அவரவர் வேலைகளில் நாசூக்காக ஈடுபட்டுக் கொண்டார்கள்.

எங்கேயோ ஒரு மூலையில் ஒரு சிறு குழந்தை கிலுக் கொன்றைக் கிலுக்கிக்கொண்டு, மீண்டு வரும் ஆரோக்கியத் தின் சந்தோஷத்தில் 'கிளுக்' என்று சிரித்த ஒலி கேட்டது.

இன்னும் ஒருவன், எழுந்து உட்கார்ந்து, அப்போதுதான் ஊசி போட்ட தன் சிறு கையைப் பார்த்து ஏங்கி ஏங்கி அழு கிறான்.

திரைக்குள்ளிருந்து சன்னமான அழுகைக் குரல் மீண்டும் தொடர்ந்தது.

ஆயிற்று. தள்ளுவண்டி வந்து கொண்டிருக்கிறது கூடவே மரணதூதர் போல இரண்டு வார்டர்கள்.

"அண்ணு!"

".........ம்"

"நம்ம வீட்டுக்குத்தானே?"

"இல்லே யில்லே!" பதற்றத்தோடு, அழுகைக்குரலில், நொந்த மனத்தின் எதிரொலியாக, திரைக்குள்ளிருந்து வந்தது அண்ணியின் மறுப்பு.

அண்ணனும் தம்பியும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

"அப்பவே சொன்னேன்;" குரல் அழுகையோடு இழைந்து பன்னிப் பன்னி வந்தது. "அங்கேயெல்லாம் போக வேண்டாம், போகவேண்டாமின்னு... இப்ப என்ன ஆச்சி? எங் கண்மணியெயும் என்னெயும் வீட்டிலே கொண்டு..." குரல் விக்கலில் போய் நின்றது.

தாய்மையின் துயரத்துக்கு முன்னால், அந்த இரண்டு ஆடவர்களும் தலை வணங்கி நின்றார்கள்.

வண்டி பிரேதத்தைச் சுமந்து முன்னே செல்ல, இரண்டு ஸிஸ்டர் மார்கள் தாயைத் தாங்கி நடத்த, சகோதரர் இருவரும் துயரச் சுமையோடு பின்னே நடந்தார்கள்.

''அண்ணு?''

''...........''

''எனக்குப் பொம்மியெப் பார்க்கணும் போலிருக்கு!''

தங்கராஜ் தொண்டையைத் திறந்து அழுதுவிட்டார்.

''ஒனக்கில்லாத சொந்தமாடா எனக்கு? நீ தோளில் போட்டு வளத்த பிள்ளெ தானேடா அவ'' என்று பொருமினர்.

''குழந்தைக்கு நான் அனுப்பின அந்தப் பொம்மையை யாவது குடுத்திகளோ அண்ணு?''

தங்கராஜ் இல்லே என்பதாகத் தலேயை அசைத்தார்.

செல்லப்பன் கண்ணிலிருந்து ஒரு சொட்டுக் கண்ணீர் கீழே விழுந்தது.

''ஆரெப்பத்தி என்ன சொல்ல? அவரவர் தலையெழுத்து. எண்ணுலும், நீ இப்பிடி நடப்பேண்ணு...''

''அண்ணு!''

''...........''

''இப்பவாவது என்னுலான உதவியெச் செய்யலாமோ''

''இப்ப ஒன்னுலே என்னடா முடியும்? எல்லாந்தான் ஆச்சே!''

''.........''

ஆனுலும் செல்லப்பன் தன்னுலான எல்லாந்தான் செய்தான். இனியும் செய்யவேண்டிய காரியங்கள் நிறைய இருந்தன. ஊருக்கு, துயரச் சுமையோடு, புறப்படுவதற்குக் காரும் தயாராக வந்து நின்றது.

செல்லப்பன், "பொம்மிக்குட்டீ!" என்று கதறியே விட்டான்.

தங்கராஜ் அவனைப் பார்த்த பார்வையில், துக்கத்தோடு கோபமும் கலந்திருந்தது. காரின் ஒரு மூலையில், ஒரு பெண்ணுருவம், சோகமே உருவாக, முடங்கிக் கிடந்தது. உயிர் இருப்பதாகக் கூடத் தெரியவில்லை.

"நானும் வரட்டுமாண்ணா?"

"வேண்டாமிடா. அம்மையெ இனியும் வருத்தப்படுத்தாதே, கெடச்சது போரும்."

கார் குலுக்கிக்கொண்டு புறப்பட்டது.

"மனிதனுக்கு இதயம் இருக்கக்கூடாது" என்று செல்லப்பனின் வாய் முணு முணுத்தது.

நீண்ட நேரம் நின்ற இடத்திலேயே நின்றான், கார் போன திசையில் பார்த்தவனாக. பின்னர், தான் ஷெனாய் நகரில் கட்டி யெழுப்பியிருந்த மாளிகைக்கு நேராகத் திரும்பினான். 'கேட்டு'த் தூணில், டாக்டர் செல்லப்பா, எம். டி., என்று ஆங்கிலத்தில், பொன்னெழுத்துக்களில் பொறிக்கப் பட்டிருந்தது. கேட்டின் முன்னால் ஒரு நிமிஷம் தயங்கி நின்றான். அவன் கண்களில் ஒரு கலக்கம். ஏதேதோ பழைய நினைவுகள். பனிப் படலம் போல ஏதோ ஒன்று அவன் முகத்தில் நிழலிடுகிறது. பிறகு மறைந்து விடுகிறது. கண்களில் முன்போல ஒரு திடம். முகத்தில் ஒருகனம். நடையில் ஒரு உறுதி. இப்போது செல்லப்பன் அல்ல, டாக்டர் செல்லப்பா கேட்டின் மணியை அழுத்துகிறார்.

உள்ளேயிருந்து வரவேற்பாக; வந்தது ஒரு அல்சேஷியனின் குரல்.

ஆரஞ்சுப் பழம் போன்ற ஒரு பிஞ்சுமுகம் வராந்தாவில் எட்டிப் பார்க்கிறது.

"டாடீ!" குரல் கீச்சுக்குரல், அணிலைப்போல, இன்பமயமாயிருந்தது.

ஒரு பியூன் அவசரம் அவசரமாக வந்து கேற்றைத் திறக்கிருன்.

டாக்டர் செல்லப்பா, ‘டக்டக்’ என்று பளிங்கு போன்ற படிகளில் ஏறிப்போய், குழந்தையை வாரியெடுத்து, அணைத்துக் கொள்கிருர்.

‘‘மினிம்மா! மம்மி எங்கே?’’ என்ற கொஞ்சலோடு, அவளை அவசரமாகக் கீழே இறக்கிவிடப் போனுர்.

குழந்தையோ, ‘‘ஊஹூம்’’ என்று சிணுங்கியவாறு அவர் தோளை இறுகப் பற்றிக்கொண்டாள்.

‘‘மம்மி டாடா!’’ என்று தாய் சென்ற வழிக்கு நேராக, ரோட்டில், சுட்டிக் காட்டினுள்.

செல்லப்பா உள்ளே பார்த்தார். உள்வாசலில் குழந்தையின் ஆயா, நடுத்தர வயதுள்ளவள், நல்ல சலவை செய்த வெள்ளைச் சேலையை. கிராமத்துப் பாணியில் கட்டினவளாய் நின்ருள்.

‘‘அம்மா வெளியே போயிருக்காங்க. வர்றதுக்கு நேரமாகுமிண்ணுங்க. காரை ஒன்பது மணிக்கு ரஞ்சனி சபாவுக்கு அனுப்பச் சொன்னுங்க’’ என்று ஒப்புவித்துவிட்டு, காப்பிக்கு அழைப்பு விடுத்தாள்.

டாக்டர் செல்லப்பா, அதிருப்தியையும் ஆத்திரத்தையும் காட்டிக்கொள்ளாமல், குழந்தையை வலுக்கட்டாயமாக ஆயாவிடம் கொடுத்தார்.

‘‘எனக்கு இப்போ காப்பி வேண்டாம். அவசர வேலை. மினி வந்து தொந்தரவு செய்யாம பார்த்துக்க. டிரைவரை ஜாக்ரதையா ஒன்பது மணிக்கு அனுப்பிவிடு. சாப்பாட்டு வேளைக்குக் கதவைத் தட்டினுல் போதும். யாராவது வந்தால் ‘அவுட்’ என்று சொல்லு’’ என்று ஆயாவிடம் பாடம் ஒப்புவித்து விட்டு, ‘விசுக் விசுக்’ என்று நடந்துபோய், வராந்தாவின் ஒரு பக்கமாக அமைந்திருந்த ஆபீஸ் அறையைத் திறந்து தாளிட்டுக்கொண்டார்.

ஆபீஸ் அறையில் டாக்டர் புகுந்துவிட்டாரென்றால், பிறகு யாருக்கும் உள்ளே செல்ல அனுமதி கிடையாது.

"டாடீ!"

குழந்தையின் அழுகுரல் உச்சஸ்தாயியில் கேட்டது.

என்றுமில்லாமல் தலையைச் சுற்றிக்கொண்டு வருகிற தாக ஒரு பிரமை செல்லப்பாவுக்கு.

ஆயா, குழந்தையை ஒருகையால் இறுகப் பற்றிக் கொண்டு, மறுகையால், சுவரில் 'இன்' என்று பொறிக்கப் பட்டிருந்த பித்தளைத் தகட்டை நகர்த்தி, 'அவுட்' ஆக்கி வைத்தாள். அதாவது, டாக்டரைத் தேடி வருகிறவர் களுக்கு, டாக்டர் இல்லை என்று அறிவிக்கப்பட்டது. இடை யிடையே அல்சேஷியனின் உறுமல் கேட்டது. பிறகு நிசப் தம். யார் யாரோ டாக்டரைத் தேடிவந்து, ஏமாற்றத் தோடு திரும்பிப்போகிறார்கள்.

இரவு ஒன்பது மணிக்கு டாக்டரின் கார் கனைத்துக் கொண்டு புறப்பட்டது. குழந்தை தூங்கிப் போயிக்கவேண் டும். அழுகை நின்றிருந்தது. ஆயா கூடத்தை திறந்து வைத்துக்கொண்டு, வராந்தாவில் காற்றாறலுக்காக நின்று கொண்டிருந்தாள். அம்மாவின் வரவையும் எதிர்பார்த்து. வானம் நிறைய நட்சத்திரங்கள் பூத்திருந்தன. வ்ராந்தா ஓரமாக நின்றிருந்த ரோஜாச் செடிகளிலிருந்து, ஒரு இனிய மணம் காற்றில் கலந்து வந்தது. வாசல் படியிலேயே கட்டிப் போட்டிருந்த அல்சேஷியனின் உறுமல் குரல் யாரோ வருகிறார்கள் என்று அறிவித்தது.

இப்போது அல்சேஷியனின் குரலில் ஒரு உற்சாகம். டாக்டரின் கார்தான் வருகிறது. காரின் கதவைத் திறந்து கொண்டு, ஒரு பெண் ஸில்க் ஸாரி சலசலக்க, அழகு நடை நடந்து வந்தாள். அவளுக்குப் பின்னால் ஒரு இளைஞன் வெல்வட் உறை போட்ட வீணையை, மிக வினயமாகச் சுமந்து வந்து கூடத்தில் கிடந்த ஸெற்றியில் வைத்தான்.

''குட்னைட்'' என்று வாசலில் நின்றவாறு வணக்கம் செலுத்தினன். அவளும் அழகுச் சிரிப்பு ஒன்று சிரித்துக் கொண்டு, பதிலுக்கு வணக்கம் செலுத்தினுள். அவன் இறங்கி நடக்கிற சப்தம் நாயின் குரைப்பில் மறைந்து விடுகிறது.

"டாக்டர் வரலையா?'' அவள் ஆயாவைக் கேட்டாள்.

அதற்குள் ஆபீஸ் அறையின் கதவு மெல்லத் திறந்தது.

அவளுடைய சிரித்த பார்வை அந்தப் பக்கமாகத் திரும்பியது. ஆனல் அந்த அழகிய புன்னகை வாசலில் தோன்றிய சோர்ந்த முகத்தில் பிரதிபலிக்கவில்லை.

"விசேஷம் ஒண்ணும் இல்லிங்களே?'' என்று அவள் கேட்டாள். பரிவுடனும் கவலையுடனுந்தான்.

''அப்புறம் சொல்றேன், வா. எனக்குப் பசிக்குது.''

அவள் சட்டென்று பின்கட்டு வாசலை நோக்கவே, ஆயாவின் நிழல் உள்ளே விரைந்தது. பாத்திரங்கள் மோதிக் கொண்ட ஓசைக்கும், வேலைக்காரப் பையன் அங்குமிங்கும் ஓடும் அரவத்துக்கும் இடையே, டாக்டர் செல்லப்பா கூடத்தில் கிடந்த சோபாவில் சென்று அமர்ந்து கொண்டார். அவளும் பக்கத்தில் அமர்ந்து கைக்கடிகாரத்தைச் சாவகாசமாகக் கழற்ற ஆரம்பித்தாள்.

செல்லப்பாவின் கண்கள் அவளை ஏற இறங்கப் பார்த்தன. அவற்றில் ஒரு அதிருப்தி.

அவள் முத்துப் பற்கள் சற்றே தெரிய வீணையைச் சுட்டிக் காட்டினுள்.

"விடவே மாட்டேண்ணுங்க. பேனேன். நீங்க எங்கே போயிட்டீங்க? ட்ரைவரைக்கூட அப்படியே அனுப்பிட்டீங்களாமே?''

சபாவில் வீணைவாசித்துவிட்டு வந்த அவள் மெல்லிய தளிர்க் கரங்களில், பொன்வளையல்கள், மென்மையாக, மிகவும் மென்மையாகக் குலுங்கின. ஒரு மெல்விரலை, நீலக்

கல் பதித்த மோதிரம் ஒன்று அணி செய்து, தந்தம்போன்ற அதன் நிறத்தை எடுத்துக் காட்டிற்று. செல்லப்பாவின் பார்வை ஒருகணம் அதில் நிலைத்தது.

"வா, சாப்பிடப் போகலாம்'' என்று திடுதிப்பென எழுந்து நின்றார் செல்லப்பா. அவள் முகத்தை அவர் பார்க்க வில்லை. அவளும் எழுந்தாள்.

"ஆமாம், என்னை யார் அழைச்சிக்கிட்டு போனாங்க தெரியுமோ?'' என்றாள் குழந்தைபோலச் சிரித்துக்கொண்டு.

"....................ம்''

"உங்க பழைய நண்பர். டாக்டர் பொன்னையா என்று நீங்க ஒன்றிரண்டு தடவை சொல்லியிருக்கீங்களே?''

"ஆ!'' என்று தன்னையறியாமலே கூறிவிட்ட செல்லப்பா வார்த்தையை அடக்கிக் கொண்டார்.

"அவர் சபா கமிற்றியில் அங்கமாம். அவருக்கே நான் உங்க மனைவின்னு தெரியாமப் போச்சாம். உங்க மனைவி பாடுவாண்ணு யார் யாரோ சொல்லிக் கேட்டிருக்காராம். நான் யார்னு புரிஞ்சப்போ ஆச்சர்யமாப் போச்சாம்.''

"........ம்''

"இப்போ பசுமலையில்தான் இருக்காராம்.''

"........ம்''

"பாட்டென்றால் மனுஷனுக்கு உயிர்.''

"அிருக்கட்டும். உன் வாசிப்பு எப்படி இருந்தது?''

"ஒரே புகழ்மாலைதான் போங்க. டாக்டர் பொன்னையா பாராட்டினதைக் கேட்டால்...''

"..............?''

"உங்களுக்கே ஆச்சரியமாயிருக்கும். உங்களுக்கு இப்படி யும் ஒரு மனைவி இருக்கிறாளா என்று எங்க லேடீஸ் கிளப் செக்ரட்டரி கிட்டே ஆனாலும் இவுங்க இப்படிப் பிரமாதமா

வாசிப்பாங்கண்ணு முந்தி ஒரு வாக்குச் சொல்லலை யேண்ணுர்.''

''வசந்தா, எனக்குப் பசிக்குது சாப்பிட வாயேன். நிறைய விஷயம் இருக்கு உன்கிட்டெ பேச.''

இருவரும் சாப்பிட எழுந்தார்கள். செல்லப்பா அவள் முகத்தை ஓரக் கண்ணுல் பார்த்தார். அவர் உள்ளம் குழம்பிப் போய்க் கிடந்தது. அவள் கன்னங்களிலோ, உவகைச் சிவப்பேறி, அவற்றுக்கு மெருகு கொடுத்திருந்தது. கண்களில் ஒரு ஒளி துள்ளி விளையாடிற்று. செல்லப்பாவின் மனம் பழைய காலங்களுக்கு ஒரு தாவு தாவிற்று. அங்கே ஒரு பெண், தெய்வ மோகினி, சபைக்கு முன்னுல் வீணவாசிக்கிறுள். அவள் தளிர்க்கரங்களில் பொன்வளையல்கள் மின்னுகின்றன. அவனுக்கு நேரே அவள் ஒரு சிரிப்பை உதிர்க்கிறுள். பெண்களின் சிரிப்பு! பயப்படவேண்டிய விஷயந்தான். அதற்கு முன்னுல் அவனும் பொன்னையாவும் தலைவணங்கி நிற்கிறுர்கள்.

இந்தப் பொன்னையா இப்போது இங்கேயும் வந்து முளைத்து விட்டானு? ஒழுங்காக, மதுரையில்தான், பிரைவேட் ஆஸ்பத்திரி வைத்துக்கொண்டு கௌரவமாகக் குடும்ப வாழ்க்கை நடத்துவதாக அல்லவா நினைத்திருந்தான். தன்னைப் போலில்லாமல்...

''பசி பசிண்ணு சொன்னீங்க, ஒண்ணும் சாப்பிடக் காணுேமே?''

''அதிகம் பசிச்சா சாப்பிட முடியுமா?''

''எனக்கு முடியுமே!''

'கிளுக்' என்று ஒரு சிரிப்பு. இவளுக்கு எதற்குச் சிரிப்பு? எப்படிச் சிரிக்க முடிகிறது? இதுதான் நகர வாழ்க்கை. நாகரீகம். வாயில் இரண்டு கவளம் போட்டாக வேண்டும்.

''மினியை எப்படி விட்டுவிட்டுப் போயிட்டே?''

''அவளுக்கு ஆயாவைக் கண்டா மம்மி எதுக்கு?''

"குழந்தை பாவம்!''

"ஆமாம். எங்கிட்டெ சொல்ல விஷயம் நிறைய இருக்கின்னீங்களே?''

செல்லப்பா பெருமூச்செறிந்தார்.

''அண்ணு வந்திருந்தார்.''

''..............?''

''என்னை ஆளாக்கிவிட்ட அண்ணு தெரியுமே உனக்கு?''

''...............''

''அவர் குழந்தை போய்விட்டது.''

''அப்படீண்ணு?''

''பொம்மி இறந்து போச்சு. நம்ம ஆஸ்பத்திரியில், கொண்டு போயிட்டாங்க.''

''நீங்க ஒரு பொம்மைகூட வாங்கி அனுப்பினீங்களே?''

''ஆமாம். அதுதான். பொம்மிதான்.'' அவன் கண்கள் கலங்கின.

வசந்தாவின் கண்களில் துள்ளிய ஒளி அடங்கிப்போய், அமைதியும் அனுதாபமும் தெரிந்தன. ஏதோ ஒரு சிறு வருத்தத்தின் நிழலும் படர்ந்தது. ஒரு நிமிஷத்துக்குத்தான், பிறகு மௌனமாக சாப்பாட்டில் முனைந்தாள், ஒன்றும் பேச விரும்பாதவளைப் போல்.

செல்லப்பா, நினைவுகளை உதறித் தள்ளும் முயற்சியில், ஒரே எட்டில் பேசினுக்குச் சென்று, கையைக் கழுவித் துவாலையில் துடைத்துக்கொண்டார். பின்னர் அரைப் புன் சிரிப்போடு, தன்னைத் தேற்றிக்கொண்டவர் போல், வசந்தாவின் அழகிய முத்தை ரசிக்கும் பாவனையில், தன் கண்களை ஓடவிட்டார். அழகாகக் கோதி முடித்து, பிச்சி சரத்தால் அலங்காரம் செய்யப்பட்ட அந்தக் கரு நீலக்கொண்டை முதல், நீலக்கல் மோதிரம் அணி செய்யும் அந்த மெல்லிய தந்த விரல் வரை—

பிறகு என்ன தோன்றிற்றோ? முகத்தைச் சட்டென்று திருப்பிக்கொண்டார்.

“நீ இனி மேடை ஏறி வீணைவாசிக்கப் போக வேண்டாம். ஆமாம், சொல்லிவிட்டேன்” என்று கூறிவிட்டு, ஒரு சிறு உறுமலோடு கூடத்தினுள் புகுந்து, வாயில் சிகரட்டும் கையில் பத்திரிகையுமாய் ஒரு சோபாவில் சாய்ந்து கொண்டார்.

‘‘ஆமாம், சொல்லிட்டீங்களோ இல்லையோ’’ என்ற இனிமையான கேலிக்குரல் சாப்பாட்டு அறையிலிருந்து தன்னை வந்து எட்டினதாக அவர் காட்டிக்கொள்ள வில்லை· பத்திரிகையை, முகத்துக்கு முன், கௌரவத்தோடு விரித்துப் பிடித்திருந்தார். கண்கள் பத்திரிகையின் தலைப்புக்களை ஆராயும் பாவனையில் ஈடுபட்டிருந்தன. ஆமாம், வாழ்க் கையே ஒரு பாவனையா? நடிப்பா?

நடிப்புத்தான். வேறென்ன? அவள் போகிற போக்குக் கெல்லாம் விட்டுக்கொடுக்காவிட்டால் அழுது விடுகிறாள். யார் அழுதாலும் சரி, அதிலும் ஒரு பெண் அழுகிறது, செல லப்பாவுக்குப் பொறுக்க முடியாது. கல்யாணம் ஆன புதுசில், சில நாட்களுக்குள்ளேயே, அந்தப் பல பரீட்சையெல்லாம் நடந்து, மென்மைக்கெதிரில் ஆண்மை தன் தோல்வியை ஒப்புக்கொண்டாகிவிட்டது.

கலை வாசனையால் சூழப்பட்டிருந்தவள். குழந்தைப் பருவத்திலேயே நாலு பேரால் புகழப்பட்டு, புகழுக்காகவே வளர்ந்தவள். அதை அறிந்துதானே தன்னை மயங்க விட் டான்? இப்போது போய் அவளைக் குறை சொல்வது எதற்கு? மனதில் உள்ள எல்லாம் நாவில் கூசாமல் வரு கிறதா? அவளால் கேட்கத்தான் இயலுமா? எது எப்படிப் போனாலும் வீட்டில் நிம்மதி வேண்டும். அதாவது சச்சரவு கூடாது. நிம்மதியின் தோற்றம், நடிப்பு—அதாவது வேண் டும். குழந்தை மினிக்காகவாவது, அவள் களங்கமறியாத. மனம் நிறைந்த சிரிப்புக்காகவாவது. அதிலாவது நடிப்பு இல்லை; இல்லவே இல்லை!

அப்பன் சாகக் கிடக்கும்போது, தனக்கு ஆறுதலையும் அனுதாபத்தையும் தன் கண்களால் கூறிக்கொண்டிருந் தாளே ஒருத்தி, அவளுடைய நடிப்பைத்தான் என்ன சொல்வது!

நடிப்புத்தான், அழக்கூடச் செய்யலாம் போலிருக் கிறது வெளிவேஷத்துக்காக. அண்ணன் சொன்னரே, அவள் அழுதழுது கண்ணெல்லாம் வீங்கிப் போயிருக்கிற தென்று! அந்த அழுகை ஒரு போஸ்டு கார்டு விலைபெறாத அழுகைதானே!

அண்ணன் மட்டுமென்ன? இத்தனை அன்பு செய்தார். நிலத்தை விற்றுத் தம்பியைப் படிப்பித்தார். அந்த அன் புக்கு ஜாதி மதத்தைக் கடக்க முடியவில்லையே? அண்ணன் விரும்பின பெண்ணை மணந்தார். தம்பியின் விருப்பத்தைக் கேட்டா கல்யாணம் செய்து வைத்தார்? கட்டாயப்படுத்த வில்லை என்பார். ஆனல் அவருக்கு அப்படிச் சொல்லித் தப்பித்துக் கொள்ளலாமே தவிர, உண்மை அதுவல்லவே? பொம்மியின் அடக்கத்துக்குக்கூட, போக அனுமதிக்காத அன்பு! அன்பு என்று ஒரு வேஷம் வேண்டியிருக்கிறதா!

அன்னியைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். தன்னை அன்னியனுக்கிவிட்ட பொறுப்பு முற்றிலும் அண்ணியினுடை யது. அண்ணியிடம் ரத்தபாசத்தை எதிர்பார்க்கவில்லை. ஆனல் தன்னை மனிதனுக நினைக்க முடியவில்லையே! வசந்தத் துக்கும் அண்ணிக்கும் யாதொரு ஒற்றுமையும் கிடையாது தான். ஆனல் வசந்தத்தை ஏற்றுக்கொள்ளும்படி அண்ணி யிடம் சொல்லவே இல்லையே! அதற்காகத் தன்னையும் வேற்று மனிதனுக்க வேண்டுமா? பிறந்த வீட்டோடு பந் தமே இல்லாமல் ஆக்கிவிட வேண்டுமா? அண்ணன் மனத் தோடு நில்லாமல். அம்மையின் மனத்திலும் விஷம் ஏற்ற வேண்டுமா? தன் விஷயத்தில், தன் முதல் திருமண ஒழுங்கு களில், அந்த நாசகாரி எமிலியிடம் வந்த தகராறுகளில் இத்தனை அக்கறை, ஈடுபாடு, எல்லாம் வேஷந்தானே? அன் பினுல் ஏற்பட்டதா? ஏதோ குடும்பப் பெருமைக்காக,

வெளித்தோற்றத்துக்காக எடுத்துக்கொண்டே ஒரு 'போஸ்' ஒரு நடிப்புத்தானே!

பொன்னையா மட்டும் என்ன? அப்பப்பா, என்ன சிநேகம், என்ன சிநேகம்! என்ன சிரிப்பு, என்ன கைகுலுக்கு, என்ன துள்ளல்! வெறுந்தோற்றம், ஏமாற்றுப் படம்!

உலகமே சினிமாதானு?

தான் எக்கேடு கெட்டால் இவர்களுக்கெல்லாம் என்ன?

தொழில் இருக்கிறது. உலக வாழ்க்கை வாழ்ந்தாக வேண்டியிருக்கிறது. நன்ருகத்தான் வாழ்ந்து கொண்டிருக்கிருன். அந்த வட்டாரத்தில் அவன் வீடுதான் பெரிய வீடு. அழகான வீடு. அழகு மனைவி, அழகுக் குழந்தை.

பேப்பர் வாசிக்கக்கூட மனதுக்கு நிம்மதி வேண்டும்.

## 8. ஆசைக்கோரளவில்லை

கன்னியாகுமரிக்குப் போகவேண்டுமென்றதும் மினிக்கு ஒரே கொண்டாட்டம். தனது இந்தப் பதினாறு ஆண்டு வாழ்க்கையில் தெற்கே காலெடுத்து வைத்தது இல்லை. பேர் போன டாக்டரான தனது தந்தை, மகாநாடுகள் என்றும், வேலையென்றும், ஆராய்ச்சியென்றும் டில்லிக்கும் பம்பாய்க்கும் போகும்போது கூடப் போயிருக்கிறாள். பைஜாமாவும், தோளில் மெல்லிய தாவணியும் அணிந்து அவள் போகும்போது சினிமா ராணி மாதிரி இருக்கிறாள். வசந்தாவுக்குத் தன் மகளையிட்டுப் பெருமை தாங்கவில்லை. செல்லப்பாவுக்கு மட்டும் கூடவே ஒரு கவலையுணர்ச்சி இருந்து கொண்டே இருந்தது. பள்ளிப் படிப்பு முடிந்து, கல்லூரியில் இருக்கும் அவளுக்குப் படிப்பு ஒரு பொருட்டாக இருந்ததாகத் தெரியவில்லை. தன் பாட்டுக்கு நிலைக்கண்ணாடி முன் நின்று அழகுத் தொண்டு செய்கிறாள். தோழிகளுக்கு இங்கிலீஷில் போன் செய்கிறாள். பியானோ கற்றுக்கொண்டு பொழுது போக்குகிறாள். ஏதோ விளையாட்டுப் பிள்ளை மாதிரியே வீட்டில் வளைய வருகிறாள். இரவு வேளைகளில் நாவல்களை நிறையப் படிக்கிறாள். எப்படித்தான் வருஷந்தோறும் பெயிலாகாமல் இருக்கிறாளோ? அவருந்தான் வீட்டிலா இருக்கிறார் அருமை மகளைக் கவனிக்க? அவருண்டு ஆஸ்பத்திரியுண்டு. வீட்டில் வந்தால் அவசரமாகப் படித்துத் தெரிந்துகொள்ள வேண்டிய புத்தகங்களுண்டு.

மினிக்கு, தன் தந்தையின் குடும்பத்தைப் பற்றிய இரகசியம் ஏதோ ஒன்று இருக்கிறது என்று உள்ளுணர்வு

உணர்த்தத்தான் செய்தது. யாரும் அதை அவளுக்குச் சொல்வாரில்லை. தாயிடம் கேட்டால், “அது டாடிக்குத் தெரியும்” என்றும், தந்தையிடம் கேட்டால், “அதெல்லாம் உனக்கு எதுக்கு டார்லிங்?” என்றும்தான் பதில் வரும். அதொன்றும் அவள் உற்சாகத்தைக் குறைத்துவிடவில்லை. அவள் பாட்டுக்குச் சிட்டுக் குருவி மாதிரி வளைய வருவாள்.

அன்று டாடிக்கு என்ன நேர்ந்தது? காலையில் ‘ஷேவ்’ கூடச் செய்யவில்லை. காப்பி குடித்ததாகப் பாவனை பண்ணினார். அம்மாவிடம், “உனக்கு இன்று லேடீஸ் கிளப்புக்குப் போயாக வேண்டுமோ?” என்று வழக்கம்போலப் பட்டும் படாமலும் கேட்டவர், “நீங்களும் வர்றீங்களோ?” என்ற விளையாட்டுப் பதிலைக் காதில் வாங்கிக்கொண்டதாகக்கூடத் தெரியவில்லை. மினி உடை உடுத்தித் தலையை வாரி அழகாக இரட்டைப் பின்னல் போட்டு, நிலைக்கண்ணாடியில் தன் அழகை ரசித்துக் கொண்டிருக்கும்போது, அப்பா பின்னால் வந்து நின்று கொண்டதைக் கண்டாள். அவர் முகம் சோர்ந்து வியர்த்துக் கிடந்தது. கண்களில் என்றுமில்லாத பரிவு மிளிர்ந்தது. பால் மனம் மாறாத குழந்தையின் நெற்றியில் முத்தமிடுவதுபோல குனிந்து உச்சி மோந்தார்.

“மினிம்மா, கன்னியாகுமரிக்கு ஒரு டிரிப். என்ன நினைக்கிறாய்?” என்று அப்பா சொன்னதும் அவள் வாயெல்லாம் பல்லாகத் தெரிந்தது.

“புறப்படு. இன்று ஞாயிற்றுக்கிழமைதானே! டாடியின் ஊரெல்லாம் நீயும் காணவேண்டாமா?”

துள்ளிக்கொண்டு போய்க் காரில் ஏறி உட்கார்ந்த போதுதான் கவனித்தாள். காரின் பின்னாக ஒரு பெரிய ரோஜா ஆரமும், ஒரு பெரிய பூச்செண்டும் வைக்கப்பட்டிருந்ததை. தந்தையின் முகத்தைப் பார்த்தால் அவரை ஒன்றும் கேள்வி கேட்கத் தோன்றவில்லை. குனிந்து உட்கார்ந்திருந்தார் மகளுக்கருகில். திடீரென்று ஏதோ நினைவுக்கு வந்தவர்போல் நிமிர்ந்தார்.

"அம்மா கிளப்புக்குப் போக கார் ஏற்பாடு செய்திட்டியா?" என்று டிரைவரிடம் கேட்டார்.

"அரை மணிக்குள்ளே வந்திடுங்க. அம்மா ரெடியாகு முன்" என்ருன் டிரைவர் திரும்பிப் பார்க்காமலே.

செல்லப்பா அவனை ஓரக்கண்ணுல் கவனித்துவிட்டு, மீண்டும் சிந்தனையில் ஆழ்ந்தார்.

கார் மதுரை நகரைக் கடந்தபோது, மினிக்கு இருபுறமும் பார்க்கவே வேளை போதவில்லை. எல்லாம் புதுசாக இருந்தது. இடையிடையே தந்தையைப் பார்க்கும்போது அவர் தூங்குகிருரா விழித்திருக்கிருரா என்று தெரியவில்லை.

தூங்கவில்லை நிச்சயந்தான்.

கார் நாகர்கோவில் 'கற்கோயிலை' அடைந்தபோது மணி இரண்டு. ஆலயத்தில் மதிய ஆராதனைக்கு ஆட்கள் சாரி சாரியாகப் போய்க் கொண்டிருந்தார்கள். செருக்கோடு நடந்து செல்லும் ஆடவர்கள், சேலைத் தொங்கல் காற்றிலே பறக்க பட்டாம் பூச்சிகள் போலத் தோற்றமளித்த பெண்கள், கோலூன்றி நடக்கும் தள்ளாத கிழவர்கள், வெள்ளைச் சேலையும் வேதாகமுமாக பக்தியை நினைவூட்டும் வயது சென்ற பெண்மணிகள் எல்லாருந்தான். மினிக்கு இந்தக் காட்சி புதுமையும் வேடிக்கையும், வியப்புமாக இருந்தது. செல்லப்பா திடீரென்று கண் விழித்துப் பார்க்கிருர். டிரைவரிடம் பதற்றத்துடன் "சே டிரைவர்! வழி தெரியவில்லை? வலப்பக்கமாக விடும்" என்று தலையை ஒரு திருப்புத்திருப்பி விட்டு மறுபடியும் கண்களை மூடிக் கொள்கிருர். அவள் தந்தை தலையைத் திருப்பிக் கொண்ட வேகத்தில், அவள் கவனம் ஒருகணம் அவரிடம் சென்றது. அந்த முகத்தில் ஒரு அருவருப்புணர்ச்சி, கடுமை, நெளிந்து மறைந்தது. மறுபடியும் தூங்குவது போன்ற தோற்றம். நெற்றியில் வியர்வைத் துளிகள் அரும்பி நின்றன.

வடசேரிக்கு வந்தபோதுதான் செல்லப்பா கண்ணைத் திறந்தார். ஞாயிற்றுக்கிழமை வடசேரியில் சந்தை கூடும் நாள். சந்தையில் ஒரே ஆரவாரமும் இரைச்சலுமாக இருந்தது. ரோட்டிலுங்கூட நெருக்கம். பேயன்பழக் குலைகள், மண் பானைகள் தலைச் சுமையாகவும் போயின. பெரிய லாரிகள். பஸ்ஸுகள் இவற்றின் ஊடே நின்று நின்று, சிரமத்தோடுதான் அந்த அழகான சிறிய பியட் காருக்கு வழி கண்டுபிடிக்க முடிந்தது. மினிக்கு உற்சாகம் தாங்க முடியவில்லை. அப்பாவும் அப்போதுதான் நன்றாக விழித்திருந்தார்.

ரோட்டின் இருபக்கமும் சினிமா சுவரொட்டிகள்—பெண்ணின் அங்க அழகுகளைப் பல கோணங்களில் நின்று ரசிப்பதற்குத் தூண்டும் படங்கள். ஒரு படம் 'வீணை பவானி'யினுடையது. ஒரு அழகான பெண் வீணையை அலங்காரமாக மடியில் வைத்துக்கொண்டு, தன் மெல்லிய விரல்களால் நரம்புகளை வருடும் கவர்ச்சிப்படம். எங்கும் இந்தக் கவர்ச்சிதான். ஆமாம், இப்படியேதான் கல்லூரியில் படிக்கும்போது, அந்த மெடிக்கல் காலேஜ் மாணவி—அவள் பெயர்கூட மங்கி மறைந்துவிட்டது—மேடையில் தோற்றமளித்தாள். இப்படியேதான் வசந்தாவும், முதல் சந்திப்பின்போது. அவள் தந்தைக்கு அவன் வெற்றிகரமாகச் சிகிச்சை அளித்ததற்கு நன்றி தெரிவிக்கத்தான் அவர் அன்று வந்திருந்தார். அவர் ஒரு ரசிகர். மகளின் வீணை ஞானத்தையிட்டு அவருக்குத்தான் என்ன பெருமை! தன்னைக் காப்பாற்றிய டாக்டரும் பாட்டு ரசிகர் என்று அறிந்தபோது மனுஷனுக்கு சந்தோஷம் தாங்கவில்லை. மகளின் வீணையைக் கேட்க இழுத்துக்கொண்டே போய்விட்டார். பெண்ணின் வீணுகானம்!

மினிக்கு ஏனோ வீணை பிடிக்கவில்லை. அது ஃபாஷன் அல்லவாம். பியானோ படிக்கிறாள். அதுவும் இன்பமாகத்தான் இருக்கிறது.

கார் பனைவிளையை நெருங்கியபோது செல்லப்பா நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டார். அவர் கண்களை ஏதோ

திரையிடுகிறது போன்ற மயக்கம். நீண்டு நிமிர்ந்து உயர்ந்து வளர்ந்திருந்த பனைமரங்களின் கூட்டங்களைக் காணோம். மாறாக, ஒற்றைப்பனை மரங்கள், அங்கொன்றும் இங்கொன்று மாக, வானத்தைச் சுட்டிக் காட்டுவது போல நின்றன. பள்ளிக்கூடத்துக்குத் தான் சிறுவனாகப் போகும் போது, வழியில் ஏறி விளையாடிய பாறைக் கூட்டங்கள்கூட வெடி மருந்தினால் பிளக்கப்பட்டு, கருநிறம் சாம்பல் நிறமாக மாறி, ஏன், சில தரை மட்டமாகத் தகர்ந்தும் இருந்தன. ஆனால் வீடுகள் மட்டும் அங்கொன்றும் இங்கொன்றுமாக எழும்பி யிருக்கின்றன. அநேகமாக ஒடு போட்ட வீடுகள்தான். 'மட்டுப் பாவு' போட்ட வீடுகளும் இருக்கத்தான் செய்கின் றன. மனிதர்கள் கூட்டம் பெருகிவிட்டதல்லவா? நாகரீக மும் வளர்ந்து கொண்டுதானிருக்கும். ஊர்ப் பள்ளிக்கூட மும் தன் ஓலை வேய்ந்த கூரையை மாற்றிவிட்டு, பனை புளி மரங்களினூடே சிவந்த ஓடுகளால் தகதகக்கிறது. ஆயிற்று ஆலயமும் வந்து விட்டது. அதைக் கண்டதும் செல்லப்பா வுக்கு என்னென்னவோ தோன்றுகிறது. அது அவருக்கு எப்போதுமே புரியாத புதிராகத்தான் இருந்திருக்கிறது. இப்போதுதான் ஒரு நாஸ்திகனாகவும், நாகரீகத்தின் உச்சியில் ஏறிவிட்டவனாகவும் இருந்தாலும், அது பிள்ளைப்பிராயத்து நினைவுகளுடன் பின்னிக்கிடந்து, மயிர்க்கூச் செறியச் செய் கிறது. அந்தச் சூழ்நிலையில், அந்த ஆலயம் ஒன்றுதான் பழையது பழையபடி இருந்தது இந்த, உணர்ச்சிக்குக் காரண மாக இருக்கலாம்.

ரோட்டிலிருந்து வலப்பக்கமாகத் திரும்பி வீட்டுக்குப் போகும் ஒற்றையடிப் பாதையைக் காணோம். மாறாக, தார் போட்ட சிறிய ரோடொன்று போகிறது. கார் வீடுவரை யிலும் போகும் போலிருக்கிறதே! போதாக்குறைக்கு, ரோட்டுத் திருப்பத்தில் சினிமா விளம்பரப்படங்கள். புரா ணக்கதை, சமூகக்கதை எல்லாந்தான். எல்லாம் கவர்ச்சிப் படங்கள். புராணக் கதை விளம்பரங்களில் ஆடை அலங் காரங்கள் ஓரளவு பூரணமாக இருக்கிறது ஒன்றுதான் வித்தி யாசம். சரிதான். கிராமம் மட்டும் கவர்ச்சிப் படத்துக்கு

எங்கே தப்பிவிடப் போகிறது? அது இதோ இந்தத் தார் ரோடு வழியாக இழைந்து போகிறது. சினிமாப்படங்கள் ஒட்டியிருக்கும் கம்பித்தூண்களிலிருந்து கொண்டு, நெளிந்து 'இதோ குதித்து விடுவேன்' என்று பயமுறுத்துகிறது. எங்கோ ஹோட்டலில், நகரத்தில் போலவே, இரைந்து கொண்டிருக்கிற ரேடியோவில் சீறுகிறது. யார்தான் இந்தக் காலத்தில் இதற்குத் தப்பப் போகிறார்கள்? தானும் தப்ப வில்லை. வசந்தாவும் தப்பவில்லை. குழந்தை மினியும்... செல்லப்பா ஒரு பெருமூச்சுடன், டிரைவரிடம் காரை நிறுத் தச் சொன்னார்.

"மினிம்மா, ஒரு நிமிஷம். நீ காரிலேயே இருந்துக்க" என்று மகளிடம் கூறிவிட்டு, மகளின் எதிர்க் கேள்விக்கு இடங்கொடாமல், டிரைவரைக் கைகாட்டிக்கூட அழைத்துச் சென்றார். இரண்டு மூன்றடி எடுத்துப் போட்டுவிட்டுத் திரும்பிப் பார்த்தபோது, மினி ஒரு புத்தகத்தைத் திறந்து, அதில் ஈடுபட்டிருப்பதைக் கண்டார். பொல்லாத குட்டி. எவ்வளவு முன் யோசனை அதற்கு? என்ன புத்தகமோ யார் கண்டார்கள்? டி. ஹெச். லாரன்ஸோ, ஏதோ? இது முழுக் கவர்ச்சி யுகமாச்சே!

இருவரும் வேகமாக, மௌனமாக நடந்து சென்றார்கள். டாக்டர் செல்லப்பாதான் முன்னால் நடந்தார். இதோ வீடு வந்து விட்டது. வீட்டில் மாற்றமில்லை. அன்று தனக்குக் கல்யாணம் என்ற சடங்கு நடந்த வேளையில் இருந் தது போல, தந்தையைச் சடலமாகக் கிடத்தியிருந்ததே, அப்போது இருந்த மாதிரி. ஆனால் அன்று அம்மை இருந் தாள், காதும் பாம்படமுமாக, இன்று...

வாசலில், அம்மை வழக்கமாகக் குந்தி இருக்கிற இடத் தில், ஒரு சிறுவன் நிக்கர் மட்டும் போட்டுக்கொண்டு, கையில் முழு மாம்பழம் ஒன்றை வைத்துக் கடித்துச் சுவைத்து ரசித் தவனாக, ஜாமென்று உட்கார்ந்திருந்தான். மலை புரண்டு வந்தாலும் அசையமாட்டான் போலிருந்தது. மார்பெல் லாம் மாம்பழச்சாறு வழிந்து கொண்டிருந்தது. குறுகுறு

வென்றதன் அழகிய கண்களால் செல்லப்பாவை அலட்சிய மாகப் பார்த்துவிட்டு, மீண்டும் மாம்பழ ரசனையில் ஆழ்ந்து விட்டான் அவன். இதே மாதிரிதான் தானும் சிறுவனாக இருந்தபோது...மெடிக்கல் காலேஜில், தானும் பொன்னையா வுமாகப் படித்துக் கொண்டிருந்த காலங்களில், மூக்கு வழிந்து கொண்டிருக்கும் ஒரு சிறுவனைக் காட்டி—அவன் இவன் மாதிரிதான் இருப்பான்— "டேய், இது போலத் தானே நீ முன்னால் இருந்தே, அசிங்கம்?" என்று பொன் னையா விளையாட்டாகக் கேட்டது நினைவுக்கு வருகிறது. இந்தச் சிறுவன் தன்னைப் போல்தானிருக்கிறான். சந்தேக மில்லை. அண்ணனுக்கு இப்படி ஒரு மகனும் இருக்கிறானா? வீட்டு விசேஷங்களெல்லாம் யார் எழுதுகிறார்கள்? வீட்டுக் குள்ளிருந்தும் ஒரு பச்சைக் குழந்தையின் அழகுரல் கேட் கிறது. அதை அமர்த்தும் பாவனையில் ஒரு பெண்குரல்— அண்ணியின் குரல்தான்—கேட்கிறது.

"அடிச்சாரைச் சொல்லியழு—என்னம்மா உன்னை
அடிச்ச கையை வெட்டி வாறேன்."

பழமையிலும் ஒரு புதுமை இருக்கிறது.

செல்லப்பா, தயங்கி, வெளியில் நின்றுகொண்டு, சுற்று முற்றும் பார்க்கிறார். எதிரே இருந்த பழம்பெரும் வீடு, அண்ணி பிறந்த வீடு, அதைக் காணோம். அங்கே பயறு பூவும் பிஞ்சுமாக மண்டிக் கிடக்கிறது இப்போது. அதன் இடையில் மணிப் புறுக்கள், தங்கள் அழகிய கழுத்தின்மேல் தலையை அசைத்து அசைத்து, நிமிர்ந்த நடை போடுகின்றன. அவைகளின் அரசுதான் அங்கே நடைபெறுகிறது.

எதிரே விரைவாக வந்து கொண்டிருந்த அண்ணனின் உருவத்தைக் கண்டு ஒருகணம் செல்லப்பாவுக்கு இதயம் வேகமாக அடிக்கத்தான் செய்தது. அதைச் சமாளித்துக் கொண்டார். அண்ணனின் நடையும் அவரைக் கண்டதும் நிதானப்படுகிறது. அண்ணன் நெற்றி வேர்வையைத்

துடைத்து விட்டுத் தொண்டையைக் கனைத்துக் கொள்கிறார்.

"ஏண்டா, நீயே வந்திற்றியா?"

அண்ணன் காதுகளுக்குமேல் நரை மயிர் நன்றாகத் தெரிகிறது. ஆனால், வழுக்கையில்லை, தன்னைப் போல.

"செய்தி அறிந்த பிறகும் வராமலிருக்க முடியுமாண்ணா?"

"………"

"நான் வருவெண்ணு எதிர்பார்க்கலியா ?"

"அடக்கமெல்லாந்தான் களிஞ்சு போச்சே ? எளுதியிருந்தனே !"

செல்லப்பா, தன் கரகரக்கும் தொண்டையைச் சரிப்படுத்திக் கொண்டார்.

"அம்மையை வச்ச இடத்தையாவது பார்க்கலாமே அண்ணா ? அப்பனுக்குப் பக்கத்தில்தானே ?"

"பின்னெ எங்கெ வைப்போம் ?"

வாசல் கதவு, இலேசாகக் காற்றில் அசைவதுபோல், திறந்தது. உள்ளேயிருந்து கேட்ட தாலாட்டு நின்றிருந்தது. குழந்தையின் அழுகுரல் மட்டும் தொடர்ந்தது. வாசலில் ஒரு நிழல் விழுகிறதாகச் செல்லப்பாவுக்கு ஒரு மயக்கம்.

"குழந்தை மினி வந்திருக்கிறாள். காரிலிருக்கிறாள்."

அண்ணன் அதைக் காதில் வாங்கிக் கொண்டதாகவே தெரியவில்லை. செல்லப்பாவின் முகத்திலிருந்த துக்க நெகிழ்ச்சி மாறி, கடுமையும் விறைப்பும் தெரிந்தன.

டிரைவரைப் பார்த்து, வழக்கமான அதிகாரக் குரலில், "காரிலிருந்து பூச்செண்டு, மாலை எல்லாம் எடுத்துக்கொண்டு வா" என்றார்.

"குழந்தை ?"

"அங்கேயே இருக்கட்டும்."

டிரைவர் விரைந்தான். அவன் திரும்பி வருமட்டும் தமையனும் தம்பியும் என்ன பேசுவதென்று தெரியாமல் நின்று கொண்டிருந்தார்கள். அண்ணனுக்காவது ஒரு சவுகரியமிருந்தது. வாசலில் உட்கார்ந்திருந்த, சிறுவன், தன்னைக் கண்டதும் எழுந்திருந்து தத்தித் தத்தி வரவே, அவனை அந்த மாம்பழச் சாறோடு வாரியெடுக்கவும், அவன் காதுகளில் ஏதோ இரகசியம் பேசவும் முடிந்தது. செல்லப்பா டிரைவர் போன திசையையே பார்த்தவராய் நின்றார்.

டிரைவரும் வந்து விட்டான், சுமக்க முடியாத சுமையோடு. அவனைப் பின்னால் வரும்படி கைகாட்டிக் கொண்டு முன்னே நடந்தார் செல்லப்பா. தந்தையின் கல்லறைக்கு நேராக தங்கராஜும் பின்தொடர்ந்தார்.

"எனக்கு வழி தெரியுமே அண்ணா?" என்றார் செல்லப்பா மிடுக்கான குரலில்.

தங்கராஜ் பதில் பேசவில்லை. ஆனால் மௌனமாகப் பின்தொடர்ந்தார். தோள்மேல் குறுகுறுத்த கண்களோடு அந்தச் சிறுவன். அவன் இன்னும் அந்த மாம்பழத்தை, இல்லை அதன் கொட்டையை, தன் கையால் இறுகப்பற்றிக் கொண்டிருந்தான். இடையிடையே செல்லப்பாவையும் கூச்சத்தோடு பார்த்துக் கொள்வான். செல்லப்பா அந்தக் கண்களால் இழுபடாதவாறு, தன்னைக் காப்பாற்றிக் கொண்டார்.

தாயின் கல்லறைக்கு அருகில் இரண்டு மக்களும் தலை வணங்கி மௌனமாக நின்றார்கள். தங்கராஜின் முகத்தில் சோர்வு மட்டுந்தான். தாயன்புக்குச் செலுத்த வேண்டிய காணிக்கையாகிய கண்ணீரை அவர் வேண்டிய மட்டும் கொடுத்தாயிற்று. செல்லப்பா, அழுதுகொண்டே, பூச்செண்டை வாங்கிக் கல்லறைமேல் வைத்தார். அவர் தாயின் மரணத்துக்கு மட்டுமா அழுதார்? அந்த இடத்தில்

அவர் அழவேண்டிய விஷயங்கள் எத்தனையோ. அழுது கொண்டே டிரைவரிடமிருந்த பூமாலையைக் கையில் வாங்கிக் கொண்டார். ஒரு நிமிஷம் தயங்கினுர். பிறகு, ஏதோ முடிவுக்கு வந்தவர்போல். அண்ணன் முகத்தை ஏறெடுத்தும் பார்க்காமல்,பக்கத்திலிருந்த ஒரு கல்லறைக்கு. சிறிய கல்லறைக்கு, நேராக நடந்துபோய் அதன்மேல் அந்தப் பூச்சுமையை வைத்தார். தங்கராஜ் மரம்போல் அசையாமல் நின்ருர். அவர் கையிலிருந்த சிறுவன் வலிந் திறங்கிப் போய், அந்த மாலையிலிருந்து ஒரு ரோஜாப்பூவை, கட்டியிருந்த சரிகை நூலோடு உருவியெடுத்துக் கொண்டு திரும்பினுன். தங்கராஜ் அவசரமாக அவனை வாரியெடுத்து, அந்தச் சிறிய கையில் முத்தமிட்டுப் பூவை வாங்கினுர். பிறகு குனிந்து, மெதுவாக, மிகவும் மெதுவாக, அந்தப் பூவை, அந்தக் கல்லறையின் மேலேயே வைத்துவிட்டார். அவரது பற்களுக்குள் கீழ் உதடு அடங்கியிருந்தது.

அண்ணனும் தம்பியுமாக வீட்டின் முன் வந்தபோது, வாசல் சாத்தியிருந்தது. செல்லப்பா விறைப்பாக நின்ருர். தங்கராஜ்தான் பேசினுர், உபசாரத்துக்காக:

''உள்ளே போகலாமே டேய்?'' அவர் முகத்தில் அசடு வழிந்தது.

''நான் வருகிறேன் அண்ணு. குழந்தை காரில் இருக் கிருள்.''

தங்கராஜின் முகத்தில் ஆசுவாசக் குறி தென்பட்டது. அவர் ஒன்றும் பேசவில்லை. செல்லப்பாதான் தொடர்ந் தார், உதட்டைக் கடித்துக்கொண்டு.

''நான் அதிகமாக ஆசைப்பட்டு விட்டேன் அண்ணு!''

''.........?''

''இல்லை, என்னைத்தான் சொல்லுகிறேன், திரும்பவும் இங்கெல்லாம் வரணுமென்று...''

''.........ம்.''

"நான் சொத்துக்கு ஒண்ணும் ஆசைப்பட்டு வரலே."

"அதெல்லாம் எனக்குத் தெரியும் டேய்."

"வரட்டுமா அண்ணு?" செல்லப்பாவின் இடதுகை, அவரை அறியாமலே, அவர் நெஞ்சை அழுத்திப் பிடித்தது.

தங்கராஜ் குழந்தையை உச்சி மோந்து, கீழே இறக்கி விட்டார்.

"நானும் தோ, அதுவரை வாறேன்," என்று தம்பியைப் பின் தொடர்ந்தார்.

டிரைவரும் அவர் நிழலைப் போலப் பின்னே சென்முன்.

ஒரு கூட்டம் அழுக்குப் படிந்த, கந்தலணிந்த, சிறுவர்கள்தான் காரைச் சூழ நின்றிருந்தார்கள். மினியும் புத்தகத்தைக் கீழே வைத்துவிட்டு, அவர்களைக் கவனித்தவாறு உட்கார்ந்திருந்தாள். எங்கே, காரில் ஏதாவது செய்து விடுவார்களோ என்ற பயம் அவளுக்கு. தந்தையைக் கண்டதும், "னோ மானர்ஸ் டாடி," என்று அவர்களைப் பற்றிக் குறை கூறியவள், தந்தையின் கூட நின்ற காட்டு மனிதனைக் கண்களால் ஆராயலானுள். தங்கராஜானுல், காரினுள் எட்டிப் பார்க்கவும் துணியவில்லை.

செல்லப்பா "னோ ஹாரம் டார்லிங்," என்றுஒரு சோர்ந்த புன்னகையோடு மகளுக்கு பதில் கூறிவிட்டு, காரில் ஏறத் தயங்கியவாறு நின்று கொண்டிருந்தார். அவர் பார்வை சுற்றி நின்ற சிறுவர்கள் மேல் விழுந்தது. ஒரு சிறுவனின் முகம் எங்கேயோ பார்த்தது போலிருந்தது.

"அவனு? அவன் ஆர் தெரியுமா?" என்று கேட்டார் தங்கராஜ்.

"...........?"

"தங்கையனுக்கு சின்னப்பய. மூத்தவன் இப்பிடி சின்னவனு இருந்தப்போ நீ பாத்திருக்யே, நெனைவிருக்கா?"

"...........ம்"

"அந்தப் பயதான் இப்ப நம்ம பனேயேறி. அப்பனெ போலீஸ்காரன், பள்ளியிலே கொண்டு வச்சிருக்யான்."

"............?"

"தெரியாதா ? தெண்டுக்கு முண்டு. நம்ம வைத்தியர் கிட்டெ சாமர்த்தியம் காட்டியிருக்யான். அவர் மாடு ஒண்ணு இவனுக்கும் இவன் கூட்டத்துக்கும் பலி. கள்ளுக் கும், நாக்குக்கும் குறைவில்லெ. பின்னெ அவர் தான் என்ன செய்வார்?"

".............."

"சில காரியங்களில் மடையனுங்கூட, கேளு, அந்தத் தந்தி நெனேவிருக்கா?"

"..............?"

"அவன் வேணுமிண்ணு செய்யேலெ. மூத்த பயலுக் கிட்டெ குடுத்தனுப்பியிருக்யான் அந்தப் பய புத்திதான் ஒனக்குத் தெரியுமே? நீ எளுதிக் குடுத்ததுண்டெ அதன் எங்கினெ போட்டானே! தங்கையன் அந்த விஷயத்தெ எங்கிட்டெ சொல்லப்பிடாதோ! அதுதான் சொல்லமாட் டான்."

"அதுக்கிப்ப என்ன?"

"அந்த மூத்த பயலுக்கிட்டெ பேச்சுக் குடுத்த பிறவு தான் ரகசியம் வெளிவந்துது. நல்லா அடிகுடுத்தானும் அப்பன், எங்கிட்டேயிருந்து சேதி தெரிஞ்ச பிறவு. வெளி யிலே மூச்சில்லே. நான் அந்தப் பயலுக்கு நம்ம பனேயேத் தைக் குடுத்திருக்யேன்."

"உம்ம சகலர் வருத்தப்படுவாரே?"

"அதெப் பாத்தா சரிப்படுமாடேய்? ஒரு குடும்பம் பட்டி னியாக்கிடக்கவா? அந்தப்பய பனேயேற வந்தானு, அப்பன் காரிய மெல்லாம் எங்கிட்டெ அளந்துக்கிட்டிருந்தான். நானும் சொன்னேன், நம்மெ அவன் விளேயாட்டுக் காட்டி னுண்ணு. பய எல்லாம் சொல்லிப் போட்டான். அவனுக்கு ஒளிச் சுவைக்கத் தெரிஞ்சாத் தானே? எப்படிக் கதை?"

“அது கதை தாண்ணு. அப்ப நான் வாறேன்'' என்று கார் கதவைத் திறந்து, இருக்கையில் உட்கார்ந்துகொண் டார். கார் கதவு படாரென்று அடைத்துக் கொண்டது.

“போயிட்டுவா. எல்லாம் ஆண்டவர் செயல்.'' தங்க ராஜின் தொண்டையில் ஒரு கரகரப்பு.

“ஓ, அப்படியும் ஒருத்தர் இருக்காரா? இருந்தாலும் நம்ம கிட்ட அவருக்கு சினேகமே இல்லெ. அவரை சிநேகம் செய்து கொள்ளவும் நமக்குத் தெரியலே'' என்று பாதி கோபமும் பாதி ஏளனமாகவும் கூறினர் செல்லப்பா. பிறகு தன் சகோதரனை, வியப்புடனும் அருவருப்புடனும் கவனித் துக் கொண்டிருந்த குழந்தை மினியின் பார்வையைத் திருப் பும்படி, தீர்க்கமான குரலில், ''ட்ரைவர்'' என்று கட்டளை கொடுத்தார்.

கார் ஒரு சிறு குலுக்கல், ஒரு சிறு உறுமல், இவை களோடு புறப்பட்டது.

செல்லப்பா குழந்தை மினிக்கு ஆசை தீர இடங்களை யெல்லாம் காட்டிக் கொடுத்தார். ஆனல் தன் ஊரைப் பற்றியும் உறவினர்களைப் பற்றியும், அவளை அங்கேயெல் லாம் அறிமுகப் படுத்தாதது பற்றியும், அவள் குறுக்குக் கேள்விகள் கேட்க மட்டும் இடமளிக்கவில்லை. பயமேயறி யாத அவள்கூட நடுங்கும்படியாக இருந்தது, அவர் பார்வை யும் பேச்சும்.

திருவனந்தபுரம் வழியாகக் கார் சென்றது. மிருகக் காட்சிசாலை யென்றும், மீன்காட்சி சாலை யென்றும், பார்ப் பதற்கு அங்கு நிறைய இருக்கத்தான் செய்தது.

கார் ஒரு பெட்ரோல் பம்பின் அருகாமையில் நின்று கொண்டிருந்தது, பெட்ரோல் அடைக்க. தந்தையும் மகளும் இறங்கி, ரோட்டின் இருபக்கமும் பூத்துக் குலுங்கி நின்ற மரங்களின் நிழலில் சற்றுக் காலாறும்படி நடந் தார்கள்.

ரோட்டோரத்தில், கடைக்காலில், வெறும் சன்னமான குரலில், ஏதோ குழந்தை முனகுவது போலக் கேட்டது. எட்டிப் பார்த்தபோது இரண்டு சிறிய நாய்க் குட்டிகள். நல்ல கரும் பட்டுப்போன்ற உடம்பு. காதுகள் அழகாக மடிந்திருக்கின்றன. கண்கூட இன்னும் திறக்கவில்லை. ஒன்றைவிட்டு ஒன்று அரை ஜாண் தூரத்தில் புரண்டு கொண்டிருந்தன. ஒன்றுக்கொன்று ஏதோ முறுமுறுத்துக் கொண்டும், எதையோ தேடி அழுதுகொண்டும் இருந்தன. வயிறு ஒட்டி உலர்ந்து போய்க்கிடந்தது. ஏதோ பெரிய வீட்டிலிருந்து வேண்டாத குழந்தைகளாக வெளியே எறியப் பட்டவைகளோ, அல்லது தன் வயிற்றையே நிரப்ப முடியாமல் அலைந்து திரியும் தெருநாயின் அநாதைப் பிள்ளைகளோ, தெரியாது.

மினி ஓடிப்போய் அவைகளைக் கையில் எடுத்திருப்பாள். செல்லப்பா தடுத்துவிட்டார். தேவைக்கதிகமான நாய் களும், குழந்தைகளும் தொந்தரவல்லவா?

ஆனாலும், கொஞ்சநேரம் அந்தச் சின்ன சகோதரர்களைப் பார்த்துக்கொண்டே நின்றார். ஒன்றைவிட்டால் ஒன்றுக்கு ஆதரவில்லாத நிலை. ஆனால் எப்படியோ ஒன்றைவிட்டு ஒன்று பிரிந்து கிடக்கிறது. முனகல் ஓய்ந்தபாடில்லை. எப்படியோ, ஒரு குட்டி, தட்டித் தடுமாறிக்கொண்டு, மற்றக் குட்டியின் மேல், புரண்டுபோய் விழுந்தது. முனகல் நின்று விட்டது. இரண்டும் ஒன்றின்மேல் ஒன்று, ஒரு நிமிஷம், புரண்டு அணைத்துப் படுத்தன. பிறகு அமைதி. திருப்தியடைந்த குழந்தைகளைப்போல, தூங்கிப்போய் விட்டன. ஒட்டிய வயிறு ஒட்டியபடியே இருந்தது.

செல்லப்பா, பெரு மூச்சோடு போய்க் காரில் ஏறிக் கொண்டார்.

''நிறைய ஐஸ் போட்டு ரண்டு டிரிங்க் கொண்வா'' என்றார் டிரைவரைப் பார்த்து. இதயவேதனை நெஞ்சுவலி தானோ என்று தோன்றிற்று.

# 9. கடைசி அத்தியாயம்

ஆமாம். அந்தக் கண்கள். அவைதான். சந்தேக மில்லை கண்ணீரில் மிதக்கின்றன. அன்பு நிறைந்த, கவலையும் அனுதாபமும் நிறைந்த, தன்னைத் தேற்றும் பாவனையில் தன்னையே இமைகொட்டாமல் விழித்துப் பார்க்கும் கண்கள். பேசமுடியாத பாஷையெல்லாம் அங்கே இருக்கிறது. ஆதுரம் இருக்கிறது. நம்பிக்கை, எதிர்பார்ப்பு, மனைவி யென்னும் உரிமை, எல்லாம் இருக்கிறது.

ஆனால்—

அதே கண்களில் ஏன் இப்படிக் கடுமை ஏறவேண்டும்? வெறுப்பு, கோபம், கசப்பு; அன்னியனைப் பார்ப்பது போல.

டேவிட்டுக்கு நாரதர் வேலை வேண்டாமாயிருந்தது. தன்னையும் வசந்தாவையும் இணைத்து, அந்த ஜார்ஜிடம் போய் ஊதுவதற்கு, அவனைச் சொல்லி அனுப்பினது யார்?

அதுவும் நல்லதாய்ப் போயிற்று. இல்லாவிட்டால் அவள்......அவள்......மாஜிஸ்திரேட்டின் கேள்விக்கு, "ஆம், நான். இந்த பந்தத்திலிருந்து விடுபட, மனப்பூர்வமாக விரும்புகிறேன்" என்று அத்தனைக் கடுமையாகச் சொல்லி யிருப்பாளா? வசந்தாவையுந்தான் சட்டபூர்வமாகக் கைப் பிடிக்க முடிந்திருக்குமா?

அவள்...அவள்...இப்போது என்ன நினைத்துக்கொண் டிருக்கிறாளோ? எங்கேயாவது டீச்சராக இருப்பாள், விதவைத் தாயுடன் சண்டை போட்டுக்கொண்டிருப்பாள். நன்றாக வேண்டும். அகம்பாவம் பிடித்த ஜென்மங்கள்!

தான் இப்படி வேதனையில் துடித்துக்கொண்டிருப்பதை அவள் அறிந்தால் வருத்தப் படுவாளா?

அவள் யார்? தான் யார்? அவள் எப்படி இருந்தால் தனக்கென்ன? எப்படி எப்படியெல்லாமோ இருப்பாள். யார் யாரிடமோ பல்லை இளித்துக்கொண்டு சந்தோஷமாக இருப்பாள். அவள் தன்னை மறக்கவேண்டியவளாயிற்றே!

தானும் மறந்து விடவில்லையா?

உண்மையாக மறந்துவிட்டானா?

தன் பிள்ளைப் பிராயத்துப் பூ நினைவுகளையெல்லாம் அவள் கொண்டு போயே விட்டாள்.

உறவு, கடமை எல்லாவற்றையும் கொண்டுபோய் விட்டாள்.

மிஞ்சினது தான் என்ன?

ஏன் மிஞ்சவில்லை? ஒரு அகம்பாவம் பிடித்த பெண்ணின் தயவிலா வாழ்க்கை இருக்கிறது?

எத்தனை இலேசாகப் பிரிவுக்குச் சம்மதித்து விட்டாள்?

பெண்ணாவது, மென்மையாவது!

தானும் என்னதான் நஷ்டப்பட்டு விட்டானாம்?

இந்த நெஞ்சுவலி எங்கே திரும்பிவிடப் போகிறதோ என்று பயமாயிருக்கிறது.

எப்படித்தான் ஆஸ்பத்திரி வரைக்கும் தாக்குப் பிடிக்குமோ என்றுதான் அப்போது தோன்றிற்று.

குழந்தை மினி பதறிப் போய்விட்டாள்.

பாவம், குழந்தை.

இனி என்னவெல்லாம் காணப்போகிறாளோ?

நல்ல வேளை. வலி தெரியாமலிருக்க இஞ்ஜக்ஷன் செய்து விட்டார்கள்.

அந்த அளவுக்கு விஞ்ஞானத்தை மெச்சத்தான் வேண்டும்.

வசந்தாவுக்குத் தந்தி அனுப்பியிருப்பார்கள்.

வராமல் இருந்துவிடுவாளா என்ன?

அவளுந்தான் எத்தனை இனிமையாக வீணை வாசிக்கிருள்!

சங்கீதம் இன்பம், இன்பம்; இன்பலாகிரி.

அவளுக்கு வரும் பாராட்டுக் கடிதங்கள் தான் எத்தனை? பொன்னையா கூட அனுப்பியிருந்தானுமே!

கடிதம் வேறேயா?

சங்கீதம் லாகிரிதான்.

கமலாவும் அப்படித்தான் வாசிப்பாள். இல்லை, அதை விட நன்ருகத்தான், அழகிலோ!

பெண்களின் புன்னகை மோகனமானதுதான்.

குழந்தை மினி இந்த உலகில் பிறந்திருக்க வேண்டாம்.

பூவைப் பறித்துச் சேற்றில் அல்லவா போட வேண்டியிருக்கிறது.

வேண்டாம்; இந்த உலகத்துக்குக் குழந்தைகள் வேண்டவே வேண்டாம்.

மாம்பழத்தைச் சுவைத்துக் கொண்டு, எத்தனை சந்தோஷமாக, சொர்க்கத்தில் தன்னை மறந்தவனுக, வாசற்படியில் உட்கார்ந்திருக்கிருன் சிறுவன்!

அவன் கண்களும் அவனும்!

தன்னைப் போல.

மவுத் ஆர்கனை நினைக்கும்போது சிரிப்பாக இருக்கிறது.

வெட்கமாகக் கூட இருக்கிறது.

வசந்தத்தின் வீணை மேதையோடு இணைத்துப் பார்க்கும் போது.

இசைநாதம் உருகியோட வாசிக்கிறான்.

இசைநாதம், இன்ப லாகிரி.

பாராட்டுக் கடிதங்கள்தானே என்னவோ யார் கண்டது?

ஆமாம், புகழில் மயங்காத பெண்மணிதான் யார்?

பெண்களைச் சொல்வி என்ன? தான்மட்டும் தப்பி விட்டானா?

கல்கத்தாவில் டாக்டர்மார் கான்பரன்ஸில் தான் வாசித்த பேப்பரை அமெரிக்க டாக்டர்கள் மெச்சிக் கொண்டாடியபோது, தனக்கு, டாக்டர் செல்லப்பாவுக்கு எப்படி இருந்தது?

அவன், அந்தப் பொன்னையாவுக்கு எதிரில்!

டேவிட்டின் முன்னிலையில்.

லேடி டாக்டர்கள் சன்னிதியில்.

எங்கும் இந்த நோய்தான்.

கவர்ச்சி, கவர்ச்சி, கவர்ச்சி.

யார் யாரைக் கவர்வது?

எதற்குக் கவர்வது?

கடைசியில் கிரிஷாத் கஷாயம்—அம்மையின் மருந்து—குடித்தது போலாகி விடுகிறது.

வசந்தத்துக்கு எவ்வளவு அழகாகச் சிரிக்கத் தெரியும்!

யாரிடம் சிரித்தால் என்ன? அழகு அழகுதானே?

தனக்கு என்ன போலீஸ் உத்தியோகமா? பின்னால் நடக்க?

மினிம்மா!

மினி டார்லிங்!

னோ ஹோப் டார்லிங். நான் சாகத்தான் வேண்டும்.

மினி பாவம்!

கவர்ச்சி யுகத்தின் கனி! ஐயோ, இல்லை, வித்து!

டி. ஹெச். லாரன்ஸ் நாசமாய்ப் போக.

குழந்தை எத்தனை அழகாக இங்கிலீஷ் பேசுகிறாள்!

நாற்பத்திரண்டு வயசாகியும் தனக்கு அந்த 'ஆக்ஸென்ட்' வரமாட்டேன் என்கிறதே!

தனது 'ஆற்' எல்லாம் கரகரக்கிறது.

பொன்னையாவுக்கு அப்படியில்லை. தன்னை மட்டந்தட்ட வென்று புறப்பட்டதுபோலிருந்ததே, கான்பிரன்ஸில்?

சங்கீத ஞானத்தில் அவன் தன்னைவிட மிஞ்சிவிடலாம். குழந்தை வைத்தியத்திலுமா?

நான்!

டாக்டர் செல்லப்பா!

என் பெயர் மருத்துவ ஏடுகளில் பொன்னில் பொறிக்கப் பட வேண்டும். நான் இன்னும் பத்து வருஷம் உயிரோடிருந்தால்.

ஸர்ஜரியில்கூட பட்டம் பெறவேண்டும்.

அதற்கான கை எனக்குண்டு.

பத்து வருஷம் என்ன, பத்து நாட்கள் இருப்பேனா?

அவன்கள் சொல்லுவான்கள்: "டாக்டர், திஸ் இஸ் நதிங். ஒரு சிறிய துவாரம். அதை அடக்க வேண்டும், பிளாஸ்டிக் கொண்டு" என்று.

ஹி...ஹி...ஹி!

டாக்டர் செல்லப்பாவுக்கு பிளாஸ்டிக் இருதயம்!

ஹி...ஹி...ஹி!

நான்!

டாக்டர் செல்லப்பா!

என்னைவிடப் பெரியவன்களா இந்தக் குட்டி டாக்டர்கள்?

நான், ஹார்ட் ஆபரேஷன் என்றால் என்ன என்று அறிவேன். என்னை ஏமாற்றப் பார்க்கிறார்கள்!

இவன்களுக்கெல்லாம் டாக்டர் என்று பெயர்!

கல்கத்தா கான்பரன்ஸில் தனக்கு முழுவெற்றிதான்.

அந்த, அந்தப் பொன்னையாவின் மேல்கூட.

சௌந்தர்யம் லாகிரி; இல்லை, அதைவிட சௌந்தர்யத்தைக் கவர்ச்சியாக எடுத்துக் காட்டுகிறது, லாகிரி.

பூச்சரமும் கண்—மையும்!

கடைக்கண் பார்வையும்!

இனிமையை வீணையிலிருந்தெழுப்பும் மெல்லிய விரல்களும்!

அவள், வசந்தம்—அன்று அவள் தந்தை வீட்டிலில்லை—என்னை அழைத்து வீணை கேட்க அருகில் அமர்த்தியபோது...

வீணையா வாசித்தாள்?

அழகின் பெருமிதம் முகத்தில் மின்னிட, தோளிலிருந்து நழுவின நைலான் ஸாரித் தலைப்பை, சாவதானமாக, அவள் திருப்பி எடுத்துப் போட்டுக் கொண்டபோது...

இப்போது நினைத்தாலும் இதயம் படபடக்கிறது. தலை கிறங்குகிறது.

அந்தப் பொன்னையா செத்தானே, அவன் பெண்சாதி தலையைச் சுவரில் அடித்து மோதிக் கொண்டாளாம்.

அவனுக்குப் போய் அப்படி ஒரு அழுகை!

பெண்சாதி! பெண்சாதி!

அம்மையின் ஸ்தானத்தில் மாறாத அன்புள்ளவளாக வருகிறவளாமே பெண்சாதி!

யார் அப்படிச் சொன்னது?

இருதய வேதனையைக் கண்டு ஆனாலும் இப்படிப் பயப் பட வேண்டாம், அதற்குத்தான் இஞ்ஜக்ஷன் செய்திருக் கிறுன்களே!

சிஸ்டர் சாந்தா அழகுச் சிரிப்புச் சிரித்துக் கொண்டு தான் இஞ்சக்ஷன் கொடுத்தாள்.

குத்தின வேகம் தெரிய வேண்டுமே!

அந்தக் கரங்களில் மென்மை!

நான்!

டாக்டர் செல்லப்பா!

கம்பீர புருஷன்!

அப்படிச் சொன்னது யார்?

அவன் தான், அவன். அந்தப் பொன்னையா.

"டேய், நீ இவனைப் போலத்தானே இருந்தே, அசிங்கம்?"

அதுவும் அவன் தான்.

நடப்பாவது, மண்ணுவது!

கோமாவில் கிடந்தான் அவன். ரெஸ்பிரேஷன் நன் ருக இல்லை என்று நான் கண்டது உண்மைதான்.

வார்டு டாக்டர் கவனித்துக் கொள்ளட்டுமே என்று விட்டு விட்டேன்.

அவ்வளவுதான்.

ஆமாம், அதற்கு நான் பொறுப்பாளியா?

பொன்னையாவை நான் ஒன்றும் செய்யவில்லை,

அந்தச் சிடுமூஞ்சி சிஸ்டர் என் பெயரில் பழியைக் கட்டிவிடப் பார்த்தாளே பழிகாரி!

பொன்னையாவை நான் முதலில் சந்தித்தபோது, பல்லெல்லாம் பளிச்சிட, கறுகறுவென்று...

அவன் பேச்சும் அவனும்!

அதை இப்போது நினைத்து என்ன ஆகப் போகிறது!

அவன் பெண்சாதி அழுத அழுகையாம்!

இவள், இவள் எத்தனை இலேசாகப் பிரிவதற்குச் சம்மதித்து விட்டாள்!

அந்தக் கண்களின் கடுமை!

இவள் எக்கேடு கெட்டுப் போனால் எனக்கென்ன?

மினி பிறந்திருக்க வேண்டாம்.

குழந்தைகளும் நாய்க் குட்டிகளும்.

யாருக்கு வேண்டும் இந்த உலகத்தில்?

எப்படித்தான் வேண்டாமென்று ஒதுக்கி வைத்தாலும் வந்து குதித்து விடுகிறதுகள்.

வசந்தத்துக்கு நான் குறையொன்றும் வைக்கவில்லை.

என் வீடு ஒரு லட்சம் பெறாதா? அவளுக்கும் அதுதானே வேண்டும்?

இன்ஷூரன்ஸ் இருக்கிறது மினிக்கு.

பணமெல்லாம் தாராளமாகத்தான் சம்பாதித்திருக்கிறேன்.

ஏன், தாராளமாகத்தான் கொடுக்கிறார்கள். நான் என்ன செய்ய?

இல்லாதவர்களைத் திரும்பிப் பார்க்கலாமென்றால், சமயம் எங்கே கிடைக்கிறது?

இல்லை, நான் அவனை — பொன்னையாவை — ஒன்றும் செய்யவில்லை.

கண்களைத் திறக்க முடியாத அசதியாய் இருக்கிறதே!

'தியேற்றரு'க்கு எப்போது எடுப்பார்களோ?

தனக்காக யாரும் முட்டி முட்டி அழமாட்டார்கள்.

வசந்தம் வந்து சேருவாளோ, என்னவோ?

மினிம்மா எங்கே இருக்கிறுளோ?

பயற்றம் பூவும், மணிப்புருக்களும்.

எனக்கு அங்கே என்ன வேலே?

பனேகளே ஏன் இப்படி வெட்டி முறித்திருக்கிருன்கள்?

நான் பனேயேறிப் பிழைத்திருக்கலாம்.

கதவு அடைத்துக் கிடக்கிறது, கதவு.

நான் அதிகம் ஆசைப்பட்டுவிட்டேன் அண்ணு!

இல்லே, நான் அவனே, என் உயிர்த் தோழனே, ஒன்றும் செய்யவில்லே.

"டேய், நீ இவனேப் போலத்தானே இருந்தே, அசிங்கம்"

அப்படி யார் சொன்னது?

கண்களேத் திறக்க முடியவில்லே.

அசதி, அசதி, அசதி.

நான் திருவனந்தபுரத்தில் செத்துப் போனுல் என்ன. வேண்டாம், அண்ணனுக்குத் தந்தி கொடுக்கவேண்டாம்.

அப்பன். எதற்கு அப்பா, என்னே இப்படிப் பார்க்க வேண்டும்?

அப்பன் பயப்பட வேண்டாம். 'தியேற்றரு'க்கு நான் கூட வருகிறேன். டாக்டர் செல்லப்பாவாகப் போகிற நான்.

அப்பன் 'ஆண்டவா' என்று எத்தனே தடவை சொல் லியிருப்பீர்?

அப்பா, நான் யாரைப்போய் ஆண்டவா என்று நினேப் பது? எந்தத் தெய்வத்தைப் போய் அழைப்பது?

யார் தெய்வம்?

என் பொம்மிக் குட்டியைக் கைவிட்ட தெய்வமா?

எனக்குத் தெய்வம் இல்லை அண்ணு! நானே கொன்று விட்டேன்.

ஹி ஹி ஹி ஹி!

நானே தெய்வத்தைக் கொன்று விட்டேன்.

இனி யாரைப்போய் அழைக்க?

தோ, பழிகாரி! அவள் கண்களைப் பாருங்கள். நானே உனக்கு வேண்டாமென்றால் பிறகு இந்தக் கோபம் எதற்கு நீலி!

மன்னிக்க மாட்டேன்! அவளை நான் மன்னிக்க முடியாது.

எனக்குப் பிச்சை போட்டுப் படிப்பிக்க முன் வந்தாளா!

என் சுய கௌரவத்தைப் பறித்துக்கொண்டு விட்டாள்.

என் எல்லாவற்றையும் பறித்துக்கொண்டாள்.

அண்ணி எதற்குப்போய் அப்படி முட்டி முட்டி அழ வேண்டும்?

வேண்டாமென்றால் போகிறாள், காதகி! விட்டுத் தள்ளுங்கள் அண்ணி, விட்டுத் தள்ளுங்கள்.

எந்தப் பாட்டன் புத்தகமோ அது? அடுக்களைக்குமுன் கூட அப்படிப் பாழாய்ப்போன படிப்பு.

பத்தாம் பசலி. அவ்வளவுதான். அண்ணி நீங்கள்.

வீணை கேட்கிறது, வீணை.

கமலாதான் அப்படி வாசிக்க முடியும். ஆனால் கான் ஃபரன்ஸிலா வாசிக்கிறாள்?

தியேற்றருக்கு என்னைக் கொண்டு போய்க் கிடத்து வார்கள்.

சாகவேண்டுமானால் யார் மடியில் கிடந்து ஜீவனை விடுவது?

வேண்டாம், அந்த இரும்பு மேசைமேல் வேண்டாம்.

இவன்கள், ரபர் உறையும் ஏப்ரனும் போட்டுக்கொண்டு மூக்கைக் காட்டிக் கொண்டு, யமதூதர்கள் போல—

பிசாசுகள் போல

எந்திரங்கள் போல—

நான் இவ்வன்களுக்கு நடுவில், இரும்பு மேசைமேல்.

அந்த 'லைட்'டுகள்!

நெருப்புக் கண்கள்!

இவன்களுக்கு வியர்த்துக் கொட்டும்.

ஸிஸ்டர்மாருக்கு வியர்த்துக் கொட்டும்.

ஆட்டை அறுப்பது போல—

நான் ஒன்றும் அறிய மாட்டேன்.

ஆனால் யாரைப் பார்ப்பது இப்போது?

யாரை அழைப்பது?

நான்...அவனை...ஒன்றும் செய்யவில்லை!

நீ போ. நீயும் உன் எரியும் கண்களும். பெண் பேய் தான் நீ. எனக்குத் தெரியும். இல்லாவிட்டால் உன் கண்கள் மட்டும் இங்கு வருமா என்ன?

(முற்றும்)